கடிதம் சிறியதாய் மிகவும் சகஜமாயதுதான் எழுதப் பட்டிருந்தது. ஆனால் அன்பும் ஆதரவும் ஒவ்வொரு வார்த்தையிலும் பதிந்திருந்தன. கடிதத்தைப் பன்முறை படித்தான். விநோதினியின் உண்மையான உள்ளக் கருத்தை அவனால் சரியாய் அறியமுடியவில்லை. 'நான் அவளை நேசிக்கவில்லை யென்று சொல்லி அவளை அநியாயமாய் அநாதரவு செய்தேன். அந்த விசனத்தாலும் கோபத்தாலும் அவள் என்னை வெறுத்துத் தன் மனத்தை வேறு பக்கம் திருப்ப முயன்று கொண்டிருக்கிறாள்' என்று நினைத்தான் மஹேந்திரன்.

என்ன முயன்றும் அவனால் தன் மனத்தைத் திடப் படுத்திக்கொள்ள முடியவில்லை. தன்னை நாடிவந்த பெண்ணைத் தான் காலால் உதைத்துத் தள்ளிய மூர்க்கத்தனத்தை நினைத்து மனம் நொந்தான்.

'விநோதினி என்னை நேசித்தாளானால் அதனால் அவளுக்கும் நன்மையே. ஏனெனில் ஆசாவை மனமாரக் காதலிக்கும் நான் விநோதினியிடம் முறை தவறி நடந்து கொள்ளமாட்டேன். என் மனம் என் வசத்தில் இருக்கிறது. அப்படியின்றிப் பிறரொருவரால் அவள் உள்ளம் கவரப்படுமாயின் ஸர்வநாசந்தான் ஏற்படும்' என்று எண்ணினான். தன் திடசித்தத்தில் மிக நம்பிக்கை கொண்டு அவளைத் தன்பால் வசீகரித்துக்கொள்ள நிச்சயித்தான்.

வாயிற்படியண்டையே அவள் யாருடையவரவையோ எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தாள். பொறாமையும் துவேஷமும் மஹேந்திரனின் மனத்தைத் தகித்தன. "வீணில் ஏன் காத்திருக்கிறாய்? அவன் வரப்போவதில்லை.

இதோ உனது கடிதமும் திரும்பி வந்துவிட்டது!" என்று கடிதத்தைக் கொடுத்தான்.

விநோ: இதைத் திறந்தது யார்?

மஹேந்திரன் பதிலொன்றும் பேசாது போய்விட்டான். விஹாரி கடிதத்தைப் பார்த்துவிட்டுத்தான் பதிலொன்றும் கொடாது திருப்பியனுப்பிவிட்டதாக விநோதினி நினைத்தாள். மனமெரிந்தாள். கடிதத்தைக் கொண்டு போன வேலைக்காரனைக் கூப்பிட்டாள். அவன் வேறு வேலையாய் வெளியேபோயிருந்தான்; வீட்டில் இல்லை. இது வேறு எரியும் கொள்ளியை ஏறத் தள்ளியதுபோல் ஆயிற்று. தனது அறையில் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டாள். அக்கடிதத்தைத் துண்டு துண்டாய்க் கிழித்தெறிந்தாள். ஆனாலும் மனம் சாந்தியடையவில்லை. தேனீ, கோபங்கொண்டிருக்கும்போது யார் தன்னெதிரில் வந்தாலும் கொட்டிவிடுகிறது. அதேபோல் அவளுடைய கோபம் மஹேந்திரன் மீது திரும்பிற்று. தனது கோபாக்கினியால் அவனுடைய சுகம் சாந்தி யாவற்றையும் அடியோடு சுட்டு அழித்து விடுவதென்று தீர்மானித்தாள். 'நான் எதைச் செய்ய நினைத்தாலும் அது நிறைவேறுவதில்லை. வெற்றி பெறுவதுமில்லை. நான் மட்டும் எதிலும் சுகம் அடையாதிருக்க என் வாழ்வையே கெடுத்த இவன் மாத்திரம் சுகமடைவானேன்? இவனுடையவாழ்வையும் கெடுத்து இனி என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்வதுதான் எனது முக்கிய நோக்கம்; எனது கடமை' என்று அவள் சங்கல்பம் செய்துகொண்டாள்.

# இருபத்துநான்காம் அத்தியாயம்

சாயங்கால வேளை. காற்று ஜில்லென வீசி மனத்தைப் பரவசப் படுத்தியது. ஆசா மாடித் தாழ்வாரத்தில் உட்கார்ந்து மாதப் பத்திரிகை யொன்றைப் படித்துக் கொண்டிருந்தாள். அதிலுள்ள சிறுகதை ஒன்று அவள் மனத்தைக் கவர்ந்தது. அதில் கதாநாயகன் வெகுநாட்கள் கழித்து ரஜா பெற்றுத் தூர தேசத்திலிருந்து தன் வீடு திரும்புகிறான். வழியில் கள்வர் வழிமறித்து அவனைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள். இந்த இடத்தில் ஆசாவின் தேகம் பதறியது. கதாநாயகி அதே சமயத்தில் நித்திரையில் கெட்ட கனவொன்று கண்டு திடுக்கிட்டு விழித்துக்கொண்டு கனவின் பலனை நினைத்து அழுகிறாள். இந்தக் கட்டத்தில் ஆசா தானும் அழலானாள். ஆசாவுக்குக் கதையெல்லாம் உண்மையாகவே தோற்றும். கதாபாத்திரங்களின் சுகதுக்கங்களைத் தானும் பகிர்ந்துகொள்வாள். அவள் அடிக்கடி தான் படித்தவற்றை விநோதினியிடம் கொடுத்து, "இந்தக் கதையை நீயும் படி. எவ்வளவு நன்றாயிருக்கிறது பார்! இதைப் படிக்கும்போது என்னால் அழாமல் இருக்க முடியவில்லை" என்பாள். ஆனால் விநோதினி ஆசாவைப் போன்றவளல்ல. நன்மை தீமை தெரிந்த உலக அநுபவம்படைத்த ஸ்திரீ. அவள் கதையிலுள்ள குற்றங் குறைகளை எடுத்துக் காட்டுவாள். அதைக் கேட்டதும் ஆசாவின் உற்சாகம் உணர்ச்சி யாவும் சிதறிவிடும்.

இன்று இக்கதையைத் தன் கணவனிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லவேண்டுமென்று ஆசா எண்ணிக்கொண் டிருக்கையிலேயே அவனும் வந்து சேர்ந்தான். அவள் பதியைக் கண்டதும் ஆவலுடன் எழுந்தாள். அவன் தனது மனோவேதனையை மறைக்கவெண்ணிச் சிரிக்க முயன்று கொண்டே, "தனியாய் இங்கே உட்கார்ந்து எந்தப் பாக்கியவானைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக் கிறாய்?" என்றான்.

ஆசாவுக்குக் கதாநாயகன் நாயகியின் நினைவுமுற்றி லும் மறந்துபோயிற்று. அவள், "உங்களுக்கு உடம்பு சுகமில்லையா என்ன?" என்று கவலையுடன் வினவினாள்.

மஹேந்: உடம்பு ஒன்றுமில்லை.

ஆசா: ஏதோ உள்ளூறக் கவலையால் பிடிக்கப்படு வது நன்றாகத் தெரிகிறது. விஷயமென்ன?

அங்கே தட்டிலிருந்த வெற்றிலையை எடுத்துப் போட்டு மென்றுகொண்டே மஹேந்திரன், "பாவம்! பெரியம்மா உன்னைப் பார்த்து எவ்வளவு நாளாயிற்று? திடீரென்று ஒருநாள் நீ அவள் முன் போய் நின்றால் அவள் எவ்வளவு ஆச்சரியமும் ஆனந்தமும் அடைவாளென்று தான் யோசித்துக்கொண்டிருக்கிறேன்" என்றான்.

ஆசா பதிலொன்றும் சொல்லாது கணவனையே உற்று நோக்கினாள். இன்று மறுபடியும் இவ்வெண்ணம் எழக் காரணமென்னவென்று அவளுக்குப் புரியவில்லை.

பதிலொன்றும்சொல்லாமல் அவள் தன்னையே கூர்ந்து நோக்கியதைக் கண்ட மஹேந்திரன், "ஏன், போக இஷ்ட மில்லையா?" என்று கேட்டான்.

ஆசா அதற்கு என்ன பதிலளிப்பதென்று தெரியாது தயங்கினாள். அன்னபூரணியைப் பார்க்கவும் இச்சை; கணவனை விட்டுப் பிரியவும் இஷ்டமில்லை. அவளுக்கு உபய சங்கடமாயிருந்தது. சற்று யோசித்துப் பிறகு, "காலேஜ் லீவு விட்டதும் உங்களுக்கு ஒழிவு இருக்கும். உங்களுடன் கூடவே நானும் காசிக்கு வருகிறேன்" என்றாள்.

மஹேந்: அப்பொழுதும் என்னால் வரமுடியாது. பரீக்ஷை சமீபித்து விடுகிறது. லீவில் வீட்டிலேயே இருந்து நன்றாய்ப் படிக்கவேண்டும்.

ஆசா: அப்படியானால் இப்பொழுது வேண்டாம். பிறகு பார்த்துக்கொள்ளுவோமே.

மஹேந்: பிறகு என்ன? போக விருப்பமுண்டானால் இப்பொழுதே ஏன் போகக்கூடாது?

ஆசா: எனக்குப்போகக் கொஞ்சமும் விருப்பமில்லை.

மஹேந்: அன்று இஷ்டமிருந்தது. இன்று ஒரேயடியாய் இஷ்டமில்லையா? என்ன ஆச்சரியம்!

மறுபடியும் ஆசா மௌனம் சாதித்தாள். அவளால் பதில் சொல்ல முடியவில்லை. மஹேந்திரன் அவளை எப்படியாவது அனுப்பிவிட்டு விநோதினியுடன் மறுபடியும் சிநேகம் ஏற்படுத்திக்கொள்ளவேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தான். ஆசாவின் மௌனம் அவனுக்குக் கோபத்தை உண்டாக்கியது. அகாரணமாய் அவளைச் சினந்துகொண்டு, "ஏன்? என்மேல் ஏதாகிலும் சந்தேகமோ? எனக்குக் காவலாக இங்கேயே இருக்க விரும்புகிறாயோ?" என்றான்.

ஆசாவின் ஸங்கோசம், தாழ்மை இவை யாவும் இச்சமயம் மஹேந்திரனுக்கு உசிதமின்றிக் காணப்பட்டன. "சித்தியைக் காண இச்சையிருந்தால் போகிறேன் அல்

லது இல்லையென்று சொன்னாலென்ன? ஒருமுறை சரி, ஒருமுறை இல்லை, இன்னொரு முறை பதிலேயில்லை! இது என்ன சஞ்சலபுத்தி?" என்று மனைவியை உள்ளூறக்கடிந்து கொண்டான்.

திடீரென்று அவன் கோபங் கொண்டதைக் கண்டு ஆசா திகைப்பும் பயமும் அடைந்தாள். அவளுக்கு ஒரு பதிலும் சொல்லத் தோன்றவில்லை. அபாரப் பிரியமும் அபார கோபமும் மாறி மாறி அவன் அடையக் காரணம் ஒன்றும் அவளுக்குப் புலனாகவில்லை. கணவனைச் சந்தேகிப்பது என்னும் சொல் கர்ண கடூரமாயிருந்தது. இது என்ன வேடிக்கையா, வினையா? இதற்கு உசிதமான பதில் என்ன வென்று அப்பேதையால் அறியமுடியவில்லை.

ஆசாவின் மௌனத்தை மஹேந்திரனால் பொறுக்க முடியவில்லை. அவன் சரேலென்று வெளியே சென்றுவிட்டான். ஆசாவின் கதாநாயகன் நாயகியெல்லாம் ஒருநொடியில் அவள் மனத்திலிருந்து அந்தர்த்தானமாயினர். சூரியன் மேற்கில் மறைந்தான். உல்லாசமான குளிர்ந்த காற்று வீசியது. ஆனால் ஆசா அங்கேயே வெகுநேரம்வரை விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தாள்.

இரவு வெகுநேரமாயிற்று. அறையில் போய்ப் பார்த்தால் மஹேந்திரன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். 'என்மேல் தன் உயிரையே வைத்து வளர்த்த சித்திகூட நான் இவ்வளவு பராமுகமாக இருப்பது என் புருஷருக்குப் பிடிக்கவில்லை. அவர் செய்தது சரியே. என் மேல்தான் தவறு. கல்நெஞ்சுடையவர்களைக் கண்டால் யாருக்குத் தான் பிடிக்கும்?' என்று ஆசா தன்னையே நொந்துகொண்டு தன் புருஷனிடம் மன்னிப்பைப் பெற

வேண்டி அவன் இரு பாதங்களையும் இறுகப் பிடித்துக் கொண்டு தன் கண்ணீரால் அவற்றைப் புனிதமாக்கினாள்.

மஹேந்திரன் திடுக்கிட்டான். அவன் மனம் கரைந்தது. வாரி எடுத்து அவளை முத்தமிட முயன்றான். ஆனால் அவன் முதலில் தன்னை மன்னித்து விட்டதாகச் சொன்னாலொழிய அவள் காலை விடுவதாயில்லை.

மஹேந்: ஆசா! நான் உன்னை மன்னிப்பதற்கு நீ என்ன குற்றம் செய்தாய்? கண்ணே, நான் மஹா பாவி; நீசன். காரணமின்றி உன்னைத் துன்புறுத்துகிறேன்.

தன் காலை விடுவித்துக்கொண்டு அவளைத் தன் மடியில் படுக்கவைத்துக்கொண்டான். மனம் சற்றுச் சாந்தமடைந்ததும் ஆசா, "என் சித்தியைக் காண எனக்கு ஆசையில்லையா? ஆனால் உங்களை விட்டுப் பிரிவதுதான் எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. தயை செய்து இதற்காக என்னைக் கோபிக்கவேண்டாம்" என்றாள். மஹேந்திரன் அவளுடைய கண்களைத் துடைத்துக்கொண்டே, "ஆசா, கணவனை விட்டுப் பிரிய மனமில்லை யென்பதற்காக எந்த மூடனாவது கோபித்துக்கொள்வானா? நீ எங்கும் போக வேண்டாம்" என்றான்.

ஆசா: இல்லை. நான் காசிக்குப் போகத்தான் வேண்டும்.

மஹேந்: ஏன்?

ஆசா: உங்கள் மேல் சந்தேகப்படுவதாக நீங்கள் நினைத்திருப்பதைப் பொய்யாக்குவதற்காகவாவது நான் காசிக்குச் சில தினங்களேனும் போய்விட்டு வரவேண்டும்.

மஹேந்: நான் எவ்வளவு அதமன், நீசனென்பதை நீ அறியமாட்டாய்.

ஆசா: மறுபடி இதே பேச்சு! என்றால் இதைக் கேட்கச் சகிக்கவில்லை. இம்மாதிரி இனி என்னெதிரில் சொல்ல வேண்டாமென்று நான் உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மஹேந்திரன் பதிலே சொல்லவில்லை. மறுபடியும் ஆசா, "நான் காசிக்குப் போய் வருகிறேன்" என்றாள்.

மஹேந்திரன் சிரித்துக்கொண்டே, "சரி போகலாம். ஆனால் நீயின்றி நான் சீர்கெட்டால் என்ன செய்வாய்?" என்றான்.

ஆசா: ஏன் பயமுறுத்துகிறீர்கள்? அந்தச் சிந்தையே எனக்கு இல்லை.

மஹேந்: ஆசா, அப்படிச் சிந்திப்பது நலம். என் நடத்தை சீர்கெட்டால் பிறகு குற்றம் யாருடையது?

ஆசா: உங்களை நான் என்றும் குற்றம் கூறமாட்டேன். இதற்காக நீங்கள் கவலை கொள்ள வேண்டாம்.

மஹேந்: அப்படியானால் குற்றம் என்னைவிட்டுப் போகும் உன்னுடையது என்று ஒப்புக்கொள்ளுவாயா?

ஆசா: ஒரு முறையில்லை; நூறுமுறை ஒப்புக்கொள்வேன்.

மஹேந்: நல்லது நாளைக்கு, நான் உன் பெரியப்பாவைக் கண்டு பேசி இதற்கு ஏற்பாடு செய்கிறேன்.

பாதித் தூக்கத்தில் மஹேந்திரன் திடீரென்று விழித்துக்கொண்டு ஆசாவை நோக்கி, "ஆசா, நீ காசிக்குச் செல்லவேண்டாம்" என்று கேட்டுக்கொண்டான்.

ஆசா மிகவருத்தத்துடன், "இப்பொழுது ஏன் தடுக்கிறீர்கள்? உங்கள் சொல் என் உள்ளத்தை உறுத்து

கிறது; அதற்காகவே ஐந்தாறு தினங்களேனும் காசிக்குச் சென்று இருக்க விரும்புகிறேன். நான் அங்கே அதிக தினங்கள் தங்கப்போவதில்லை. தடை சொல்லாமல் அனுப்புங்கள்'' என்றாள்.

அவன் "சரி" என்று சொல்லி மறுபடி தூங்கிவிட்டான்.

காசிக்குச் செல்வதற்கு முதல்நாள் ஆசா விநோதினியின் தோள்மீது கை போட்டுக்கொண்டு, "மாயா விநோதினி, சத்தியமாகச் சொல்: நான் ஒன்று கேட்கிறேன். அதை நிறைவேற்றுவாயா மாட்டாயா?'' என்றாள்.

விநோதினி ஆசாவின்மோவாயைப் பிடித்துக்கொண்டு பிரியமாய், "ஏண்டீ, எப்பொழுதாவது நான் உன் பேச்சைத் தட்டியிருக்கிறேனா?'' என்றாள்.

**ஆசா:** என்னவோ அம்மா, நீ இப்பொழுதெல்லாம் ஏதோ ஒருமாதிரி இருக்கிறாய். என் கணவரெதிரிலோ வருவதே கிடையாது.

**விநோ:** நான் ஏன் வருவதில்லையென்று உனக்குத் தெரியாதா? அன்று விஹாரிபாபுவிடம் அவர் சொன்னதை நீயுந்தான் கேட்டாயே? அம்மாதிரி அவச்சொல் கேட்ட பிறகுகூட அவர்எதிரில் போவதும் பேசுவதும் உசிதமா? நீயே சொல்.

இது ஆசாவுக்கும் தெரியும். இம்மாதிரி சொல்லால் ஒருகுலஸ்திரீயின் மனம் எவ்வாறு புண்படுமென்பதையும் அவள் அறியாமலில்லை. ஆனாலும் விநோதினியைச் சாந்தப்படுத்துவதற்காக, "சகோதரி, எவ்வளவோ இருக்கும். ஆனால் இதையெல்லாம் லக்ஷியம் செய்யலாமா? நட்பின் முன் இது பெரிதா? நீ

இவற்றை மறந்துவிடவேண்டும்” என்று வேண்டிக்கொண்டாள்.

விநோ: ஆகட்டும்; அப்படியே செய்கிறேன்.

ஆசா: சகோதரி, நான் நாளையதினம் காசிக்குச் செல்லுகிறேன், நான் இல்லாதிருக்கும் சமயம் என் புருஷருக்கு ஒரு தொந்தரவும் நேராமல் ஸகலபணிவிடைகளையும் நீயே கவனித்துச் செய்யவேண்டுமென்று உன்னை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்படி நீ தூர ஓடிக்கொண்டிருந்தாயானால் காரியம் நடவாது. அவரை நீ சந்தோஷமாய் வைத்திருக்கவேண்டும்.

விநோதினி பதிலொன்றும் பேசவில்லை. ஆசா அவள் கையைப் பிடித்துக்கொண்டு, “மாயா விநோதினி, என் மீது ஆணை! நீ இதைச் செய்யத்தான் வேண்டும்” என்றாள்.

விநோதினி “ஆகட்டும்” என்றாள்.

---

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

ஆசா காசிக்குச் சென்றாள். ஆனால் மஹேந்திரனின் மனோரதமென்னவோ நிறைவேறியபாடில்லை. விநோதினியின் தரிசனம் அவனுக்குக் கிடைக்கவில்லை. அவள் கண்களில் படமாட்டாளாவென்று எதிர்பார்த்து உள்ளுக்கும் வெளிக்கும் நூறுமுறைபோவது, காரணமின்றித் தன் தாயின் அறைக்குள் அடிக்கடி போய் வருவது, இப்படியெல்லாம் செய்தும் அவனைக் கண்டதுமே விநோதினி அவ்விடத்தை விட்டு நழுவிவிடுவாள்.

அவனுடைய வாடிய சஞ்சலமடைந்த முகத்தைப் பார்த்து ராஜலக்ஷ்மி வருந்தினாள். மனைவியின் பிரிவுதான்

இதற்குக் காரணமென்று நினைத்தாள். விவாகத்திற்குப் பிறகு பிள்ளை தன்னை லக்ஷியம் செய்யாமல் இருந்ததையும், இரண்டு நாள் மனைவியைவிட்டுப் பிரிந்திருப்பதற்கு இவ்வளவு துக்கப்படுவதையும் காண அவள் மனம் பொருமியது. ஆனால் இவ்வெண்ணம் மறுக்ஷணமே மறைந்தது. அவனுடைய கவலைகொண்ட முகம் புத்திரவாஞ்சையை எழுப்பியது. அவள் தனது குறையை மறந்தாள். விநோதினியைக் கூப்பிட்டு, "விநோதினி, எனக்கோ தள்ளாமை அதிகரித்து வருகிறது. வியாதியும் தீருவதாயில்லை. மாடிப் படி ஏறி இறங்குவதற்குள் பெருமூச்சு வாங்குகிறது. மஹேந்திரனைக் கவனித்துக்கொள்ள வீட்டில் யாரும் இல்லை. சிறு வயதிலிருந்தே அவனது ஒவ்வொரு வேலையையும் பிறர் செய்தே வழக்கமாகிவிட்டது. இப்பொழுது நீதான் அவனுக்கு வேண்டிய சுசுருஷைகளைச் செய்ய வேண்டும். அவன் எப்படி இளைத்துத் துரும்பாகி விட்டான், பார். அந்த மஹாராஜி நாட்டுப் பெண்ணுக்கு அவனை விட்டுப் போக எப்படித்தான் மனம் வந்ததோ?" என்று சொன்னாள்.

இதைக் கேட்டதும் விநோதினி முகத்தைச்சுளித்துக் கொண்டாள். பதில் சொல்லாமல் படுக்கையைத் தட்டிப் போட்டுக்கொண்டிருந்தாள். "ஏன், என்ன யோசிக்கிறாய்? ஒன்றும் யோசனை வேண்டாம். யார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். நீ என்ன அன்னியமா?" என்றாள் ராஜலக்ஷ்மி.

விநோ: இது என்னால் முடியாது.

ராஜலக்ஷ்மி முகத்தைக் கடுத்துக்கொண்டு, "சரி, போகட்டும்; முடிந்தவரை நானே செய்கிறேன்" என்று

சொல்லி எழுந்திருக்க முயன்றாள். உடனே விநோதினி பரிதாபத்துடன், "வேண்டாம். நீங்கள் எழுந்திருந்தால் விழுந்துவிடுவீர்கள். உங்கள் தேகநிலை நன்றாயில்லை. இதோ நானே போகிறேன். நீங்கள் இட்ட கட்டளைப்படி நடக்கிறேன். என்னை மன்னிக்கவேண்டும்" என்று வணங்கி நின்றாள்.

ராஜலக்ஷ்மிக்கு உலக அநுபவம் இல்லை. அதுவும் விதவையான பிறகு வெளி உலகத்தின் தொடர்பே அற்றுப் போயிற்று அவளுக்கு. தன் ஒரே பிள்ளையான மஹேந்திரன்தான் அவளுக்கு ஸர்வமும். அவனுக்குச் சுசுருஷை செய்தால் தன்னை ஊரார் நிந்திப்பரென்று விநோதினி நினைப்பது கூடத் தவறென்று ராஜலக்ஷ்மிக்குத் தோன்றியது. 'மஹேந்திரனின் குணம் எனக்குத் தெரியாதா? அவனைப் போன்ற நன்னடத்தையுள்ளவர்கள் உண்டா, உலகில்?' என்பது ராஜலக்ஷ்மியின் அபிப்பிராயம். அப்படியிருக்க அவன் பேரில் குற்றங் கூற யாரேனும் துணிவராகில் அவர் நாவறுந்து விழாமல் காப்பாற்றிக் கொள்ளவேண்டும்! தனக்குப் பிடித்த ஒருவரை உலகமெல்லாம் பழித்தாலும் அதை ஏற்காத பிடிவாதம் ராஜலக்ஷ்மிக்கு உண்டு.

அன்று காலேஜிலிருந்து திரும்பிய மஹேந்திரன் தன் அறைக்குச் சென்றதும் பிரமித்து நின்றான். எல்லாம் புது மாதிரியாக இருந்தன! ஒரு தூசு கிடையாது. கதவு ஜன்னலுக்கெல்லாம் புதிய திரைகள் தொங்க விடப்பட்டிருந்தன. பூக்கிண்ணங்களில் அன்றலர்ந்த நறுமணரோஜா மலர்கள் ஜோடித்து வைக்கப்பட்டிருந்தன. அழுக்கடைந்த படுக்கை விரிப்புகளுக்குப் பதில் வெண்மையான படுக்கை

விரிப்புகளும் பட்டில் பூவேலை செய்யப்பட்ட மென்மையான தலையணை உறைகளும் கண்களைக் கவர்ந்தன. அத் தலையணை உறைகளை விநோதினி தைக்கும்போது ஆசா அவளை, "இவ்வளவு கஷ்டப்பட்டு இதை யாருக்காகத் தைக்கிறாய்?" என்று கேட்டதற்கு விநோதினி சிரித்துக் கொண்டே, "எனது பாடையை அலங்கரிப்பதற்காகத் தான்! சாவைவிட உற்ற நண்பன் வேறு யார் எனக்கு?" என்று சொல்லியிருந்தாள். சுவரில் தூசுபடிந்து மாட்டப் பட்டிருந்த மஹேந்திரனின் போட்டோ சுற்றிலும் ஜிகினாவினால் மிக அழகாய் வேலை செய்யப்பட்டுத் தகதகவெனப் பிரகாசித்தது. யாரோ பக்தியுடன் அதைப் பூஜித்துப் போயிருப்பதுபோல் தோன்றியது. அறை நடுவில் ஒரு திரை கட்டப்பட்டு இரண்டு பாகமாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒரு பிரிவு படுக்கும் அறையாகவும் மற்றொரு பிரிவு படிக்கும் அறையாகவும் செய்யப்பட்டுக் கட்டில், மேஜை, நாற்காலி யாவும் சரியான இடத்தில் போடப்பட்டிருந்தன. முன்பு இருந்த அறைக்கும் இப்பொழுது இருப்பதற்கும் அடையாளமே தெரியாதவாறு மாறுபட்டு விளங்கியது. அவ்வறையை அலங்கரித்த கையின் திறமையை ஒவ்வொரு ஜடப்பொருளுங்கூட விளக்கியது போல் தோன்றியது.

மஹேந்திரன் களைப்புடன் சாய்வு நாற்காலியில்படுத்தான். அதிலிருந்த சதுரத் தலையணையிலிருந்து நறுமணம் வீசியது. மஹேந்திரன் தன்னை மறந்து கண்களை மூடியபடியே படுத்திருந்தான். அச்சமயம் சமையற்காரன் வெள்ளித்தட்டில் சிற்றுண்டியும் சர்பத்தும் கொண்டு வந்து முன்னே வைத்துப் போனான். பக்ஷணங்களும் அன்று புதுமாதிரியாய்ச் செய்யப்பட்டு அறுசுவையளித்

தன. மஹேந்திரன் திருப்தியுடன் யாவற்றையும் உண்டு முடித்தான்.

அதே சமயம் விநோதினி வெற்றிலைபாக்குத் தட்டுடன் உள்ளே பிரவேசித்தாள். புன்சிரிப்புடன் அவள் மஹேந்திரனை நோக்கி, "சில நாட்களாக நீங்கள் சாப்பிடும்போதுகூட எதிரே வருவதற்கு எனக்கு முடியவில்லை; மன்னிக்கவேணும். உங்களைக் கவனித்துக் கொள்ளவில்லையென்று என் தோழியிடம் மாத்திரம் தெரிவிக்கவேண்டாம். என்ன செய்வது! வீட்டு வேலையெல்லாம் நான்தான் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஏதோ முடிந்தவரையில் செய்கிறேன்" என்றாள். வெற்றிலைத் தட்டை அவன் முன் வைத்தாள். பாக்குப் பொடியிலும் சுண்ணாம்பிலுங் கூட வாசனை கமழ்ந்தது.

மஹேந்: சுசுருஷை செய்வதிலும் குறையிருந்தால் தான் நலம்.

விநோ: ஏன்?

மஹேந்: ஏனா? குறையிருந்தால் தானே பிறகு அதை வட்டியுடன் வாங்கிக்கொள்ள முடியும்?

விநோ: அப்படியா! அப்படியானால் இதுவரை ஆகியிருக்கும் வட்டி எவ்வளவு, சேட்ஜீ?

மஹேந்: நான் சாப்பிடும்போது நீ ஆஜராவதில்லை. பிறகு வந்தாலுங்கூட அது இன்னும் பாக்கிதான்.

விநோதினி: அதிகக் கரார்வட்டிதான் என்று தோன்றுகிறது. அப்படியானால் உங்களிடம் லேவாதேவி செய்து பிழைப்பது கடினந்தான்!

மஹேந்: கணக்குத்தான் மிச்சம். இதுவரை வசூலென்னவோ என்னால் சிறிதும் செய்யமுடியவில்லை.

விநோ: வசூலிப்பதற்கு என்னிடம் என்ன இருக்கிறது? அப்படியும் என்னைக் கைதுசெய்து வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

இதைச் சொல்லி அவள் பெருமூச்செறிந்தாள்.

மஹேந்: கைதுசெய்துவைக்க இது என்ன சிறையா?

வேலைக்காரன் அச்சமயம் விளக்கேற்றிக் கொண்டு வந்து வைத்தான். அவன் போனதும் விநோதினி, "என்னவோ அதெல்லாம் தெரியாது; உங்களைப் பேச்சில் வெல்ல யாரால் முடியும்? நேரமாகிறது. எனக்கு வேலையிருக்கிறது" என்று வெளியே செல்ல ஆரம்பித்தாள்.

மஹேந்திரன் உடனே அவள்கரங்களைப் பிடித்திழுத்துத் தன் கையில் வைத்துக்கொண்டு, "எப்பொழுதுகைதியென்று ஒப்புக்கொண்டாயோ அப்பொழுது ஓடுவது எங்கே?" என்றான்.

"சீச்சீ! கையை விடுங்கள். ஓடுவதற்கு இடமற்றிருக்கும் என்னை இப்படிக் கட்டிப் பிடித்து நிறுத்தாதீர்கள்!" என்று சொல்லி விநோதினி தன் கையை உதறி விடுவித்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டாள்.

* * * *

வஸந்த ருது. மந்தமாருதம் வீசிக்கொண்டிருந்தது அது, "இதோ விநோதினி உன் வசமாகிவிட்டாள் உனக்கு ஆத்ம ஸமர்ப்பணம் செய்துவிட்டாள்" என்று சொல்வது போலிருந்தது. வீடு நிச்சப்த மாயிருந்தது. மஹேந்திரனின் மனம் மதங்கொண்ட யானையைப் போன்றிருந்தது. எழுந்திருந்து விளக்கை அணைத்துக் கதவைத் தாழிட்டான். படிப்பதற்குரிய நேரமாகாமற் போனாலும் படுக்கையில் போய்ப் படுத்தான். படுக்கையில் மனத்திற்கு

இன்பமூட்டும் சுகந்தம் வீசிக்கொண்டிருந்தது. பழைய சின்னம் ஏதாவது அகப்படாதாவென்று அறை முழுவதும் சுற்றி நோக்கினன். ஆனால் எங்கும் மாறுதல்தான்.

இரவு ஒன்பதுமணி. யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. "சாப்பாடு கொண்டுவந்திருக்கிறேன். கதவைத் திறவுங்கள்" என்று விநோதினி கூப்பிடுவது கேட்டது.

மஹேந்திரனின் மனம் கட்டுக்கடங்கவில்லை. அவள் குரலைக் கேட்டதும் கதவைத் திறக்க எழுந்தான். ஆனால் தாழ்ப்பாளைத் திறக்கக் கை மறுத்துவிட்டது. மறுபடி படுக்கையில் வந்து விழுந்தான். "எனக்குச் சாப்பாடு வேண்டாம்! பசியில்லை" என்று உள்ளிருந்தபடியே கூறி விட்டான்.

விநோதினி மனக்கலவரமடைந்து, "உடம்பு சரியில்லையா? வெந்நீராவது கொண்டுவரட்டுமா? என்ன வேண்டும்? சொல்லுங்கள்" என்றாள்.

மஹேந்: எனக்கு ஒன்றும் தேவையில்லை.

விநோ: எனது ஆணை! நீங்கள் பொய் சொல்லுகிறீர்கள். உடம்பு சரியாயிருந்தால் கதவைத் திறப்பதற்கென்ன?

மஹேந்திரன், "முடியவே முடியாது! நான் திறக்கப் போவதில்லை. நீ போகலாம்" என்று பிடிவாதமாய் மறுத்து விட்டான்.

அவன் மனம் குழம்பியது. தனது இருண்ட உள்ளத்தில் மறந்துபோன ஆசையைத் தேட முயன்றான். தூக்கம் வரவில்லை. உடனே அவளுக்குக் கடிதம் எழுதுவதென்று தீர்மானிக்கு விளக்கண்டை போய் உட்கார்ந்தான்.

"என் அன்பிற்குரிய ஆசா!

என்னைத் தனித்திருக்க விட்டுவிட்டு அதிக நாள் தங்காதே. நீ தான் எனது வாழ்க்கைத் தெய்வம், வாழ்க்கைத் துணை எல்லாம். நீ அருகில் இராததால் எனது துர்ப்புத்தி என்னை எங்கெல்லாமோ இழுத்துச் செல்கிறது. நல்வழியிற் செல்ல மனம் விரும்பினாலும் அதற்கு வழிகாட்டும் வெளிச்சத்தைக் காணவில்லை. உனது அன்புமயமான புனித நேத்திரங்களே அதற்கு வழி காட்டும் ஜோதி. நீ சீக்கிரம் வா. எனது வாழ்க்கையைத் தூய்மைப்படுத்தும் சக்தி நீயே. உனது அன்பினால் என் உள்ளத்தைப் பூரணமாகச் செய். எனக்குத் திட சித்தத்தை அளி. உன்னை வஞ்சித்த பாபம் என்னைச் சாராதிருக்கட்டும். என்னை மஹா பாபத்திலிருந்து ரக்ஷி."

இந்தவிதமாகத் தன்மனத்தை வெளியிட்டுத் தன்னைத் தானே சபித்து ஒரு நீண்ட கடிதமெழுதி முடிப்பதற்குள் நடுநிசிக்கு மேலாயிற்று. மணிக்கூண்டிலிருக்கும் பெரிய கடிகாரம் மூன்றடித்தது கேட்டது. தெருவில் கட்டை வண்டிகள் போகும் சத்தம் கேட்டது. நாடகம் பார்த்துவிட்டுச் சிலர் அப்பொழுதுதான் வீட்டிற்குத் திரும்பிக்கொண்டிருந்தனர். அக்கடிதத்தை எழுதியதில் அவன் மனக்கொதிப்பு அடங்கிச் சற்றுச் சாந்தம் ஏற்பட்டது. படுக்கையில் படுத்து அப்படியே தூங்கி விட்டான்.

காலை சூரியோதயமாகி வெகுநேரத்திற்குப் பிறகு அவன் எழுந்திருந்தான். மனச் சஞ்சலம் சற்றுக்குறைவாயிருந்தது. முன்னிரவு ஆசாவுக்கு எழுதிய கடிதம் மேஜை மேல் மடித்துவைக்கப்பட்டிருந்தது. அதை மறுபடி எடுத்துப் படித்தான். "என்னவெல்லாம் உளறியிருக்கிறேன்! ஆசா இதைப் பார்த்து என்ன நினைப்பாள்! ஏதோ நாவல்



விஹாரி இருவர் முகங்களையும் மாறி மாறிப் பார்த்தான்.

—பக்கம் 185.

போல் இருக்கும். இக்கடிதத்தின் கருத்தைக்கூட அவ ளால் அறிந்துகொள்ள முடியாதே. நல்ல வேளை இதைத் தபாலில் போடாமலிருந்தேனே" என்று தன் கடிதத்தைப் பார்த்துத் தானே வெட்கினான். அதைக் கிழித்தெறிந்து விட்டு வேறு ஒரு சுருக்கமான கடிதம் வரைந்தான்; "நீ வர இன்னும் எவ்வளவு நாட்களாகும்? உன் பெரியப்பா சீக்கிரம் திரும்பாவிடில் நானே வந்து உன்னை அழைத்து வருகிறேன். நீயில்லாது தனித்திருக்க எனக்குப் பிடிக்க வேயில்லை" என்று எழுதித் தபாலில் போட்டான்.

---

## இருபத்தாறுவது அத்தியாயம்

மஹேந்திரன் புறப்பட்டுச் சென்றதும், அதற்குப் பின் ஆசா காசிக்கு வந்ததும் அன்னபூரணியின் சந் தேகத்தை எழுப்பின. உண்மையை அறியவேண்டி அவள் ஆசாவிடம் பலவிதமாய் விசாரிக்கலானாள். இவர்கள் சம்பாஷணையில் விநோதினியின் பிரஸ்தாபமும் வந்தது. "உன் தோழி மாயாவிநோதினி அவ்வளவு இணையற்ற வளா?" என்று அன்னபூரணி கேட்டாள்.

ஆசா: ஆமாம். ரூபத்திலும் புத்தியிலும் குணத்தி லும் யாவற்றிலும் இணையற்றவள்.

அன்ன: உன் தோழியாதலால் நீ அவளைக் கொண்டாடுவது சரிதான். ஆனால் வீட்டில் மற்றவர்கள் அவளைப்பற்றி எவ்விதம் நினைக்கிறார்கள்?

ஆசா: மாமியார் சதா அவளைக் கொண்டாடுகிறார். அவள் ஊருக்குப் புறப்படும் பிரஸ்தாபம் எடுத்தாலே மாமியாருக்கு வருத்தமாயிருக்கிறது. என் தோழியைப்

போல் அவருக்குச் சேவை செய்ய வேறு யாராலும் முடியாது.

அன்ன: அவளைப்பற்றி மஹேந்திரனின் அபிப் பிராயம் என்ன?

ஆசா: அவர் வழக்கந்தான் உனக்குத் தெரியுமே. தமக்குப் பிடித்த இரண்டொருவரைத் தவிர வேறு யாரும் அவருக்குப் பிடிப்பதில்லை. வீட்டில் எல்லோராலும் அன் புடனும் ஆதரவுடனும் கொண்டாடப்படும் என் கோரி யைக் கண்டால்கூட அவருக்குப் பிடிப்பதில்லை.

அன்ன: ஏன் அப்படி?

ஆசா: நான் எவ்வளவோ முயன்று அவர்கள் இரு வரையும் சந்திக்கச் செய்தேன். ஆனாலும் மிகவும் அபூர்வ மாகத்தான் அவளோடு அவர் பேசுகிறார். தமக்குப் பிரிய மான இரண்டொருவரைத் தவிர வேறு யாரிடமும் பேச்சு வார்த்தை கூட வைத்துக் கொள்வது இல்லை.

இதைச் சொல்லும்போது ஆசாவின் முகம் நாணத் தினால் சிவந்தது. தன் தலையைக் குனிந்து கொண்டாள். அன்னபூரணிக்கும் இதைக் காண உள்ளூறச் சந்தோஷம். அவள், "உண்மைதான். இதனால்தான் மஹேந்திரன் வந்திருந்தபோதுகூட விநோதினியின் பெயரையே எடுக்க இல்லை போலும்!" என்றாள்.

ஆசா: இதுதான் அவரது கெட்ட குணம். தமக்கு விருப்பமில்லாதவர்களைப் பற்றிப் பேசுவதுமில்லை; எதிரில் கண்டாலும் பராமுகமாயிருப்பார்.

அன்னபூரணி சிரித்துக்கொண்டே, "தனது அன்பிற் குப் பாத்திரமானவர்களே அவனுக்குச் சர்வமும். இல்லையா, ஆசா?" என்றாள்.

ஆசாவுக்கு நாணத்தினால் பதிலொன்றும் சொல்ல முடியவில்லை. அவள் முகத்தில் புன்னகை அரும்பியது.

அன்னபூரணி பேச்சை மாற்றி, “விஹாரியைப்பற்றி என்ன சமாசாரம்? அவன் கலியாணம் செய்துகொள்ளப் போவதில்லையா?” என்றாள்.

இதைக் கேட்டதும் ஆசாவின் முகம் மாறியது. அவள் பதிலொன்றும் சொல்லவில்லை.

அவள் முகக்குறியைக் கண்ட அன்னபூரணி திகிலுடன், “விஹாரி சௌக்கியமாயிருக்கிறானா? உண்மையைச் சொல்” என்றாள்.

அன்னபூரணிக்குக் குழந்தை குட்டிகள் இல்லை. தன் பிள்ளையைப் போல் விஹாரியை அவள் நேசித்தாள். அவளுக்கு வாழ்வில் ஒரே ஒரு குறைதான் இருந்தது; அது, விஹாரி விவாகம் செய்துகொண்டு சுகமாய் இருக்க வேண்டும் என்பதே.

ஆசா: சித்தி, விஹாரியைப்பற்றி மாத்திரம் என்னிடம் ஒன்றும் கேட்காதே.

அன்னபூரணி: (ஆச்சரியத்துடன்) ஏன்?

ஆசா: அவர் விஷயத்தை நான் பேசமாட்டேன்.

இதைச் சொல்லிவிட்டு ஆசா எழுந்து சென்றாள். அன்னபூரணி பலவித யோசனையில் ஆழ்ந்தாள். ‘விஹாரி உயர்குண முடையவன். நன்னடத்தையுள்ளவன். அவன் என்ன, அதற்குள்ளாகவா கெட்டுப்போய்விட்டான்! அப்படியில்லையானால் ஆசா அவன் பிரஸ்தாபம் எடுத்ததுமே ஏன் எழுந்துபோய்விட்டாள்? எல்லாம் கால சக்கரத்தின் மாறுபாடுபோலும்! அவனுக்காக ஆசா முதலில் நிச்சயம் செய்யப்படுவானேன்? மஹேந்திரன் பிடி

வாதம் பிடித்து அவளை அபகரித்துக்கொள்வானேன்?'— இப்படி என்றாத எண்ணமெல்லாம் எழ, அன்னபூரணி விஹாரியை நினைத்துக் கண்ணீர் பெருக்கினாள். 'தெரியாது ஏதாவது தவறு செய்திருக்கலாம். அவன் மிகவும் குண சீலன்' என்று ஆறுதல் செய்துகொண்டாள்.

அன்று சாயங்காலம் அவள் ஜபம் செய்துகொண்டிருக்கும் சமயம் வாயிலில் ஒரு வண்டி வந்து நின்றது. தன் உறவினர் யாரோ அன்று வருவதாக எழுதியிருந்தது சட்டென அவள் நினைவிற்கு வந்தது. தான் ஜபம் செய்துகொண்டிருப்பதால் ஆசாவை வாயிற்கதவைத் திறந்து யாரென்று பார்க்கும்படி கூறினாள். இருட்டாயிருந்ததால் விளக்கை எடுத்துக்கொண்டு ஆசா வாயிற்புறம் போய்க் கதவைத் திறந்தாள். அங்கே விஹாரி நிற்பதைக் கண்டு ஸர்ப்பம் தீண்டியவளைப்போல் பதறிக் கையிலிருந்த விளக்கையும் போட்டுவிட்டாள். "நீ காசிக்கு வரவில்லையென்று கேள்விப்பட்டேனே?" என்று விஹாரி கேட்டான். ஆசா பதிலொன்றும் சொல்லவில்லை. ஏதோ பேய் பிசாசைக் கண்டதுபோல் உள்ளே சித்தியிடம் ஓடி, "சித்தி, விஹாரி வந்திருக்கிறார். நான் உன் காலில் விழுந்து கேட்டுக் கொள்ளுகிறேன்: நீ அவரை உடனே இங்கிருந்து திரும்பிப் போகச் சொல்" என்று நடுக்கத்துடன் கெஞ்சினாள்.

இச்சொல் விஹாரியின் செவியிலும் நாராசம்போல் பாய்ந்தது. ஜீவசக்தியை இழந்தவன்போல் அப்படியே வாசலில் போய் உட்கார்ந்தான். அன்னபூரணி கையிலிருந்த ஜபமாலையைக் கீழே போட்டுவிட்டுக் கதவண்டை வந்து கோபத்தொனியுடன், "விஹாரி!" என்று கூப்பிட்டாள்.

அன்னபூரணியின் அன்பையும் ஆசீர்வாதத்தையும் நாடிவந்த விஹாரிக்கு இக்குரல் இடியிடித்தது போன்று இருந்தது. அவனுடைய சக்தியிழந்த சரீரத்தை இது ஊடுருவித் துளைத்தது. அவன் ஈனக்குரலில், "பெரியம்மா, நீங்கள் ஒன்றும் சொல்லவேண்டாம். இதோ நானே போகிறேன்" என்று தூர இருந்தபடியே அவளை நமஸ்கரித்துவிட்டு வண்டியில் ஏறி மறைந்தான். நட்டாற்றில் குழந்தையைக் கைவிட்ட தாயைப்போல் அன்னபூரணியும் உள்ளே திரும்பினாள்.

அதே இரவு ஆசா தன் கணவனுக்கு விஹாரி காசிக்கு வந்திருந்த சங்கதியைத் தெரிவித்துத் தன்னை உடனே வந்து அழைத்துப் போகுமாறு கடிதம் எழுதினாள்.

---

## இருபத்தேழாவது அத்தியாயம்

இரவு முழுவதும் கண்விழித்தது, மனவெழுச்சி இவற்றால் மஹேந்திரனின் மனம் சிதறுண்டு கிடந்தது. சாதாரணமாய் அவன் தினமும் காலையில் எழுந்து படிப்பது வழக்கம். இன்றோ பொழுது விடிந்து வெகு நேரமாகியும் அவன் படுக்கையிலேயே படுத்திருந்தான். தெருவில் பழம் விற்பவன் கூவிக்கொண்டு போவது கேட்டது. ஆபீசுக்குச் செல்வோர் வண்டிகளிலோ நடந்தோ வெகு வேகமாய்ச் சென்றுகொண்டிருந்தனர். எதிரே புதிதாகக் கட்டப்படும் வீட்டில் வேலை செய்யும் கூலிக்காரச் சிறுமிகள் மண்ணும் கல்லும் சுமந்துகொண்டே பாடுவது காதில் விழுந்தது. அக்கோடை வெயிலில் வெளியே போவதைவிட வீட்டிற்குள் சுகமாய்ப் படுத்திருக்கவே யாவரும் விரும்புவர்.

"மஹேன், உங்களுக்கு என்ன உடம்பு? குளிக்கப் போகிறதில்லையா? சாப்பாடுகூடத் தயாராய்விட்டதே. இன்னுமா படுத்துக்கொண்டிருக்கிறீர்கள்? என்ன தலை வலியா?" என்று கேட்டுக்கொண்டே விநோதினி அவன் நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள்.

அவன் கண்களை மூடியவாறே தழுதழுத்த குரலில், "எனக்கு உடம்பு சரியில்லை. நான் குளிக்கப்போவ தில்லை" என்றான்.

விநோ: குளிக்காவிடில் போகிறது. ஏதாவது சாப்பிடலாமே.

அவள் எப்படியோ அவனை வேண்டிக்கொண்டு வற்புறுத்திக் குளிக்கும்படி செய்து போஜனமும் செய்வித்தாள்.

சாப்பாடு முடிந்ததும் மஹேந்திரன் வந்து மறுபடி படுத்துக்கொண்டான். தலைமாட்டில் நின்று விநோதினி மெதுவாய் அவன் நெற்றியைத் தடவிக்கொண்டிருந்தாள். அவன், "நீ இன்னும் ஒன்றுமே சாப்பிடவில்லை. போய்ச் சாப்பிடு, போ" என்றான்.

விநோதினி அவன் சொல்வதைக் கவனிக்கவில்லை. பகல்வேளையானாலும் வெளியிலிருந்து காற்று வந்து கொண்டிருந்தது. தலையருகில் நின்று அவள் பெரு மூச்சுவிடுவது மஹேந்திரனின் நெற்றி முன்மயிரை அசைத்து விளையாடியது. விநோதினி வாய்திறந்து ஒன்றும் பேசவில்லை. மஹேந்திரனின் உள்ளம் படபடத்தது. நடுச் சமுத்திரத்தில் புயற்காற்றில் தவிக்கும் ஒரு சிறு படகுபோன்று இருந்தது அவனது நிலை. படகு கரை சேருமா, மூழ்குமா என்று அவனுக்கே தெரியவில்லை.

விநோதினி, அவன் தலைமாட்டில் உட்கார்ந்து மெதுவாய் அவன் நெற்றியைத் தடவிக்கொண்டிருந்தாள். குனிந்தவாறு இருந்த அவள் முகத்தின் முன்நெற்றியில் சுருண்டு அசைந்தாடிக் கொண்டிருந்த அழகிய கேசம் மஹேந்திரனின் கன்னங்களைத் தொட்டது. உடனே அவனுடைய சரீர முழுவதும் ஒருவித உணர்ச்சி ஊடுருவியது. அவனுக்குச் சுவாசமே ஸ்தம்பித்து விட்டதுபோலத் தோன்றியது. மனத்தில் என்ன தோன்றியதோ, அவன் உடனே எழுந்து, "நான் காலேஜுக்குப் போகவேண்டும்" என்று விநோதினியின் பக்கங்கூடத் திரும்பிப்பாராமல் சொல்லிக்கொண்டே போக யத்தனித்தான்.

விநோதினி, "திகிலடையவேண்டாம். இதோ நானே உங்கள் உடுப்புகளைக் கொண்டுவருகிறேன்" என்று சொல்லி எழுந்து சென்றாள்.

அவள் கொண்டுவந்து கொடுத்த உடுப்புகளை மிகவும் வேகமாய் அணிந்துகொண்டு மஹேந்திரன் காலேஜிற்குச் சென்றான். ஆனால் எவ்வளவோ முயன்றும் படிப்பில் அவனுக்கு மனம் செல்லவேயில்லை. இரண்டுமணிக்கே வீடு திரும்பி விட்டான்.

அச்சமயம் விநோதினி படுத்துக்கொண்டு ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தாள். அவளது கருமையாக அடர்ந்த கேசம் அவிழ்ந்து தலையணையின் நாலுபுறமும் புரண்டுகிடந்தது. அவள் மஹேந்திரன் வந்ததைக் கவனிக்கவில்லை. புஸ்தகத்தைப் படித்துக் கொண்டே உணர்ச்சி ததும்பப் பெருமூச்சு விட்டாள்.

மஹேந்திரன் திடீரென்று அவள்முன் தோன்றி, 'சுந்தரி, எந்தக் கற்பனைப் புருஷனை நினைந்து வீணில்

மனம் பொருமுகிறாய்? எங்கே பார்க்கலாம் கொடு; என்ன புஸ்தகம் படித்துக்கொண்டிருக்கிறாய்?" என்றான்.

விநோதினி திடுக்கிட்டவளைப்போல் எழுந்து உட்கார்ந்து புஸ்தகத்தைத் தனது புடைவைத் தலைப்பிற்குள் மறைத்து வைத்துக்கொண்டாள். அதைப் பிடுங்க முயன்றான் மஹேந்திரன். சிறிது நேரம்வரை இதற்காக இழுபறிநடந்து கடைசியில் மஹேந்திரனே ஜயித்தான். அப்புஸ்தகம் பங்கிம் பாபுவின் 'விஷவிருக்ஷ' மாயிருக்கக் கண்டான். விநோதினி முகத்தைச் சுளித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

மஹேந்திரனின் உள்ளம் படபடத்தது. அதை மறைத்துப் புன்சிரிப்புடன் அவன், "இவ்வளவுதானா? ஒளித்து வைத்துக் கொண்டதைப் பார்த்தால் நான் என்னவோ வென்றல்லவா நினைத்தேன்!" என்றான்.

விநோ: என்னிடம் ஒளிக்கும் வஸ்து வேறு என்ன இருக்கப் போகிறது?

மஹேந்: ஏன், விஹாரியிடமிருந்து வந்த கடிதமாயிருந்தால்?

இதைக் கேட்டவுடன் விநோதினியின் முகம் மாறியது; கண்கள் இரண்டும் கோபத்தினால் சிவந்தன. அவள் எழுந்து நின்று அக்கண்களினால் அவனை எரித்துவிடுவது போல் பார்த்தாள். அப்பார்வையை எதிர்த்து நிற்குந் துணிவு மஹேந்திரனுக்கு இல்லை. அவன் அவளுடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு, "நான் அபராதம் செய்துவிட்டேன். என்னை மன்னிக்கவேண்டும்" என்று கெஞ்சினான்.

விநோதினி தன் கைகளை வெடுக்கென இழுத்து விடு வித்துக்கொண்டு, "நீங்கள் யாரைப்பற்றி இவ்வளவு கேலியாகப் பேசினீர்கள்? நீங்கள் விஹாரி பாபுவின் கால் தூசுக்கு ஈடுபெறமாட்டீர்கள்! அவருடைய நட்பைப் பெற நீங்கள் தகுதியற்றவர்! இழிகுணம் படைத்த உங்களுக்கு அவரைப்பற்றிக் கேலியாகப் பேச வாய் வேறு?" என்று கூறி வெளியே செல்ல அடியெடுத்து வைத்தாள். மஹேந்திரன் அவளுடைய இரண்டு பாதங்களையும் பிடித்துக்கொண்டு தடுத்தான்.

அச்சமயம் பின்புறச் சுவரின்மேல் யாரோ ஒருவரது நிழல் தெரிவதைக் கண்டு மஹேந்திரன் சட்டென்று அவளுடைய பாதங்களை விட்டுவிட்டுத் திரும்பிப் பார்த்தான். அங்கே விஹாரி நின்று கொண்டிருந்தான்!

விஹாரி இருவர் முகங்களையும் மாறி மாறிப் பார்த்தான். பிறகு நிதானமான குரலில், "வேளையற்ற வேளையில் வந்துசேர்ந்தேன். ஆனாலும் நான் அதிகநேரம் இங்கே தங்கப் போவதில்லை. ஒரு சங்கதி சொல்லிப் போக வந்தேன்: நான் காசிக்குப் போயிருந்தேன். எனக்கு ஆசா அங்கே இருப்பது தெரியாது. என்னையும் அறியாமல் நான் அவளுக்கு ஏதோ தவறு இழைத்திருக்கிறேனென்று தெரிகிறது. அங்கேயே அவளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள எனக்கு அவகாசமில்லை. ஆகையால் தான் உன்னிடம் இன்று வந்தேன். தெரிந்தோ தெரியாமலோ நான் என்ன தப்பிதம் செய்திருந்தாலும் என்னை மன்னிக்கவேண்டும். அதற்காக ஆசாவை ஒருபோதும் துன்புறுத்தாதே" என்றான்.

மஹேந்திரன் நண்பனுக்காக மனமிரங்கவில்லை. தனது குற்றமுள்ள நடத்தையை அவன் நேரில் கண்டு

விட்டானேயென்று மனம் புழுங்கினான். நண்பனைப் பார்த்து அவன் கேலியாக, "இது என்ன, அப்பா குதிருக்குள் இல்லையென்னும் சமாசாரமாயிருக்கிறது! குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படியோ அல்லது மறுக்கும்படியோ உன்னை யார் கேட்டது? நீ மிகவும் யோக்கியனென்று காட்டிக்கொள்ளத்தானே இப்படி மன்னிப்பு வேண்டுகிறாய்?" என்று குத்தலாகக் கேட்டான்.

இதைக் கேட்டதும் விஹாரி சிலைபோல் ஸ்தம்பித்துச் சிறிதுநேரம் அப்படியே இருந்தான். ஒருவாறு நிதானமடைந்து பேச வாயெடுத்தான்; அதற்குள் விநோதினி அவனை அடக்கி, "நீங்கள் பேசாதிருங்கள். ஒன்றும் சொல்லவேண்டாம். மஹேந்திர பாபு இப்பொழுது சொல்லியது ஒன்றும் உங்களைப் பாதியாது. அவர் தம் முகத்தில் தாமே கரியைப் பூசிக்கொண்டார்" என்றாள்.

விநோதினியின் சொற்கள் விஹாரியின் செவியில் பட்டனவோ இல்லையோ, தெரியாது. நித்திரையில் நடப்பவனைப்போல் ஒன்றையும் கவனியாமல் படியிறங்கி அவன் கீழே செல்லலானான்.

பதிலொன்றும் உரையாமல் அவன் அப்படிச் செல்லவே, விநோதினி அவன் முன்சென்று அவனை வழிமறித்து அவன் கரங்கள் இரண்டையும் பற்றிக்கொண்டாள். மிகவும் வெறுப்புடன் விஹாரி அவளைத் தூரத் தள்ளிவிட்டுத் திரும்பிக்கூடப் பாராமல் வேகமாய்ச் சென்றுவிட்டான். அவள் கீழே விழுந்து அவளுக்கு அடிபட்டது அவனுக்குத் தெரியாது.

அவள் விழுந்த சப்தம் கேட்டு மஹேந்திரன் ஓடிவந்தான். விநோதினியின் இடது முழங்கை எலும்பு

முறிந்து அக்காயத்திலிருந்து இரத்தம் பெருகிக்கொண்டிருக்கக் கண்டான். "ஐயோ, அடி பலமாய்ப் பட்டு விட்டது போலிருக்கிறதே!" என்று கூறிப் பதைத்தான். உடனே தன் அங்கவஸ்திரத்தைக் கிழித்துக் காயத்தைக் கட்ட முயன்றான். ஆனால் விநோதினி அவன் கையைத் தூரத் தள்ளிக் கட்ட விடாது தடுத்துவிட்டாள்.

"நான் ஒரு மருந்துபோட்டுக் காயத்தைக் கட்டினேனானால் கை சீக்கிரம் குணமாகிவிடும்" என்று மஹேந்திரன் சொல்லிப்பார்த்தும் அவள் இணங்கவில்லை; "காயம் குணமாகாமல் அப்படியே இருக்கவேண்டுமென்றே நான் விரும்புகிறேன்" என்று கூறிவிட்டாள்.

மஹேந்திரன், "எனது முட்டாள்தனத்தாலன்றோ இன்று நீ வேறொருவரால் இப்படி அவமானமடையும்படி நேர்ந்தது? என்னை இதற்காக க்ஷமிக்கமாட்டாயா?" என்று வேண்டினான்.

விநோ: எதற்காக க்ஷமிப்பது? நல்லதாயிற்று! நான் எதற்கும் அஞ்சவில்லை. யாரையும் பொருட்படுத்தவும் இல்லை. என் காலில் விழுந்து வேண்டுபவர்களை விட்டு விட்டு, என்னைத் தூர உதறித் தள்ளியவர்களைத்தானா நான் விரும்பப் போகிறேன்? ஒருகாலும் இல்லை.

மஹேந்திரன் ஆனந்தத்தால் பூரித்தான். தழுதழுத்த குரலில் அவன், "விநோதினி, அப்படியானால் எனது அன்பை ஏற்றுக்கொள்வாயா?" என்று கேட்டான்.

"ஏற்பதா! அதைக் கிடைத்தற்கரிய ரத்தினமாக நினைத்துப் போற்றுவேன். என் வாழ்வில் கிட்டாத அன்பை நான் பெறும்போது அதை அலக்ஷியமாய் மறுக்க என்னால் இயலாது" என்று விநோதினி மொழிந்தாள்.

மஹேந்திரன் விநோதினியின் இரு கரங்களையும் பிடித்துக்கொண்டு கொஞ்சும் பாவனையாக, "வா, நாம் இருவரும் அறைக்குள் செல்லலாம். நாம் இதுவரையில் மனச் சஞ்சலத்திற்கு ஆளாகியது போதும். இனியாவது சந்தோஷத்தோடும் அமைதியோடும் இருப்போம்" என்றான்.

விநோ: இல்லை இல்லை! இன்று என்னை விட்டுவிடுங்கள். உங்களுடைய மனம் வருந்த நான் ஏதாவது செய்திருந்தால் என்னை மன்னித்துவிடுங்கள்.

மஹேந்: நீயும் என்னை மன்னிப்பாயா? இல்லாவிடில் இன்று எனக்குத் தூக்கமே வராது.

விநோ: மன்னித்தேன்.

தான் அன்று அடைந்த ஆனந்தத்திற்கும் அன்பிற்கும் அடையாளமாக எதையோ பெறவேண்டி மஹேந்திரன் விநோதினியின் முகத்தை நோக்கினான். ஆனால் அவள் முகக்குறிப்பிலிருந்து அவனுக்கு மேலே பேசத் தெரியவில்லை. தான் வேண்டுவது கிட்டுமெனவும் தோன்றவில்லை. விநோதினி கீழே இறங்கிச் சென்றாள். அன்று நடந்தவை யாவும் மஹேந்திரனின் மனத்தில் ஒவ்வொன்றாய் எழுந்தன; 'விஹாரிக்கு நம் விஷயம் தெரிந்தது நல்லதேயாயிற்று. இம்மாதிரி விஷயங்களை மறைத்து வைப்பதும் கடினம். அது எவ்வளவு நாளைக்குத்தான் முடியும்? நான் மஹா பரிசுத்தமானவனென்று சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. எனது வாழ்வின் ஒரே நோக்கம் இப்பொழுது அன்பு, காதல் இவையே. இவற்றை நான் அடைய விரும்புகிறேன். உலகம்என்ன வேண்டுமானாலும் என்னைப்பற்றி நினைக்கட்டும். எனக்கு அது ஒரு பொருட்டன்று' என்று தனது தவறான நடத்தையைப் பற்றியும்

அவன் அன்று பெருமையே கொண்டான். விநோதினி யின் சுந்தரவடிவம் அவன் உள்ளத்தில் குடிகொண்டது. அகம் புறம் எங்கும் அவளது உருவமே தோன்றி அவனை மயக்கியது.

---

## இருபத்தெட்டாவது அத்தியாயம்

மறுநாள் பொழுது விடிந்தது; அன்று எழுந்திருக் கும்போதே மஹேந்திரனின் மனத்தில் விவரிக்க முடியாத இன்ப உணர்ச்சி ஊறியது. இளஞ் சூரியனின் கிரணங்க ளால் அவனுடைய அகம் புறம் யாவும் சுவர்ணமயமாய்த் திகழ்ந்தன போலத்தோன்றின. தான் காணும் ஒவ்வொரு வஸ்துவும் புதுமையும் ஸௌந்தர்யமும் பெற்றுப் பிர காசிப்பதுபோன்று இருந்தது. சாதாரணக் காற்றிலும் நறுமணம் கலந்துவீசி மனத்தைக் கொள்ளைகொள்வது போல் அவனுக்குத் தோன்றியது. அதிகாலையில் வாயிலில் ஒரு வைஷ்ணவப் பிச்சைக்காரன் (தாதன்) சேகண்டி அடித்த வண்ணம் பாடிக்கொண்டே வந்தான். வழக்கம் போல் வேலையாட்கள் அவனை வெளியே துரத்த முயன்றார் கள். ஆனால் மஹேந்திரன் அவர்களைப் பேசாதிருக்கச் செய்து ஒரு முழு ரூபாயை எடுத்து அவனிடம் கொடுத் துப் போகச்சொன்னான். படுக்கையறையிலிருந்து லாந் தரை எடுக்கவந்த வேலையாள் அதைக் கைதவறிக் கீழே போட்டு உடைத்துவிட்டான். அவன் பயந்து நடுங்கி அப்படியே நின்றுவிட்டான். மஹேந்திரன் அவனைக் கோபிக்கக்கூட இல்லை; சிரித்த முகத்துடன் கண்ணாடித் துண்டுகளை எடுத்து வெளியே எறியுமாறு சொல்லிப் போனான். எங்கும் அன்பு மயமாகக் காணப்பட்டது அவனுக்கு அன்று. 'ஆஹா! இந்தப் புதுமையும் எங்கும்

வியாபித்திருக்கும் ஸௌந்தர்யமும் இன்றுவரை எங்கே மறைந்திருந்தன?' என்று ஆச்சரியமடைந்தான்.

'ஆமாம்! இன்று விநோதினியைச் சந்திப்பது மற்றத் தினங்களைப்போல் இராது. அவளுடைய பேச்சும் நடத்தையும், ஆஹா! கவிகளன்றோ வர்ணிக்கத் தகுந்தவையாக இருக்கும்!' என்று அகமகிழ்ந்தான். எப்பொழுது அவளைச் சந்திப்போமென்ற ஒரே ஆர்வம் அவன் மனத்தில் குடிகொண்டிருந்தது. காலேஜிற்குச் செல்லவும் தோன்றவில்லை. விநோதினி சமையலறையில் பேசும் சப்தம் கேட்டது. இன்று அவள் இப்படி வீட்டு வேலையில் மூழ்கியிருப்பது அவனுக்குப் பிடிக்கவேயில்லை. இன்று அவள் அவன் உள்ளத்திலன்றோ குடிகொண்டிருக்கிறாள்!

அவனுக்கு ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகமாகக் கழிந்தது. ஸ்நானமாயிற்று; சாப்பாடாயிற்று. வீட்டுவேலை யாவும் முடிந்து சந்தடியற்று இருந்தது. ஆனாலும் விநோதினி மாத்திரம் வரக்காணவில்லை. அவன் மனம் துடித்தது. முன் தினம் விநோதினியிடமிருந்து சண்டைபோட்டுப் பிடுங்கிய 'விஷ விருக்ஷம்' என்னும் நாவல் கண்முன்னேயே கிடந்தது. முந்தின தினம் நடந்த சம்பவங்கள் யாவும் கண்முன் தோன்றின. மயிர் சிலிர்த்தது. அப்புஸ்தகத்தைக் கையிலெடுத்துப் படிக்க ஆரம்பித்தான். படிப்பில் கவனம் செல்லவே, பொழுது சென்றதே தெரியவில்லை. பிற்பகல் மணி ஐந்தாயிற்று. பிட்டாய், பழம் இவற்றைத் தட்டில் எடுத்துக்கொண்டு விநோதினி உள்ளே நுழைந்தவண்ணம், "மணி ஐந்தாகி விட்டது. இன்னுமா படிக்கை? வெளியே எங்கும் போகவில்லையா?" என்று கேட்டுக்கொண்டே தட்டை அவன் முன்னே வைத்தாள்.

மஹேந்திரனின் முகம் சின்னதாகிவிட்டது. 'என்ன! ஏன் வெளியில் செல்லவில்லையென்பதற்குக் காரணம் இவளுக்குத் தெரியாதா? மற்றத்தினங்களைப் போலவா இன்றும்? எனது மன நிலையை இவள் அறியவில்லையா?' என்று எண்ணி ஏங்கினன். எங்கே தனது சகல நம்பிக்கையும் குலைந்துவிடுமோவென்று அஞ்சி முன் தினம் நடந்த சம்பாஷணையை ஞாபகமூட்டவும் துணிவின்றிப் பேசாதிருந்தான்.

தட்டிலிருக்கும் சிற்றுண்டிகளை அருந்தலானன். வெளியே காயவைத்திருந்த அவனுடைய துணிமணிகளையெல்லாம் எடுத்துவந்து ஒழுங்காய் மடித்து அவற்றை அலமாரிக்குள் அடுக்கி வைத்துக்கொண்டிருந்தாள் விநோதினி.

மஹேந்: விநோதினி, சற்றுப் பொறு. இதோ நானும் வந்து உனக்கு உதவிபுரிகிறேன்.

விநோ: தயை செய்து நீங்கள் என் உதவிக்கு மாத்திரம் வரவேண்டாம். வேறு என்ன வேண்டுமானலும் செய்யுங்கள்.

"என்னை எதற்கும் கையாலாகாதவனென்று நினைத்துவிட்டாய்போல் இருக்கிறது! அதையும் பரீக்ஷித்துப் பார்த்துவிடலாம்" என்று சொல்லி எழுந்து துணிகளைத் தாறுமாருக மடிக்க ஆரம்பித்தான். அதைப் பார்த்து விநோதினி, "போதும், நீங்கள் உதவிபுரியும் அழகு! எனக்கு ஒரு வேலைக்கு இருவேலை வைத்தீர்கள்?" என்று அவள் அத்துணியை வாங்கித் தானே மடித்து வைத்தாள்.

"சரி. நீ செய்வதைப் பார்த்தாவது நான் கற்றுக்கொள்ளுகிறேன்" என்று சொல்லி மஹேந்திரன் அலமாரி

யின் அருகில் போய் உட்கார்ந்தான். துணிகளை அலமாரியில் அடுக்கிவைக்கும் பாவனையாக விநோதினியும் அவன் பக்கமாய்க் குனிந்து குனிந்து துணிகளை வைத்துக்கொண்டிருந்தாள்.

அன்றைய சந்திப்பு இப்படி ஆரம்பமாகுமென்று மஹேந்திரன் எதிர்பார்த்திருக்கவில்லை. அவனுடைய கற்பனையின்படி எதுவும் நடக்குமென்று தோன்றவில்லை. அது கவிகள் வருணிக்கக் கூடியதாகவும் இருக்கவில்லை. ஆனாலும் அவன் முழுவதும் ஏமாற்றம் அடையவில்லை. அவள் அருகிலிருப்பதே அவனுக்குச் சுகத்தை அளித்தது. தனது மனோரதம் எப்படி ஈடேறும், அதற்கு எந்த உபாயத்தைக் கைக்கொள்ளலாம், எப்படிப் பேசவேண்டும், எப்படி நடக்கவேண்டும் என்றெல்லாம் அவன் மனத்தில் ஒத்திகை நடந்துகொண்டிருந்தது.

அச்சமயம் திடீரென்று ராஜலக்ஷ்மி உள்ளே பிரவேசித்து மஹேந்திரனைப் பார்த்து, "அவள் துணியை மடித்து வைத்துக் கொண்டிருக்கிறாள். நீ உட்கார்ந்து என்ன செய்துகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

அதற்குள் விநோதினி, "பாருங்கள் அம்மா, வேண்டுமென்றுவது நான் செய்யும் வேலையையும் கெடுத்துக் கொண்டு இங்கே உட்கார்ந்திருப்பதை!" என்றாள்.

மஹேந்: ஓஹோ! நான் உட்கார்ந்து உதவி செய்து கொண்டிருந்தால்.... ?

ராஜலக்ஷ்மி: போதும்! நீ உதவி செய்வது எனக்குத் தெரியாதா? செல்வப் பிள்ளையாக வளர்ந்த உனக்குச் சிறு வயது முதலே ஒரு வேலையும் செய்யத் தெரியாது.

தன் மகன் இப்படி வளர்ந்திருப்பதுபற்றி ராஜ லக்ஷ்மிக்குப் பெருமையே. தனது சக்தியற்ற நிலையில் புத்திரனுக்குச் செய்யவேண்டிய சகல சுசுருஷைகளையும் விநோதினியிடம் ஒப்பித்துவிட்டு அவள் கவலையற்று இருக்கலானாள். இப்பொழுது மஹேந்திரனும் முன்போல் இல்லாது விநோதினியிடம் ஆதரவாய் நடந்துகொள்ளுவதையும், அவள் ஊருக்குப்போகிறேனென்றபோது கூட அவளைத் தடைசெய்து நிறுத்தியதையும் காண ராஜலக்ஷ்மிக்கு மிகவும் சந்தோஷம். அவள் விநோதினியைப் பார்த்து, "இப்போது தைத்து வந்திருக்கும் அவனுடைய புதிய உடுப்புகளுக்கெல்லாம் உட்புறம் பெயர்க்குறி போட்டு வை. ஹும். நீ இந்த வீட்டில் அடிபெடுத்து வைத்தது முதல் உனக்கு ஓய்வோ சுகமோ கிடையாது. சதா உழைப்பும் கஷ்டமுந்தான்" என்று கூறிப் பெருமூச்சு விட்டாள்.

விநோ: நீங்கள் இப்படிச் சொல்லும்போது ஏதோ என்னை வேறாகப் பாவிப்பதுபோலப் படுகிறது.

ராஜலக்ஷ்மி அன்புடன், "இல்லையடீ; உன்னைப்போல் செய்யக்கூடியவர்கள் எனக்கு வேறு யார் இருக்கின்றனர்?" என்றாள்.

துணிகளெல்லாம் ஒழுங்காய் வைத்தானதும் ராஜ லக்ஷ்மி, "விநோதினி, இன்று சில பக்ஷணங்கள் செய்ய வேண்டும். அடுப்பைப் பற்றவைக்கட்டுமா? அல்லது உனக்கு வேறு ஏதேனும் வேலையிருக்கிறதோ?" என்று கேட்டாள்.

"வேலை ஒன்றுமில்லை. போகலாம் வாருங்கள்" என்று சொல்லி விநோதினி உடனே அவ்விடத்தை விட்டுச் செல்ல ஆயத்தமானாள்.

அதற்குள் மஹேந்திரன், "என்ன அம்மா, இப்பொழுதுதானே விநோதினி சதா வேலை செய்து கஷ்டப்படுவதாகக் கூறிப் பரிதாபப்பட்டாய்? உடனே நீயே அவளை வேலை செய்ய இழுத்துச் செல்கிறாயே?" என்றான்.

ராஜலக்ஷ்மி அன்புடன் விநோதினியின் மோவாயைப் பிடித்துக்கொண்டு, "என் விநோதினி தங்கமான பெண்ணன்றோ! அவளுக்கு எப்பொழுதும் வேலை செய்வதில் தான் விருப்பம்" என்றாள்.

மஹேந்: இன்று சாயங்காலம் வேறு வேலையொன்றும் இல்லாவிடில் விநோதினிக்கு ஒரு புஸ்தகம் படித்துக் காட்டலாம் என்று இருக்கிறேன்.

விநோ: மிகவும் சரி! அம்மா, நீங்களும் வாருங்கள்; நானும் வருகிறேன். சற்று நேரங்கழித்து இருவருமாக மஹேன் படிப்பதைக் கேட்கலாம்.

'பாவம்! அவன் தனியாயிருக்கிறான். அவனுக்குச் சந்தோஷமாய்ப் பொழுது போகவேண்டி நாமும் போய் உட்காரலாம்' என்று ராஜலக்ஷ்மி நினைத்துத் தானும் வரச் சம்மதித்தாள். ஆனால் மஹேந்திரனின் உற்சாகமெல்லாம் அன்று மண்ணாயிற்று. ராஜலக்ஷ்மியும் விநோதினியும் உள்ளே எழுந்துசென்றனர். மஹேந்திரன், "சாயங்காலம் வீட்டிலேயே இருக்கப்போவதில்லை நான். எங்காவது சென்று விடுகிறேன்" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான். உடனே அங்கவஸ்திரத்தை எடுத்துப் போட்டுக்கொண்டான். ஆனால் வெளியே செல்லவும் மனம் வரவில்லை. கூட்டில் அடைபட்ட புலிபோல் மாடி வராந்தாவிலேயே சுற்றிக்கொண்டிருந்தான். அடிக்கடி யாருடைய

வரவையோ எதிர்பார்த்து மாடிப்படியை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். கடைசியில் அலுத்துப்போய் நாற்காலியில் சாய்ந்தான். "இந்த அம்மா எவ்வளவு நேரந்தான் பக்ஷணங்கள் செய்வாள்? நான் இன்று அவைகளில் ஒன்றையும் தொடப்போவதில்லை. அப்பொழுதுதான் அவளுக்குப் புத்திவரும்" என்று தாயைக் கடிந்துகொண்டான்.

அன்று சாப்பிடும் சமயம் விநோதினியுடன் கூட ராஜலக்ஷ்மியும் இருந்தாள். மஹேந்திரன் முகத்தைச் சுளித்துக்கொண்டு கோபத்துடன் சாப்பிட உட்கார்ந்தான்.

"இது என்ன மஹேன், ஒன்றையுமே தொடவில்லையே?" என்றாள் விநோதினி. அதற்குள் ராஜலக்ஷ்மி கவலையுடன், "உடம்பு சரியாயில்லையா?" என்றாள்.

விநோதினி, "இவ்வளவு சிரமப்பட்டு நான் சமையல் செய்திருக்கிறேன். கொஞ்சம் சாப்பிடத்தான் வேண்டும் —ஒருவேளை நன்றாய்ச் செய்யவில்லையோ என்னவோ? அப்படியானால் வேண்டாம்; எறிந்துவிடுங்கள். நான் சொல்வதற்காகப் பலவந்தமாய்ச் சாப்பிடவேண்டாம்" என்று இவ்வாறு சொல்லிக்கொண் டிருக்கும்போதே மஹேந்திரன் தட்டில் ஒன்றுவிடாது எல்லாவற்றையும் சாப்பிட்டு முடித்து, "எனக்குப் பிடித்தவாறு இவ்வளவு பக்குவமாய் எல்லாம் செய்திருக்கும்போது நீ சாப்பிடாதே யென்றாலும் நான் கேட்பேனா?" என்று சொல்லி ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

போஜனம் முடிந்து மூவரும் உட்கார்ந்திருந்தனர். மஹேந்திரன் புஸ்தகம் படித்துக் காட்டுவதாகச் சொன்ன பிரஸ்தாபத்தை எடுக்கவில்லை.

ராஜலக்ஷ்மி: மஹேந், ஏதோ படித்துக் காட்டப் போவதாகச் சொன்னாயே; என்ன படிக்கப்போகிறாய்?

மஹேந்: அம்மா, அந்தப் புஸ்தகத்தில் ராமர், கிருஷ்ணர், பகவான் யாரைப்பற்றியும் ஒன்றும் இராது. உனக்கு அதெல்லாம் பிடிக்கவும் பிடிக்காது.

பிடிக்காதாவது! பாவம், மகன் தனியாயிருக்கிறான். அவனைச் சந்தோஷமாயிருக்கச் செய்வது தனது கடமை. அவன் படிப்பது புரியட்டும் புரியாதிருக்கட்டும்; அது எந்தப் பாஷையாகவாவது இருக்கட்டும்; அன்று உட்கார்ந்து கேட்பதென்று நிச்சயித்திருந்தாள் ராஜ லக்ஷ்மி.

விநோ: மஹேந், நான் சொல்வதைக் கேளுங்கள். சித்தியின் அறையில் வங்காளி சாந்தி சதகம் இருக்கிறது. மற்றப் புஸ்தகங்கள் எல்லாம் வேண்டியதில்லை. அதைப் படித்தால் சித்திக்கும் பிடிக்கும்; பொழுதும் போகும்.

மஹேந்திரன் பரிதபித்த பார்வையுடன் அவளை நோக்கினான். அச்சமயம் வேலைக்காரி வந்து பக்கத்து வீட்டுப் பாட்டி ராஜலக்ஷ்மியைக் காண வந்திருப்பதாகச் சொன்னாள். அக்கிழவி ராஜலக்ஷ்மியின் பரம சிநேகிதி. தினம் ஒருமுறை அவளைக் காணாவிடில் ராஜலக்ஷ்மிக்குத் தூக்கமே வராது. அப்படியிருந்தும் இன்று அவள் தன் புத்திரனைச் சந்தோஷப்படுத்த வேண்டி, "இன்று காண முடியாது. நாளைக்கு அவளை அவசியம் நான் வரச் சொல்வதாகச் சொல்" என்று ஆளிடம் சொல்லியனுப்பி விட்டாள்.

மஹேந்திரன் உடனே, "ஏன். அம்மா? போய்ப் பார்த்துப் பேசிவிட்டுத்தான் வாயேன்" என்றான்.

விநோதினி, "அம்மா, நீங்கள் இங்கேயே இருங்கள். நானே கீழேபோய் அவளுடன் பேசிவிட்டு வருகிறேன்" என்று சொல்லி எழுந்தாள்.

ராஜலக்ஷ்மியால் அந்தப் பாட்டியைப் பாராதிருக்கவும் முடியவில்லை. "இல்லை, இல்லை. நீ இங்கேயே இரு. மஹேந்திரன் படிக்க ஆரம்பிக்கட்டும். நான் போய் இரண்டொரு வார்த்தைகள் பேசி அவளை அனுப்பிவிட்டுவரப் பார்க்கிறேன். எனக்காகக் காத்துக்கொண்டு இருக்கவேண்டாம்" என்று சொல்லி எழுந்து போனாள்.

மஹேந்திரனால் பொறுக்கமுடியவில்லை. "விநோதினி, வேண்டுமென்றே என்னை ஏன் இப்படி வருத்துகிறாய்?" என்றான்.

விநோதினி ஆச்சரியத்துடன், "வருத்துகிறேனா! நான் இங்கிருப்பதே உங்களுக்குக் கஷ்டமாயிருந்தால் இதோ நான் போய்விடுகிறேன்" என்று எழுந்தாள்.

மஹேந்திரன் அவள் கையைப் பிடித்துக்கொண்டு, "இந்தமாதிரியேதான் நீ என்னை வாட்டி எரிக்கிறாய்" என்றான்.

விநோ: அடேயப்பா, எரிக்கும் சக்திகூட எனக்கு இருக்கிறதா! நீங்களும் ஒன்றும் சாமானியரல்ல. எதையும் தாங்கக்கூடிய வன்னெஞ்சமுடையவரே. முகத்தைப் பார்த்தால் ஒன்றும் வாடி வருந்திப் போய்விட்டதாகத் தெரியக் காணோம்.

மஹேந்திரன் துடிக்கும் தன் மார்பின்மீது விநோதினியின் கைகளைப் பிடித்து இழுத்துவைத்து, "முகத்தில் என்ன தெரியும்? இதோ பார்" என்றான்.

விநோதினி வீரிட்டுக் கத்தியதும் மஹேந்திரன் பயந்துபோய் அவள் கையை விட்டு விட்டு, "என்ன? என்ன?" என்று பரபரப்புடன் கேட்டான்.

விஹாரி வந்த அன்று அவளுக்குப் பட்ட காயத்திலிருந்து இன்னமும் ரத்தம் வடிவதைக் கண்டு மனம் பதைக்க, "நான் பார்க்கவில்லை; மறந்துவிட்டேன். என்னை மன்னிக்கவேண்டும். இதோ இப்பொழுதே மருந்து கொண்டுவந்து போடுகிறேன்" என்றான்.

விநோதினி பிடிவாதமாய், "மருந்து ஒன்றும் வேண்டாம். அது தானே ஆறட்டும்" என்றாள்.

மஹேந்: ஏன்?

விநோ: அதைப்பற்றி உங்களுக்கு என்ன? அடிபட்டது அப்படியே இருக்கட்டும்.

"ஆமாம், ஸ்திரீகளின் மன ஆழத்தை அறியக் கடவுளாலும் முடியாதென்பது உண்மைதான்! அப்படியிருக்கச் சாதாரண மனிதனால் எங்கே முடியப்போகிறது?" என்று தானே சொல்லிக்கொண்டான் மஹேந்திரன்.

விநோதினி போகும்போது மஹேந்திரன் அவளைத் தடுக்கவில்லை. அவளும் உள்ளே வேலையிருக்கிறதென்று சொல்லிப் போய்விட்டாள். உடனே, 'ஏன் அவளைப் போகவிட்டோம்! கீழேபோய்க் கூட்டி வரலாமா மறுபடியும்?' என்று நினைத்து ஓர் அடி எடுத்துவைத்தான். அதற்குள் மனம் மாறியது. அறைக்குள்ளேயே முன்னும் பின்னும் உலாவியவாறு யோசிக்கலானான்.

தான் மஹா பரிசுத்தமானவன், தன்னை அசைக்க யாராலும் முடியாதென்றிருந்த எண்ணமெல்லாம் இப்பொழுது பறந்து போயின. அதோடு தனக்குப் பிறரை

வசப்படுத்தக்கூடிய சக்தி இருப்பதாக இறுமாந்ததும் மண்ணுயிற்று. 'விநோதினி நம்மைத் தன் இஷ்டப்படி யெல்லாம் ஆட்டிவைத்தும் தன் அருகே மாத்திரம் நெருங்க விடவில்லை. நாம் இது ஒன்றில்தான் தோற்று விட்டோம். நம்முடைய மரியாதையை இழந்தும் பிரதி பலன் ஒன்றையும் காணோம்' என்று நினைத்தான்.

விஹாரிக்கு அடிக்கடி அவன் இலாகாவில் நல்லதேன் கிடைக்கும். அதை அவன் ராஜலக்ஷ்மிக்கும் கொண்டு வந்து கொடுப்பதுண்டு. இப்பொழுதும் அவன் அப்படியே ஆளிடம் கொடுத்தனுப்பியிருந்தான். விநோதினி தேனை வாங்கி உள்ளே வைத்துவிட்டு ராஜலக்ஷ்மியிடம் இதைத் தெரிவித்து மிகவும் அனுதாபத்துடன், "அம்மா, விஹாரி பாபுவுக்கு உற்றார், உறவினர், பெற்றோர், எவரும் இல்லை. அவர் சிறுவயது முதல் உங்களையே தாயென்று மகிழ்ந்து போற்றி வருகிறார்" என்றாள்.

ராஜலக்ஷ்மி விஹாரியை நேசித்தாலும் மஹேந்திரனை நேசிப்பது போன்று ஒருநாளும் அவனிடம் அன்பு பாராட்டியதில்லை. இன்று விநோதினி 'நீதான் அவனுக்குத் தாய்' என்று சொன்னது அவளுக்கு அவன்பாலுள்ள அன்பை அதிகரிக்கச் செய்தது. தான் சற்று நோயுற்றாலும் அவன் குறிப்பறிந்து பணிவிடை செய்ததெல்லாம் அவள் ஞாபகத்திற்கு வந்தன. சிறிதும் நன்றியறிதல் இன்றித் தான் இப்படி அவனை மறந்திருப்பதற்காகத் தன்னையே நொந்து கொண்டாள் ராஜலக்ஷ்மி. வீட்டிலிருந்தவரை அன்னபூர்ணி விஹாரியிடம் மிகவும் அன்புகாட்டியது ராஜலக்ஷ்மியின் கண்ணை உறுத்தியது. இப்பொழுதோ தன் குற்றம் தன்னையே சுடவே ராஜலக்ஷ்மி பெருமூச்செறிந்து

கொண்டே, "விஹாரிக்கு நான் மிகவுட —மைப்பட்டிருக்கிறேன். என் புத்திரனைக் காட்டிலும் அவன் எனக்கு அதிக அன்புடனும் ஆதரவுடனும் ஊழியம் புரிந்திருக்கிறான். யாதொரு பிரதிபலனும் அடையாவிடினும் அவனுக்கு என்மீது பக்தியும் அன்பும் ஒருநாளும் மாறியது இல்லை" என்று உள்ளுறச் சொல்லிக்கொண்டாள்.

விநோதினி, "அம்மா, உங்கள் கைச்சமையல் என்றால் அவருக்கு எவ்வளவு இஷ்டம்!" என்றாள்.

இதைக் கேட்டதும் ராஜலக்ஷ்மிக்குப் பெருமை தாங்கவில்லை. அவள் உடனே, "அவனுக்கு வேறு யாருடைய சமையலும் பிடிக்காது" என்று மொழிந்தாள். வெகுநாட்களாக விஹாரி வீட்டுப்பக்கம் வராதது அவள் மனத்தை வருத்தியது. "இதற்குக் காரணம் ஏதாயிருக்கலாம்?" என்று அவள் விநோதினியைக் கேட்டாள்.

விநோதினி, "நானும் அதேதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் பிள்ளையோ விவாகமானது முதல் மனைவியின் வலையில் மயங்கி விழுந்து உற்றார் நண்பர் யாரையும் கவனிப்பது இல்லை. அப்படியிருந்தால் யார் வருவார்கள்?" என்றாள்.

ராஜலக்ஷ்மிக்கும் அவள் சொல்வது சரியென்றே தோன்றியது. அவளுடைய எண்ணத்திற்கும் அனுபவத்திற்கும் இது ஒத்ததாயிருந்தது. தன்னலம் சிறிதுமின்றி மஹேந்திரனது நன்மைக்காகவே உழைத்த விஹாரியினிடம் அவளுக்கு இரக்கம் அதிகரித்தது. அவனிடம் மஹேந்திரன் இப்படிப் பராமுகமாயிருப்பது அநியாயமென்று கருதினாள்.

விநோதினி, "நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. அவரை இங்கேயே சாப்பிட வருமாறு அழைத்தால் அவருக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கும்" என்றாள்.

ராஜலக்ஷ்மி: நீ சொல்வது மிகவும் சரி. மஹேந்திர னிடம் சொல்லி அவனுக்கு ஒரு சீட்டு எழுதி அனுப்பச் சொல்லலாம்.

விநோ: நீங்களே அனுப்பிவிடுங்களேன்.

ராஜலக்ஷ்மி: எனக்கு என்ன எழுதப் படிக்கவா தெரியும்?

விநோதினி, "உங்களுக்காக நானே எழுதுகிறேன்" என்று சொல்லி ராஜலக்ஷ்மியின் பெயரால் தானே ஒரு கடிதம் எழுதி விஹாரிக்கு அனுப்பிவைத்தாள்.

மஹேந்திரன் அந்த ஞாயிற்றுக்கிழமையை வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்தான். சனிக்கிழமை இரவி லிருந்தே அவன் அதைப்பற்றிக் கற்பனை செய்து ஆனந் தித்தான். அவனது மனோரதம் எதுவும் இதுவரை ஈடேறாவிடினும் அவன் அதனால் ஏமாற்றமடையவில்லை. ஞாயிற்றுக்கிழமை காலையில் எழுந்திருந்ததுமே எல்லாம் ஆனந்தமயமாகவும் ரம்மியமாகவும் காணப்பட்டன அவனுக்கு.

ஆனால் இது என்ன விசேஷம் இன்று? இன்று நோன்பு, பண்டிகை ஒன்றும் இல்லாதிருக்கவும் ராஜலக்ஷ்மி என்றுமில்லாத சுறுசுறுப்போடு விநோதினியுடன் சமைய லறையில் வேலை செய்துகொண்டிருக்கக் கண்டான். தட புடலாய் வேலை நடந்துகொண்டிருந்தது. மணி பத்தடித் தும் விநோதினியின் தரிசனம் ஒரு முறையாவது கிடைக்க வில்லை. மஹேந்திரனால் பொறுக்க முடியவில்லை. கீழே

இறங்கிவந்தான். ராஜலக்ஷ்மி விதவிதமாய்ப் பக்ஷணங்கள் செய்துகொண்டிருந்தாள். விநோதினி ஓடியாடி ஒரு நிமிஷம் நில்லாமல் அவளுக்கு வேண்டிய உதவி செய்துகொண்டிருந்தாள். "என்ன விசேஷம் இன்று? இவ்வளவு தடபுடல் எதற்கு?" என்று கேட்டான் மஹேந்திரன்.

ராஜலக்ஷ்மி ஆச்சரியத்துடன், "என்ன, விநோதினி உனக்குச் சொல்லவில்லையா! விஹாரிக்கு இங்கே இன்று விருந்து" என்றாள்.

இதைக் கேட்டதும் மஹேந்திரனுக்குத் தேகம் முழுவதும் பற்றியெரிவதுபோல் இருந்தது. "அம்மா; நான் இன்று இங்கே இருக்கமுடியாது" என்றான்.

ராஜலக்ஷ்மி திடுக்கிட்டு, "ஏன், எங்கே போக வேண்டும்?" என்று கேட்டாள்.

மஹேந்: முக்கிய வேலையாய்ச் சிநேகிதன் ஒருவன் வீட்டிற்குச் செல்லவேண்டும்.

ராஜலக்ஷ்மி: இதோ சமையலாகிவிட்டது. சாப்பிட்டே போகலாம்.

மஹேந்: எனக்குச் சாப்பாடும் இன்று அங்கேயே தான்.

விநோதினி மஹேந்திரனை ஒருமுறை முறைத்துப் பார்த்துவிட்டு ராஜலக்ஷ்மியிடம், "சிநேகிதர் வீட்டில் விருந்துக்கு அழைத்திருந்தால் போகட்டுமே. விஹாரி பாபு மாத்திரம் தனியாகவே சாப்பிடுகிறார்" என்றாள்.

ஆனால் தாயின் மனம் கேட்கவில்லை. தன் கையால் அன்று விதவிதமாய்ச் சமைத்திருக்க, மஹேந்திரன் அவற்றை உண்ணுவிடில் அவளுக்குத் திருப்தியேது? பல

விதமாய் அவனை வேண்டினாள். அவள் வேண்ட வேண்ட மஹேந்திரனும் பிடிவாதமாய், "நான் சிநேகிதன் வீட்டிற்குத்தான் சாப்பாட்டிற்குப் போவேன்" என்றான்.

"விஹாரியை அழைப்பதற்கு முன் எனக்கு ஏன் தெரிவிக்கவில்லை?" என்றெல்லாம் தாயைக் கடிந்து கொண்டான்.

தன் தாயைத் தண்டிக்கவேண்டியே மஹேந்திரன் இப்படிப் பேசினான். ராஜலக்ஷ்மிக்கு அன்றிருந்த உற்சாகமெல்லாம் பறந்து போயிற்று. அவள் மனமொடிந்தாள்.

"அம்மா, நீங்கள் வருந்தாதேயுங்கள். மஹேன் சொல்வதெல்லாம் வீண்புரட்டு. அவர் இன்று வெளியில் எங்கும் போஜனத்திற்காகச் செல்லப் போவதில்லை" என்றாள் விநோதினி.

ராஜலக்ஷ்மி: உனக்கு அவன் குணம் தெரியாது. அவன் பிடித்ததைச் சாதித்தே தீருவான்.

ஆனால் முடிவில் விநோதினி சொன்னதுதான் நடந்தது. ராஜலக்ஷ்மியைக் காட்டிலும் அவள் மஹேந்திரனை நன்கு அறிந்திருந்தாள். அவள்தான் அன்றைய விருந்திற்குக் காரணமென்று மஹேந்திரன் நன்றாய் அறிந்து கொள்ளவே, அவன் மனத்தில் பொறாமைத் தீ கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது. அன்று விஹாரியும் விநோதினியும் ஒருவருக்கொருவர் எப்படி நடந்துகொள்ளுகிறார் என்பதைப் பார்ப்பதற்காகவாவது அவன் வீட்டில் இருக்க வேண்டுமல்லவா? அதனால் இன்னும் மனமெரிந்தாலும் பாதகமில்லை, வீட்டிலேயேதான் இருப்பது என்று நிச்சயித்துக் கொண்டான்.

வெகுநாட் கழித்துப் புதுவிருந்தாளி போல் விஹாரி அன்று வந்து சேர்ந்தான். அவ்வீட்டுப் பிள்ளையைப் போல் வளர்ந்த இடம், விளையாடிய இடம் இவற்றைக் காண அவனுக்கு மனவெழுச்சி ஏற்பட்டது. தன்னை அறியாமல் அவன் கண்களில் நீர் பெருகியது. உடனே கண்களைத் துடைத்துக்கொண்டு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டான். முகத்தில் புன்னகை தவழ உள்ளே நுழைந்தான். ராஜலக்ஷ்மியைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். தினமும் வந்துகொண்டிருந்த நாட்களில் அவன் இப்படிச் செய்ததில்லை. வெகுநாளைக்குப் பிறகு இன்று அவளைக் கண்டது அவனை அப்படிச் செய்யத் தூண்டியது. ராஜலக்ஷ்மியும் அவனை மனமார ஆசீர்வதித்து வாழ்த்தி, "விஹாரி, இவ்வளவு நாட்களாய் ஏன் வரவில்லை? ஒவ்வொருநாளும் நீ வரமாட்டாயாவென்று நான் எதிர்பார்த்துக்கொண்டேயிருந்தேனே" என்றாள்.

விஹாரி சிரித்துக்கொண்டே, "தினமும் வந்தால் என்னை நீங்கள் ஆவலுடன் எதிர்பார்க்கமாட்டீர்களல்லவா? மஹேந்திரன் எங்கே?" என்றான்.

ராஜலக்ஷ்மி முகவாட்டத்துடன், "தவிர்க்கமுடியாத முக்கிய அலுவலாய் வேறு எங்கோ சாப்பிடப் போயிருக்கிறான்" என்றாள்.

விஹாரியின் மனம் புண்பட்டது. சிறுவயது முதல் கொண்ட தோழமைக்கு இதுதானா பலன் என்று வருந்தினான். தனது வருத்தத்தை மறைக்க முயன்றான். "அம்மா, இன்று எனக்காக என்ன என்ன செய்திருக்கிறீர்கள்? சொல்லுங்களேன், கேட்போம்" என்று வேடிக்கையாக மொழிந்தான்.

ராஜலக்ஷ்மியின் சமையலைப்பற்றிப் புகழ்வதில் அவனுக்கு எப்பொழுதும் ஒரு தனி ஸந்தோஷம். இதில் ராஜலக்ஷ்மிக்கும் அபார ஸந்தோஷம். இன்றும் அவன் வழக்கம்போல் இப்படியே பேசி ராஜலக்ஷ்மியைக் களிப்பித்தான்.

அச்சமயம் மஹேந்திரன் அங்கே தோன்றி, "என்ன விஹாரி, சௌக்கியமா?" என்று கேட்டான்.

ராஜலக்ஷ்மி திடுக்கிட்டு, "நீ இன்னும் சாப்பிடப் போகவில்லையா?" என்றாள்.

மஹேந்திரனுக்கு வெட்கம். ஆனாலும் அதை மறைத்துக் கொண்டு, "இல்லை; 'வரமுடியாது, முக்கிய வேலை யிருக்கிறது' என்று எழுதி அனுப்பிவிட்டேன்" என்றான்.

விநோதினியும் அப்பொழுது வந்துசேர்ந்தாள். ஆனால் விஹாரி அவளுடன் ஒன்றும் பேசவில்லை. மஹேந்திரனும் விநோதினியும் சேர்ந்து அளித்த அன்றைய காட்சி விஹாரியின் மனத்தைவிட்டு அகலவில்லை.

விநோதினி விஹாரியின் அருகில் நின்றுகொண்டு, "என்னை அடையாளமே தெரியவில்லைபோல் இருக்கிறது!" என்றாள்.

விஹாரி: எல்லாரையுமா எப்படி நினைவில் வைத்துக் கொள்ள முடியும்?

விநோ: முடியாமல் என்ன? மனமுண்டானால் முடியும்!

நண்பர்கள் இருவரும் போஜனத்திற்கு உட்கார்ந்தனர். ராஜலக்ஷ்மி பக்கத்தில் உட்கார்ந்து அவர்களுக்கு எல்லாம் பரிமாறும்படி சொல்லிக்கொண்டிருந்தாள்.

விநோதினி பரிமாறிக்கொண்டிருந்தாள். மஹேந்திரனது மனம் அன்று சாப்பாட்டின் மீது செல்லவில்லை. விநோதினி விஹாரிக்கு எப்படிப் பரிமாறுகிறாள், அவனுக்கு எதெது அதிகம் போடுகிறாள், எவ்வளவு ஆதரவுடன் போடுகிறாள், அதனால் அவள் அடையும் இன்பம் என்ன, இவற்றையே கவனித்துக்கொண்டிருந்தான். விஹாரிக்கு அதிக உபசாரம் நடப்பதைக் காணும்போது அவனுக்குப் பொறாமை உண்டாயிற்று. ஆனால் தான் வீட்டிலேயே இருப்பவன், விஹாரியோ விருந்தாளி என்று இதற்குச் சமாதானம் கூறப்படும் என்பதை அவன் அறிவான்.

அன்று அதிகமாயிருந்த அரிதான தின்பண்டமொன்றை விநோதினி விஹாரியின் இலையில் போடப் போனாள். அதற்குள் அவன், "மஹேந்திரனுக்கு இது அதிகம் பிடிக்கும். எனக்கு வேண்டாம்; அவனுக்குப் போடு" என்றான்.

மஹேந்திரனா போட்டுக்கொள்வான்! அவன், "எனக்கு வேண்டாம்" என்றான். கடைசியில் விநோதினி அதை விஹாரிக்கே போட்டுவிட்டாள். மஹேந்திரனின் மனத்தை இதுவும் சேர்ந்து உறுத்தியது.

சாப்பாடு முடிந்தது. விஹாரி வீட்டிற்குச் செல்ல எழுந்திருந்தான். அதற்குள் விநோதினி, "விஹாரிபாபு, இப்பொழுதே போகவேண்டாம். சற்று மாடியில் போய் உட்காருங்கள்" என்றாள்.

விஹாரி: இன்னும் சாப்பிடப் போகவில்லையா?

விநோ: இல்லை. இன்று ஏகாதசி.

விஹாரியின் முகத்தில் ஒரு பரிகாசச் சிரிப்புக் காணப்பட்டது. விநோதினியைப் பார்த்து 'உனக்கு இதுவும் வேண்டியிருக்கிறதா?' என்று சொல்வதுபோல் இருந்தது அச்சிரிப்பு.

விநோதினி அதை அறியாமலில்லை. அவளால் தனது கையில் ஏற்பட்ட காயத்தை எப்படிச் சகித்துக்கொண்டாளோ அப்படியே அதையும் பொறுத்துக்கொண்டாள். அவள், அவனை எப்படியாவது சற்றுநேரம் இருந்துவிட்டுப் போகுமாறு வேண்டினாள். அதற்குள் மஹேந்திரன் சினத்துடன், "உங்களுக்கெல்லாம் புத்தியே கிடையாது. வேலையோ வேலையில்லையோ, விருப்பமோ விருப்பமில்லையோ, நீங்கள் சொல்வதுபோலெல்லாம் செய்தாக வேண்டும்போலிருக்கிறது. இவ்வளவு அதிக ஆதரவிற்கு அர்த்தமே எனக்குப் புரியவில்லை" என்றான் விநோதினியைப் பார்த்து.

விநோதினி உரக்கச் சிரித்து விஹாரியினிடம், "கேட்டீர்களா, உங்கள் நண்பர் பேச்சை? ஆதரவிற்கு அர்த்தம் தெரியவில்லையாம்! அகராதியில் ஆதரவிற்கு அர்த்தம் ஆதரவுதான்! வேறென்ன? (மஹேந்திரனைப் பார்த்து) அதிக ஆதரவிற்கு அர்த்தமும் உங்களுக்குத் தெரியாமலிராதென்று நம்புகிறேன்" என்றாள்.

விஹாரி விநோதினிக்கு ஒரு பதிலும் சொல்லவில்லை. "உன்னிடம் ஒரு வார்த்தை பேசவேண்டும். சற்று வெளியே வா" என்று மஹேந்திரனை அழைத்துக்கொண்டு அவன் வெளியே சென்றான். விநோதினி வெட்டவெளியைப் பார்த்துக்கொண்டு அப்படியே ஸ்தம்பித்து நின்றாள்.

வெளியே வந்த விஹாரி, "நண்பா, நமது நட்பு இப்படியா முறிய வேண்டும்?" என்று வருந்திக் கேட்டான்.

விநோதினியின் சொற்களால் மஹேந்திரனின் மனம் இன்னமும் புழுங்கிக்கொண்டிருந்தது. அவன் எரிச்சலுடன், "நட்பு முறிந்தால் உனக்கு நல்லதுதான். ஆனால் எனக்கு அப்படியில்லை. ஆனாலும் எனது வீட்டு விஷயங்களில் பிறரொருவரும் தலையிட நான் இடங்கொடுக்கப் போவதில்லை" என்றான்.

விஹாரி பதில் பேசாமல் சென்றுவிட்டான்.

மஹேந்திரன் உள்ளத்தில் பொறாமைத்தீ சுடர்விட்டு எரிந்தது. இனி விநோதினியின் முகத்திலேயே விழிக்கக் கூடாதென்று நினைத்தான். ஆனால் அவ்வளவு மனோதிடம் ஏது? சிறிது நேரத்திற்கெல்லாம் அவ்வெண்ணம் மாயமாய் மறைந்தது. அவளைக் காண்பதற்கு மனம் துடித்தது. குட்டிபோட்ட பூனைபோல் மேலுக்கும் கீழிற்கும் சுற்றிக் கொண்டிருந்தான்.

---

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

"சித்தி, எப்பொழுதாவது நீ சித்தப்பாவைப் பற்றி நினைப்பதுண்டா?" என்று ஆசா அன்னபூரணியைக் கேட்டாள்.

அன்ன: அம்மா, நான் பதினோராவது வயதிலேயே விதவையாகிவிட்டேன். என் புருஷரின் உருவச் சாயை கனவிலே கண்டதுபோல் ஞாபகத்திற்கு வருகிறது.

ஆசா: பின் நீ யாரைப்பற்றிய தியானத்தில் சதா ஆழ்ந்திருக்கிறாய்?

அன்ன: என் புருஷர் யாருடைய சரணாரவிந்தத்தை அடைந்தாரோ அப்பகவானைப் பற்றித்தான் சதா தியானிக்கிறேன்.

ஆசா: இதனால் உனக்கு என்ன சுகம் கிடைக்கிறது?

அன்னபூரணி, ஆசாவின் தோள்மேல் அன்புடன் கையைவைத்து, "குழந்தாய், எனது மனோநிலையை நீ எப்படி அறிவாய்? நான் எப்படிப் பகவானை அறிகிறேனோ அப்படியே அவரும் என்னை அறிகிறார்" என்றாள்.

'நானும் இரவு பகலாக என் புருஷரைப்பற்றிய நினைவாகவே இருக்கிறேன்; ஆனால் அவர் என் மனோநிலையை அறிவாரா? எனக்கு நன்றாகக் கடிதம் எழுதக் கூடத் தெரியவில்லை யென்றுதான் பதில்கூட எழுதவில்லையோ?' என்று ஆசா சிந்திக்கலானாள்.

அவளுக்கு மஹேந்திரனிடமிருந்து கடிதமே வரவில்லை. 'ஆஹா, என் தோழி மாத்திரம் என் அருகில் இருந்தால் என்மனோநிலையை அறிந்து அப்படியே கடிதம் எழுதிவைத்திருப்பாளே' என்று ஆசா எண்ணி வருந்தினாள்.

மனத்தில் இருப்பதை அப்படியே எடுத்து விளக்கி நன்றாய்க் கடிதம் எழுதவேண்டுமென்று ஆசா எவ்வளவோ முயன்றாள். எழுத்து நன்றா யிருக்க வேண்டுமென்று எவ்வளவு பாடுபட்டும் அது சர்வகோணலாகவே வரும். தனது மன நிலையை விளக்கவோ அவளுக்கு வார்த்தைகளே அகப்படா. 'என் காதல்' என்று ஆரம்பித்து உடனே கிழே கையெழுத்தும் போட்டுத் தான் எழுதும் கடிதங்

களிலிருந்து அவளது உள்ளத்தை அறியக்கூடிய சக்தி மஹேந்திரனுக்கு இருக்குமானால் அப்போது அவற்றால் பயனுண்டு என்று ஆசா நினைத்தாள். இவ்வளவு அன்பை யளித்த பகவான் அதைச் சொற்களால் விளக்க அவளுக்குப் பாஷா ஞானம் ஏன் அளிக்கவில்லையோ?

சாயங்கால ஜபம் முடிந்து அன்னபூரணி உட்கார்ந்திருந்தாள். அருகில் மெள்ள அவள் காலைப் பிடித்துக் கொண்டு ஆசாவும் உட்கார்ந்திருந்தாள். சிறிதுநேரம் பேசாதிருந்து பிறகு அவள், "சித்தி, புருஷனைத் தெய்வமென்று நினைத்து வழிபட வேண்டுமென்று நீ சொல்லுகிறாயே. மனைவி அறிவற்றவளாயும் கணவனை வழிபடத் தெரியாத மூடமாயுமிருந்தால் என்ன செய்வது?" என்று கேட்டாள்.

அன்னபூரணி ஆசாவின் முகத்தைச் சற்று உற்று நோக்கினாள். பிறகு அன்பு ததும்ப, "குழந்தாய், நானும் அறிவிலிதான்; ஆனாலும் கடவுளைப் பூஜித்து வழிபட்டுத்தான் வருகிறேன்" என்றாள்.

ஆசா: கடவுள் உன் மனத்தை அறிவார்போல் இருக்கிறது. அதனால் உனது வழிபாட்டால் அவர் சந்தோஷம் அடையலாம். வேறு ஒரு முழுமூடத்தின் பக்தியால் அவர் சந்தோஷமடையா விட்டாலோ?

அன்ன: எல்லாரையும் திருப்திப்படுத்துவதென்பது யாவராலும் முடியாது. பத்தினி தன் பதிக்குச் செய்ய வேண்டிய கடமைகளை வழுவின்றிப் பக்தியுடன் செய்வாளானால் ஒருவேளை அக்கணவன் அவளது சேவையைத் திரஸ்கரித்தாலும், கடவுள் அச்சமயம் அதைத் தாமே ஏற்று அவ்வுத்தமியை ரட்சிப்பார்.

ஆசா பதில் பேசவில்லை. அன்னபூரணி சொல்வதன் அர்த்தமே அவளுக்கு விளங்கவில்லை. அதனால் அவள் மனத்திற்குச் சாந்தியோ சமாதானமோ ஏற்படவில்லை. கணவன் திரஸ்கரித்த சேவையைக் கடவுள் எப்படி ஏற்கக் கூடுமென்று திகைத்தாள்.

அன்னபூரணி அவளை அருகில் அணைத்து முத்த மிட்டு, "கண்ணே, கஷ்டத்தினால் ஏற்படும் அநுபவமும் நீதியும் பேசிக் கேட்பதனால் மட்டும் ஒருநாளும் ஏற்படா. உன்னைப்போன்ற வயதில் நானும் வாழ்வில் அநேக கஷ்டங் களை அனுபவித்தேன். எவ்வளவோ பாடுபட்டும் எனது சேவையால் யாரும் திருப்தியடைந்ததாக எனக்குத் தெரிய வில்லை. நான் நன்மையையே செய்தாலும் அது அவர் களுக்குத் தீமையாகவே தோன்றும். எனது பிரயாசை யெல்லாம் வீணென்று தோன்றவே வாழ்விலேயேவெறுப்பு உண்டாயிற்று. குடும்ப பந்தத்திலிருந்து விலகிக் காசிக்கு வந்துவிட்டேன். ஆனால் இப்பொழுது என் எண்ணம் அப்படியில்லை. எனது மனச்சாட்சிக்கு விரோதமாக நான் எதுவும் செய்யவில்லை. நான் எனது கடமையைச் சரிவர நிறைவேற்றிவிட்டேன். இனிக் கடவுளின் ஆக்ஞைப்படி நடக்கட்டும். என்னையே நான் கடவுளுக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். இனி எனக்குச் சுகதுக்கம் எல்லாம் ஒன்றுதான்" என்றாள்.

அன்று இரவு முழுதும் ஆசாவுக்கு ஒரே குழப்பந் தான். அன்னபூரணி சொல்லியதில் அநேக விஷயம் அவள் புத்திக்கு எட்டவில்லை. ஆனாலும், மனித யத்தனத்தையும் மீறிய சக்தி ஒன்று இருப்பதையும் அதுதான் கடவுள் என்பதையும் அறிந்தாள். சர்வவல்லமையுள்ள அக்கடவு ளைப் பன்முறையும் மனமார வணங்கினாள். களங்கமற்ற

தன்மையுடன் அவள், "ஹே சர்வரக்ஷகா, எனக்கு உன்னை அறியும் சக்தி இல்லை. எனக்கு என் பதிதான் தெய்வம். நான் இப்படி நினைப்பது தவருனல் க்ஷமிக்கவேண்டும். என் பணிவிடையை ஏற்குமாறு என் கணவருக்கு நீதான் புத்தி புகட்டவேண்டும். அவர் அதை ஏற்காவிடில் நான் மனமுடைந்து மரிக்கவேண்டியதுதான். என் சித்தியைப் போல் நான் புண்ணியாத்மா அல்ல. உன்னையே சரணமென்று நம்பி வாழ எனக்குத் தெரியாது. எனது மனோரதத்தை ஈடேற்றவேண்டும்" என்று கடவுளைத் துதித்தாள்.

அவளுடைய பெரியப்பா கல்கத்தாவுக்குத் திரும்பி வரப் புறப்பட்டார். ஆசாவும் அவர்கூடப் புறப்படத் தயாராளுள். புறப்படுவதற்குமுன் அன்னபூரணி அவளைத் தழுவி முத்தமிட்டு, "ஆசா, உலகத்தின் கஷ்ட துக்கங்கள் உன்னை அணுகாமல் தடுக்க எனக்குச் சக்தியில்லை. ஒன்று மாத்திரம் மறக்காதே; என்ன கஷ்டம் வந்தபோதிலும் தைரியத்தைமட்டும் இழக்காமல் திடமாய் உனது கடமையைச் செய்து வா" என்றாள்.

"உன் ஆசீர்வாதத்தால் அப்படியே நடப்பேன்" என்று சொல்லி ஆசா அன்னபூரணியை நமஸ்கரிக்கப் புறப்பட்டாள்.

---

## முப்பதாம் அத்தியாயம்

ஆசா கல்கத்தா வந்து சேர்ந்தாள். "இத்தனை நாள் ஊருக்குப் போய் இருந்தாய்; ஒரு கடிதம் எழுதினல் என்ன?" என்றாள் விநோதினி.

ஆசா: நீ ஏன் எழுதவில்லை?

விநோ: நான் ஏன் எழுதுவேன்? நீ தானே முதலில் எழுதுவதாகச் சொன்னாய்?

ஆசா வெட்கித் தனது குற்றத்தை ஒப்புக்கொண்டாள். "சகோதரி, எனக்கு நன்றாய் எழுதத் தெரியாதென்று உனக்குத்தான் தெரியுமே. அதுவும் கல்வியில் தேர்ந்த உன்போன்றவளுக்கு எழுத எனக்கு வெட்கமாயிருக்கிறது" என்றாள்.

தோழிகள் இருவரும் சிரித்துப் பேசிக்கொண்டனர்.

விநோ: சதா கணவருடன் கூடவேயிருந்து நீ அவரை நன்றாகக் கெடுத்து வைத்திருக்கிறாயடீ, அம்மா! அதனால்தான் அவர் யாராவது தம்மோடு இருந்து கொண்டே இருக்கவேண்டும் என்கிறார்.

ஆசா: நான் உன்னிடம் அவரை ஒப்பித்தது அதற்காகத்தான்; கூட இருந்து என்ன செய்யவேண்டும், எப்படிச் செய்யவேண்டும் என்பதெல்லாம் உனக்குத் தெரியுமென்றுதான்.

விநோ: பகலில் என்னவோ காலேஜிற்குச் சென்றுவிடுவார். சாயங்காலம் வீட்டிற்குத் திரும்பிவிட்டால் பாடுதான். படிக்கவேண்டும், பேசவேண்டும், கூடவேயிருக்கவேண்டும்; சதா இதுதான்!

ஆசா: நீ யாவரையும் வசீகரித்துவிடுவாய். உன்னை விட்டுப் பிரிய யாருக்குத்தான் மனம் வரும்.

விநோ: பத்திரம்! உன் புருஷனின் நடத்தையைக் காணும்போது எனக்கும் ஒவ்வொரு சமயம் வசீகரண வித்தை நாம் கற்றிருக்கிறோமோவென்றுகூடச் சந்தேகமாய்த்தான் இருக்கிறது.

ஆசா உரக்கச் சிரித்து, "உனக்கு அந்த வித்தை தெரியாமல் வேறு யாருக்குத் தெரியும்? எனக்கு மாத்திரம் அது சிறிதாவது தெரிந்திருந்தால்—" என்று சொல்லும்போது விநோதினி, "உனக்கு எதற்கு? யார் குடியைக் கெடுக்க? உனக்குக் கிடைத்தவரை நீ ஜாக்ரதை யாகக் காப்பாற்றிக்கொள், போதும். பிறரை வசீகரித்து உனக்கு என்ன ஆகவேண்டும்? அதனால் துன்பந்தான்" என்றாள்.

ஆசா விநோதினியின் வாயைப் பொத்தி, "என்ன உளறுகிறாய்? போதும் வாயை மூடு!" என்றாள்.

காசியிலிருந்து திரும்பிய பிறகு ஆசா மஹேந்திரனைச் சந்தித்ததும் அவன், "சித்தியிடம் போயிருந்த சந்தோஷத்தில் ஒரு சுற்றுப் பருத்து வந்திருக்கிறாயே?" என்றான்.

நாணத்தினால் ஆசாவின் முகம் சிவந்தது. தான் பருத்ததும் அவனுக்கு ஒரு தவறு எனத் தோன்றியது. அவள் பட்ட மனக்கவலை அவனுக்குத் தெரியும். அப்படி யிருந்தும் அம்மோசக்கார சரீரம் தன்னையும் ஏமாற்றிப் பருத்துவிட்டதாக அவள் நினைத்தாள். மனநிலையை வெளியிடச் சொற் சாதுரியந்தான் இல்லையென்றால் சரீரமுமா இப்படி ஏமாற்றவேண்டும் என்று வெட்கி வருந்தினாள். என்ன பேசுவதென்று அவளுக்குத் தெரிய வில்லை. மெள்ள, "நீங்கள் எப்படியிருக்கிறீர்கள்?" என்றாள்.

முன்பு இப்படி அவள் கேட்டிருந்தால், "நீயின்றி உயிர்தரிக்க முடியவில்லை. செத்தே போய்விட்டேன்" என்றெல்லாம் மஹேந்திரன் வேடிக்கையாகச் சொல்லி

யிருப்பான். ஆனால் இன்று அவனால் வேடிக்கையோ சிரிப்போ கொள்ள முடியவில்லை. "நன்றாய்த்தான் இருக்கிறேன்" என்று சொல்லி நிறுத்திக்கொண்டான்.

ஆசா தலை நிமிர்ந்து அவனை நோக்கினாள். முகம் வாடி இளைத்திருந்தான் அவன். சொல்ல முடியாத வேதனையால் வருந்துபவனைப் போல் காணப்பட்டான்.

ஆசாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'நான் ஏன் இவரைவிட்டுக் காசிக்குச் சென்றேன். எனது பிரிவின் துக்கமன்றோ இவரை இந்த நிலைக்குக் கொண்டுவந்தது?' என்று தன்னையே நொந்து சபித்துக்கொண்டாள்.

மஹேந்திரனுக்கோ அவளுடன் என்ன பேசுவதென்று தோன்றவில்லை. கடைசியில், "சித்தி சௌக்கியமாயிருக்கிறாளா?" என்றான்.

அதற்குமேல் பேச அவனுக்கு வார்த்தைகளே அகப்படவில்லை. பக்கத்தில் கிடந்த ஒரு பழைய பத்திரிகையை எடுத்து வைத்துக்கொண்டு படிப்பது போல் பாவனை செய்தான். தலையைக் குனிந்தவண்ணம் ஆசா மனத்திற்குள்ளாகவே, 'இவ்வளவு நாட்கழித்துச் சந்தித்திருக்கிறோம். மனம் விட்டுப் பேசவுமில்லை. என்பக்கம் திரும்பிக்கூடச் சரியாய்ப் பார்க்கவுமில்லை. என்ன காரணம்? கடிதம் எழுதவில்லையென்று கோபமோ? அல்லது சித்தியிடம் வெகுநாள் தங்கி விட்டேனென்றோ?' என்று எண்ணிக் குற்றம் யாவும் தனதாகவே கருதி வருந்தினாள்.

மஹேந்திரன் காலேஜிற்குப் போய்த் திரும்பியும் வந்துவிட்டான். அன்று ராஜலக்ஷ்மியே அவனுக்குச் சிற்றுண்டி எடுத்துவந்தாள். அவன் வழக்கம்போல்

அன்று உண்ணுததைக் கண்டு ராஜலக்ஷ்மி, "உடம்பு சரியில்லையா?" என்று கேட்டாள்.

மஹேந்திரன் அலக்ஷியமாய், "உடம்பு ஒன்றும் இல்லை" என்ருன்.

ராஜலக்ஷ்மி: ஒன்றுமே சாப்பிடவில்லையே; கொண்டு வந்தது அப்படியே இருக்கிறதே?

மஹேந்திரன் சற்றுக் கோபத்துடன், "சாப்பிட்டுக் கொண்டுதானே இருக்கிறேன்!" என்ருன்.

சாயங்காலமாயிற்று. அவன் ஒவ்வொரு நிமிஷமும் விநோதினியின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். 'ஆனந்தமடம்' என்னும் புத்தகத்தில் இன்னும் இரண்டு மூன்று அத்தியாயங்களே பாக்கியிருந்தன. வழக்கம்போல் படித்துக் காட்டுவதற்கு விநோதினி வருவாளென்றே அவன் நம்பியிருந்தான். அந்திப்பொழுது கழிந்து இரவு வந்துவிட்டது. ஆயினும் விநோதினியைக் காணவில்லை. அவன் ஏமாற்றத்துடன் கட்டிலில் போய்ப் படுத்துக் கொண்டான்.

அன்றிரவு ஆசா மிகவும் வெட்கத்துடன் மெள்ள அறைக்குள் நுழைந்தாள். மஹேந்திரன் அதற்குள்ளாகவே படுத்துத் தூங்கிப் போய்விட்டதைக் கண்டாள். பிரிவிற்குப் பிறகு சயன அறைக்குள் இன்று பிரவேசிப்பது அவளுக்குக் கூச்சமும் நாணமுமாயிருந்தது. அழையாது எப்படிப் புருஷனருகில் போவது எனத் தயங்கினாள். வெகுநேரம் தூரவே நின்றிருந்தாள். மஹேந்திரன் எழுந்திருக்கும் வழியாயில்லை. மெள்ள ஒவ்வோர் அடியாக எடுத்துவைத்துக் கட்டிலின் அருகில் சென்ருள். எங்கே சப்தம் கேட்டு அவன் விழித்துக்கொள்கிருனோ வென்று

பயம். ஓடிப்போய் வேறு அறையில் படுத்துக்கொண்டால் என்னவென்று யோசித்தாள். அதற்கும் மனம் இடங் கொடுக்கவில்லை. கட்டிலில் ஏறிப் படுத்துக் கொண் டாள். என்னதான் நித்திரையில் இருந்தபோதிலும் ஆசா பக்கத்தில் படுத்ததை அறியாமல் எப்படி இருக்க முடியும்? ஆனால் மஹேந்திரன் தூங்குவதாகப் பாசாங்கு செய்தானே தவிரத் தூங்கவில்லை. மறுபுறம் திரும்பிக் கண்களை இறுக மூடிக்கொண்டிருந்தான். பார்க்காவிடி னும் ஆசா தன் பக்கத்தில் அழுதுகொண்டே படுத் திருப்பதை அவன் உணர்ந்தான். தனது இரக்கமற்ற தன்மை அவன் மனத்தையே பிளந்தது. ஆனாலும் அவளிடம் அன்பாய்ப் பேசுவது எப்படி என்று தவித் தான். தான் இழைக்கும் தவற்றை உணர்ந்தும் அதிலிருந்து விடுபெற வகையறியாது உழன்றான். 'இப் பொழுதாவது தூங்குவதாகப் பாசாங்கு செய்துவிடலாம்; பொழுது விடிந்ததும் அவள் முகத்தில் விழிப்பதெப்படி? பேசுவதெப்படி?' என்று அஞ்சினான்.

அவனை இச்சங்கடத்திலிருந்து விடுவிக்க வேண்டியே போலும், ஆசா பொழுது விடிவதற்கு முன்னமேயே எழுந்து போய் விட்டாள்.

---

## முப்பத்தோராம் அத்தியாயம்

'இப்படியிருக்க என்ன காரணம்? நான் என்ன குற்றம் செய்தேன்?' இவ்வாறு ஆசா எவ்வளவுதான் யோசித்தும் அவளுக்கு ஒன்றும் விளங்கவில்லை; உண்மைக் காரணம் அவளுக்குப் புலப்படவில்லை. தன் புருஷன் விநோதினியை நேசிக்கிறானென்று அவள் கனவிலும்

எண்ணவில்லை. அநுபவமற்ற பேதைச் சிறுமி; உலக மாயையை அறியாதவள்! தன்னை முழுமனத்துடன் காதலித்த கணவன் வேருெருத்தியைப் பற்றி நினைக்கக் கூடுமென்பது கூட அவள் மனத்தில் எழவில்லை.

மஹேந்திரன் சற்று முன்னதாகவே அன்று காலேஜிற்குப் புறப்பட்டுவிட்டான். அவன் காலேஜ் போக வண்டியேறியதும் ஆசா ஓடிப்போய் ஜன்னலண்டை வந்து, வண்டி கண்ணுக்கு மறையும் வரை பார்த்துக் கொண்டு நிற்பது வழக்கம். இன்றும் அப்படியே போய் நின்ருள். மஹேந்திரன் அவளைப் பார்த்துப் புன்னகை செய்வது வழக்கம். தற்செயலாய் அவன் அவளை இன்றும் பார்த்தான். அவளுடைய முகம் வாடிக் களையற்றுக் காணப்பட்டது. ஒரு விநாடிதான் அவளைப் பார்த்தான். உடனே தலையைக் குனிந்து கையிலிருந்த புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தான். அவன் முகத்தில் முன்பிருந்த அந்தப் புன்சிரிப்பு, அவ்வன்பு நிறைந்த பார்வை எல்லாம் எங்கோ மாயமாய்ப் போய்விட்டன!

வண்டி மறைந்தது. ஆசா மனம்முறிந்து அப்படியே உட்கார்ந்து விட்டாள். அச்சமயம் அவளுக்கு இவ்வுலகமே சாரமற்றதாகவும் சூன்யமாகவும் தோன்றியது. மணி பத்துக்குமேல் ஆயிற்று. கல்கத்தா நகரத் தெருக்களில் வண்டியும் டிராமும் ஜனங்கள் நிறைந்து போய்க் கொண்டிருந்தன. ஆனல் அச்சிறுமியின் மனோவேகம் அப்படியே தடைப்பட்டு நின்றுவிட்டது. மனங்கலங்கி வெகுநேரம் அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

திடீரென்று அவள் மனத்தில் ஓர் எண்ணம் உதயமாயிற்று. 'ஓஹோ தெரிந்தது! விஹாரி காசிக்கு வந்தது

தான் இதற்குக் காரணமாயிருக்கவேண்டும். ஏதோ முன் ஏற்பாட்டின்படி அவர் அங்கு வந்ததாக என் புருஷர் நினைத்திருக்க வேண்டும். அதற்காகத்தான் இவ்வளவு கோபம் போலும்! சீச்சீ, இதென்ன சந்தேகம்? வெட்கக் கேடு!'—இதை நினைக்கும்போது ஆசாவின் தேகம் குன்றியது; மனம் பதறியது. 'அப்படியானால் அதை ஏன் வாய்விட்டுச் சொல்லவில்லை? என் முகத்தைக் காணவே கூசுவதுபோல் பதுங்கி ஓடுவானேன்? முகத்திலோ கோபக் குறியையும் காணேம். குற்றவாளியைப்போல் அவர் இருப்பதற்குக் காரண மென்ன? ஏதோ தவறு செய்து அதை என்னெதிரில் ஒப்புக்கொள்ளவும் வெட்கப் படுவதுபோல் நடந்துகொள்வானேன்?' என்ற எண்ணங் கள் அலைபோல் மனத்தில் எழுந்து அவளை எரித்தன.

வண்டியிலிருந்து தான் கண்ட ஆசாவின் ஒளியிழந்த முகம் மஹேந்திரன் கண் முன்பாகவே நின்று உறுத்தியது. காலேஜில் அன்று முழுவதும் படிப்பில் அவன் மனம் செல்லவில்லை. காலேஜ் விட்டதும் 'பார்க்' பக்கமாய் உலா வப்போனான். அப்பொழுதும் ஆசாவிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்ற ஒரே யோசனைதான் அவனுக்கு. 'இப்பொழுதும் எனக்கு ஆசாவின்பால் அன்பில்லாது போகவில்லை. ஒரு புருஷன் தன் மனைவியிடம் காட்டும் அன்பைவிட அதிகமாகவே நான் ஆசாவிடம் அன்பு கொண்டிருக்கிறேன். இதைப்பெற்றே ஏன் அவள் சந் தோஷமாகவும் திருப்தியாகவும் இருக்கக்கூடாது? என் மனத்தில் ஆசா, விநோதினி இருவருக்கும் இடம் இருக் கிறது. விநோதினியை நேசிப்பதனால் எங்கள் தாம்பத்ய வாழ்விற்கு இடையூறு ஏன் ஏற்படவேண்டும்? எனது அன்பை இருவரும் பெறட்டும். நான் ஒருவரையும் புறக்

கணிக்கப்போவதில்லை' என்று மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டான். அன்றிரவு அன்பாய்க் கொஞ்சி விளையாடி ஆசாவின் வியாகுலத்தை நீக்குவது எனத் தீர்மானித்து வீடு சென்றான்.

சாப்பிடும் சமயம் ஆசா அவன் எதிரிலேயே வரவில்லை. எப்படியும் படுக்கையறையில் காணலாமென்று நம்பித் தான் போய்ப் படுத்துக் கொண்டான். ஆனால் அவன் உள்ளத்தில் ஆசாவிற்கு இடமேது? அதை வேறொருத்தி பூரணமாய் ஆட்கொண்டிருந்தாள். தான் விநோதினி யுடன் நடத்திய செயல்கள் ஒவ்வொன்றாய் ஞாபகத்திற்கு வந்தன. அவள் கையிலிருந்து புத்தகத்தைப் பிடுங்கச் சண்டையிட்டது, அவள் தினமும் வந்து உட்கார்ந்து படித்தது இரவில் எல்லோரும் தூங்கிய பிறகும்கூட அவள் உரத்துப்படிக்க அந்த மிருதுவான குரலோசை யின்பத்தில் தான் மெய்ம்மறந்து படுத்துக் கேட்டுக்கொண் டிருந்தது, அவள் திடீரெனப் புத்தகத்தைமூடி வைத்து விட்டுப் போக எழுந்ததும் படிவரை அவளைக் கொண்டு விடத் தானும் தினம் போய்வந்தது, இவையாவும் படத் தில் சித்திரித்தாற்போல் அவன் மனக்கண்முன் தோன்றின. அவன் மனத்தில் இன்ப உணர்ச்சி ஊடுருவியது; சரீரம் புளகித்தது. இப்படி வெகுநேரம் கழிந்தது. ஆனால் ஆசா வரக்காணவில்லை.

நடு நிசி. மணி ஒன்று அடித்தது. மனம் இருப்புக் கொள்ளவில்லை. அறையை விட்டு வெளியே வராந்தாவில் வந்து நின்றான் மஹேந்திரன். பால்போன்ற நிலவொளி. மனத்தைப் பரவசப்படுத்தும் மந்தமாருதம். மனத்தின் கண் குமுறிக் கொண்டிருந்த காமத்தீ இவ்வியற்கைக் காட்சியினால் தூண்டப்பட்டுச் சுடர்விட்டு எரிந்தது.

ஆசா காசியிலிருந்து வந்ததுமுதல் விநோதினி மஹேந்திரன் கண்ணில் தென்படவேயில்லை. அவன் மனம் வெறி கொண்டதுபோன்று கட்டுக்கடங்காதுபோயிற்று. ஏதோ ஒரு சக்தி அவனை விநோதினியின் பால் இழுப்பது போன்று இருந்தது. கீழே இறங்கிச் சென்றான். நேரே விநோதினி படுத்துறங்கும் அறைக்குள் சென்று பார்க்க, அங்கு அவளைக் காணவில்லை. படுக்கைமாத்திரம் விரித்தபடி இருந்தது. உள்ளே காற்றே இல்லாமையால் அன்று ராஜலக்ஷ்மியும் விநோதினியும் திறந்த வெளிமுற்றத்தில் பாயை மாத்திரம் விரித்துப் படுத்திருந்தனர். காலடிச் சப்தம் கேட்டு விநோதினி, "யாரது?" என்று அங்கிருந்தவாறே கேட்டாள். "நான்தான், விநோதினி!" என்று கூறிக்கொண்டே மஹேந்திரன் அவளருகில் போய் நின்றான். பக்கத்தில் படுத்திருந்த ராஜலக்ஷ்மி திடுக்கிட்டு, "மஹேநா? இந்நேரத்தில் எழுந்து இங்கே எதற்காக வந்தாய்?" என்றாள்.

கண்களில் நெருப்புப் பொறி பறக்க விநோதினி அவனை விழித்துப்பார்த்தாள். பதில்பேசாமல் மஹேந்திரன் அவ்விடத்தை விட்டு அகன்றான்.

---

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

**வா**னம் மேகங்களால் சூழப்பட்டுக் கறுத்திருந்தது. அன்றும் வெகு சீக்கிரமாகவே மஹேந்திரன் காலேஜிற்குச் சென்றுவிட்டான். வண்ணானுக்குப் போடுவதற்காக ஆசா துணிகளைப் பொறுக்கிப் போட்டுக்கொண்டிருந்தாள். மஹேந்திரனுக்கு மறதி அதிகம். சட்டைப் பைகளில்

பணம் காசு வைத்து அப்படியே மறந்து விடுவதுண்டு. அதனால் வண்ணானுக்குத் துணி போடும் சமயம் கோட்டு, நிஜார் இவற்றின் ஜேபிகளை ஆராய்ந்து பார்த்துவிட்டுப் போடுவது வழக்கம். அன்றும் ஆசா ஒவ்வொரு ஜேபி யாய்ப் பார்த்துப் போட்டுக்கொண்டிருந்தாள். ஒரு ஜேபியிலிருந்து திறந்த கடிதம் ஒன்று அகப்பட்டது. எழுத்து விநோதினியினுடையதா யிருந்தது. அதைக் கையிலெடுத்ததும் சர்ப்பம் தீண்டியதுபோல் ஆசாவின் முகம் கறுத்து உள்ளம் பதைத்தது. சர்ப்பமாயிருந் தாலும் விஷம் தீண்டி உயிரைக் கொள்ளைகொள்ளும். ஆனால் இதுவோ உள்ளத்தைச் சிதைத்துச் சித்திரவதை செய்வதுபோன்று இருந்தது. கடிதம் கீழ்வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

"நீ என்னையா விரும்புகிறாய்? அன்பாம்! இவ்வன்புப் பிச்சையிட உனக்கு ஏன் தோன்றியதோ? பிறந்ததுமுதல் அன்புச் செல்வத்தைப் பூரணமாய் அடைந்து அநுபவிக்கும் உனக்கு இன்னும் ஏன் இந்தப் பேராசை? உன் வேடிக்கை, களியாட்டம் இவற்றிற்கெல்லாம் நானும் போனாற் போகட்டு மென்று சற்று இடங்கொடுத்தால் இதற்கென்ன முடிவே கிடையாதா? இதோ வேறு ஒரு குரல் உன்னைக் கூவி அழைக் கிறது. இனி அன்பை அங்கே செலுத்து. என்னைத் தனியே விட்டுவிடு.

"உன்னை நேசிக்க வேண்டுமென்று எழுதியிருக்கிறாய். வேடிக்கை விளையாட்டானால் ஏதோ போகட்டுமென்று இருக்கலாம். ஆனால் உண்மையில் எனக்கு உன்மீது நம் பிக்கையில்லை. ஆசா ஒருத்தியைத்தான் காதலித்து விரும்பு வதாக நீ சொல்லிப் பெருமையடைந்தாய். அதுவும் பொய்! இப்பொழுது என்னை விரும்புவதாகச் சொல்லுகிறாய். இதுவும் பொய். உனக்குச் சுயநலந்தான் பெரிது.

"உண்மை அன்பைப் பெற என் உள்ளம் ஏங்கித் தவிக்கிறது. ஆனால் அவ்வேட்கையைத் தணிக்கும் வஸ்து உன்னிடம் இல்லை என்பதை நான் வெகுநாட்களுக்கு முன்பே கண்டுகொண்டேன். என்னை விட்டுவிடு. இனி என் பின்னே வட்டமிடாதே. வீணாய் உனது மானத்தையும் துறந்து என் மானத்தையும் போக்கடிக்காதே! எனது கடைசிப்பதில் இதுதான். என்னைக் கல்நெஞ்சுடையவள் என்று எழுதுகிறாய். அது ஓரளவு உண்மையே. ஆனால் எனது உள்ளத்திலும் சற்றுத் தயை இருக்கிறது. அதனால்தான் உன்னை இதோடு இன்று விடுகிறேன். இக்கடிதத்திற்கு நீ பதிலெழுதினால் உன்னிடமிருந்து தப்ப இவ்வீட்டை விட்டு ஓடுவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை.

"நேற்றிரவு நீ செய்த அக்கிரமமே போதாதா? வேலைக்காரி கையில் கடிதம் வேறு இன்று கொடுத்தனுப்ப உனக்கு வெட்கமில்லையா? அவள் என்ன நினைக்கமாட்டாள்? நான் யாருக்கும் முகத்தைக் காண்பிக்க யோக்கியதை யற்றவள் ஆகவேண்டு மென்பது உனது விருப்பம் போலும்!"

கடிதத்தைப் படித்ததும் ஆசாவுக்குத் தலை கிர்ரென்று சுழன்றது; கண்கள் இருண்டன. மூச்சுப் படபடத்தது. உணர்வின்றி அப்படியே கீழே விழுந்தாள். மறுபடி உணர்வெய்த வெகுநேரமாயிற்று. கையிலிருந்த கடிதத்தை மறுமுறை படிக்க முயன்றாள். ஆனால் ஒரே குழப்பம். ஒன்றும் தெளிவாய் விளங்கவில்லை. ஒவ்வோர் அக்ஷரமும் ஒரு கறுத்த பேய்போல் அவள் கண்முன் கூத்தாடியது. ஐயோ, இது என்ன! எப்படி விளைந்தது? இந்த ஸர்வநாசத்திற்குக் காரணமென்ன? என்ன செய்வது? யாரிடம் போய் முறையிடுவது? ஒன்றும் அவளுக்குப் புரியவில்லை. தண்ணீரிலிருந்து கரையில் எடுத்துப்போட்ட மச்சத்தைப் போல் துடித்தாள். நட்டாற்றில் முழுகுபவன் ஒரு சிறு

துரும்பின் ஆதாரமாவது கிடைக்காதாவெனத் தேடுவது போல் இந்தச் சூன்யமய அந்தகாரத்திலிருந்து வெளியேற ஓர் ஆதாரம் அகப்படாதாவெனத் தவித்தாள். கடைசியில் அவளையும் அறியாது வாயிலிருந்து 'சித்தி' என்ற சப்தம் கிளம்பியது. அன்னபூரணியின் அன்பான உபதேசம் அவள் நினைவிற்கு வந்தது. கண்களிலிருந்து தாரை தாரையாய் நீர் பெருகியது. விக்கி விக்கி அழுதாள்.

'இக்கடிதத்தை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது? இது என் கையில் அகப்பட்டது தெரிந்தால் அவருக்கும் லஜ்ஜையாயிருக்கும்' என்று நினைக்கும்போது அவள் மனம் துக்கத்தில் ஆழ்ந்தது. கடிதத்தைத் திரும்பவும் கோட்டு ஜேபியிலேயே வைத்துவிடுவது, வண்ணானுக்குக் கோட்டைப் போடுவதில்லையெனத் தீர்மானித்தாள்.

கடிதத்தை வைக்கப் போகும்போது, "சகோதரி" என்று கூப்பிடும் குரல் கேட்டது. ஆசா கடிதத்தைச் சட்டென மறைத்துக்கொண்டாள். விநோதினி உள்ளே வந்து, "வண்ணானுக்குப் போடுவதற்கு முன் இன்னும் சில துணிகளுக்குக் குறி போடவேண்டும். அதற்காகத் தான் வந்தேன்" என்றாள்.

ஆசாவுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. எங்கே தனது முகக்குறிப்பால் தன் மனோநிலைமை வெளியாகி விடுமோவென்று விநோதினியைப் பாராது ஜன்னலுக்கு வெளியே பார்ப்பதுபோல் திரும்பிக்கொண்டாள். அவள் அதரம் துடித்தது. அழுகையை வெகு பிரயாசையுடன் அடக்கிக்கொண்டாள்.

'ஓஹோ! நேற்று இரவு நடந்த சமாசாரம் தெரிந்து விட்டாற்போல் இருக்கிறது. அதுதான் இப்படியிருக்



*விநோதினி அறையில் வந்து நின்ருள்.*

—பக்கம் 234.

கிறாள். ஆனால் தவறு முழுவதும் என்னுடையதென்று என்மேல் கோபித்து என்ன பயன்?' என்று நினைத்து ஆசாவுடன் பேசக்கூட இயலாமல் குறிப்பிடவேண்டிய துணிகளைக் கையில் எடுத்துக்கொண்டு வெளியே சென்று விட்டாள் விநோதினி.

இன்றுவரை அவளன்றோ தன் தோழியாயிருந்தவள்! இதை நினைக்க வெட்கமும் துக்கமும் ஆசாவை ஒருங்கே வதைத்தன. ஆஹா! அவளைப்பற்றித் தான் கொண்டிருந்த உயர்வான எண்ணமென்ன, இக்கடிதம் அதற்கு நேர்விரோதமாய் நிரூபித்ததென்ன? இதை நினைக்கவே, கடிதத்தை மீண்டும் ஒருமுறை படிக்க ஆசாவுக்கு ஆவல் எழுந்தது.

கடிதத்தைக் கையில் எடுத்ததும் மஹேந்திரன் அவசரமாய் உள்ளே பிரவேசித்தான். அங்கே ஆசாவைக் கண்டு சற்றுத் திகைத்து நின்றான். எதையோ அறை முழுவதும் தேடலானான். ஆசாவுக்கு அவன் எதைத் தேடுகிறானென்று நன்றாகத் தெரியும். அவள் மனம் பொறுக்கவில்லை. கடிதத்தையும் கோட்டையும் கட்டிலின் மேல் விட்டெறிந்துவிட்டு முகத்தை மூடிக்கொண்டு மறுபுறம் திரும்பிக்கொண்டாள். ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து மஹேந்திரன் கடிதத்தை எடுத்துக்கொண்டு ஒரு விநாடி ஆசா இருந்தபக்கம் திரும்பி நோக்கினான். உடனே அவசர அவசரமாய்க் கீழே இறங்கிப் போய்விட்டான். இதற்குள், "அம்மா, நேரமாகிவிட்டது. துணி போடவில்லையா?" என்று வண்ணான் குரல்கேட்டது.

# முப்பத்துமூன்றும் அத்தியாயம்

ராஜலக்ஷ்மி காலையிலிருந்து விநோதினியை எதற்கும் கூப்பிடவேயில்லை. வழக்கம்போல் அன்றும் விநோதினி தன் தினசரி வேலைகளைக் கவனித்துக்கொண்டிருந்தாள். தன் முகத்தைக் காணவும் ராஜலக்ஷ்மி விரும்பவில்லை என்பது அவளுக்குத் தெரிந்தது. ஆனாலும் அவள், "அம்மா, உங்கள் தேகசுகம் மிகவும் கெட்டுப்போயிருக்கிறது. காரணமில்லாமலும் இல்லை. உங்கள் பிள்ளை நேற்றிரவு பயித்தியம் போல் புத்தியற்று அப்படி ஓடிவந்தார். எனக்கு அதற்குப் பிறகு நித்திரையே பிடிக்கவில்லை" என்றாள்.

ராஜலக்ஷ்மியோ அவளைப்பார்க்கவு மில்லை; பதில் பேசவுமில்லை. விநோதினி மறுபடியும், "ஒருகால் மனைவியுடன் ஏதாவது சச்சரவா யிருக்கலாம். அதை மத்தியஸ்தம் செய்துவைக்கவோ தீர்க்கவோ என்னைக் கூப்பிட வந்திருக்கலாம். என்ன சண்டை சச்சரவானால்தான் என்ன? பொழுது விடியும் வரை பொறுத்தால் என்ன வந்தது? நீங்கள் என்னவேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுங்கள். உங்கள் பிள்ளைக்கு என்ன குணம் இருக்கிறதோ இல்லையோ, மனோதிடம் மாத்திரம் கிடையவே கிடையாது. எனக்கு அவரைக் கண்டால் பிடிக்கிறதே யில்லை" என்றாள்.

ராஜலக்ஷ்மி கோபத்துடன், "ஏன் பொய்யும் புளுகும் அளக்கிறாய்? உன் பேச்சு ஒன்றும் எனக்கு இன்று பிடிக்கவில்லை, போ!" என்றாள்.

விநோதினி, "எனக்குந்தான் ஒன்றும் பிடிக்கவில்லை. பிள்ளையின்மீது தோஷம் கூறினால் உங்களுக்குக் கோபம் வருமேயென்று பயந்து இதுவரையில் நான் வாயை திறக்கவில்லை. இப்பொழுதுதான் எல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிட்டதே" என்றாள்.

கண்களில் கோபப்பொறி பறக்க ராஜலக்ஷ்மி, "என் பிள்ளையின் நல்லகுணம் கெட்டகுணம் யாவும் நான் நன்றாய் அறிவேன்; ஆனால் நீ இம்மாதிரி மோசக்காரி யென்று நான் தெரிந்து கொள்ளவில்லை" என்றாள்.

விநோதினி ஏதோ சொல்ல வாயெடுத்தாள். உடனே நாவை அடக்கிப் பேச்சை மாற்றி, "உண்மைதான்! ஒருவரை யொருவர் எப்படி அறியமுடியும்? தம்மையே தாம் அறிந்துகொள்ளச் சக்தியற்றவர்கள் பிறரை அறிவதெப்படி? மருமகளிடம் கோபித்துக்கொண்டு மகனிடம் போய் உறவு கொண்டாடுமாறு நீங்களே என்னை எவ்வளவு முறை தூண்டியிருக்கிறீர்கள்? சற்று யோசித்துப் பாருங்கள்" என்றாள்.

ராஜலக்ஷ்மியால் கோபத்தை அடக்கமுடியவில்லை. "அடி அதிர்ஷ்டம் கெட்டவளே, பிள்ளையைக் கெடுத்ததாகத் தாயின்மீதே பழிசுமத்தத் துணிந்து விட்டாயா? உன் நாக்கு அறுந்து விழ!" என்று கர்ஜித்தாள்.

விநோதினி அவள் கோபத்திற்குச் சற்றும் அஞ்சாது மேலும், "அம்மா, ஸ்திரீ ஜாதியே மோசக்கார மாயாவினி ஜாதிதான். என்னிடமிருந்த மோசம் எனக்கே தெரியவில்லை; அது உங்களுக்குத் தெரிந்திருக்கிறது. அதே மாதிரி நீங்கள் அறியாத உங்கள் மோசத்தை நானும் அறிந்துகொண்டேன். மோசமின்றி இப்படிப்பட்ட

சம்பவம் நேரமுடியாது. தெரிந்தோ தெரியாமலோ நீங்களும் என்னை இவ்வலையில் சிக்க வைத்தீர்கள்; நானும் சிக்கிக்கொண்டேன். நாம் யாவரும் மாயாவினிகளே" என்றாள்.

கோபம் பொங்கியெழுந்தது ராஜலக்ஷ்மிக்கு. வாயைத் திறந்து பேசவும் முடியவில்லை அவளால். அவள் சரே லென்று வெளியே சென்றுவிட்டாள். விநோதினிக்கும் சினத்தால் முகம் சிவந்தது.

ராஜலக்ஷ்மி மஹேந்திரனைக் கூப்பிட்டனுப்பினாள். இரவு நடந்த விஷயத்தைப்பற்றிக் கேட்கத்தான் அவள் கூப்பிடுகிறாள் என்பது மஹேந்திரனுக்கு நன்றாய்த் தெரியும். அச்சமயந்தான் விநோதினியின் கடிதமும் கிடைத்திருந்தது. அதைப் படித்து அவன் மனம் தத்த ளித்தது. எண்ணங்கள் அலைபோன்று எழுந்து ஒன்றோ டொன்று மோதிக்கொண்டன. அந்த அலைகள் ஒரு க்ஷணம் அவன் உள்ளத்தை விநோதினியின்பால் இழுத் துச் சென்றன; மறுக்ஷணம் பின்னே தள்ளின. மறுபடி பன்மடங்கு வேகத்துடன் அவளிடமே கொண்டு தள்ளின. மனத்தில் கோரயுத்தம் நடந்து கொண்டிருந்தது. அச் சமயம் தாயுடன் விவாதம் நடத்த அவன் தயாராயில்லை. 'நான் விநோதினியைப்பற்றிய பிரஸ்தாப மெடுத்தாலே அவளும் கோபத்தால் ஏதாவது சொல்ல, எல்லாம் வெளியாகி வீடு ஓரே அமர்க்கள மாகிவிடும்; சற்று வெளியே போய் வருகிறேன்; மனக்கலவரம் அடங்கிய பிறகு பேசிக்கொள்ளலாம்' என்று யோசித்து மஹேந் திரன் வேலையாளிடம், "இன்று காலேஜிற்கு அவசரமாய்ப் போகவேண்டி யிருக்கிறது. திரும்பி வந்தபிறகு அம்மா

வைப் பார்ப்பதாகச் சொல்லு" என்று சொல்லியனுப்பி விட்டு அவசர அவசரமாய் உடை அணிந்து வெளியே சென்று விட்டான். இந்தக் கலவரத்தில்தான் அவன் விநோதினியின் கடிதத்தைக் கோட்டுஜேபியில் மறந்து வைத்துவிட்டுப் போனான்.

மழை பெய்து ஓய்ந்து விட்டது. ஆனாலும் வானம் மேகம் சூழ்ந்து இருண்டிருந்தது. கோபம், அவமானம் இவற்றால் விநோதினியின் மனம் கொதித்தெழுந்தது. இம்மாதிரியான சமயங்களில் விநோதினி உட்கார்ந்து வீண் யோசனை செய்வதில்லை. அப்பொழுதுதான் பின்னும் சுறுசுறுப்பாய் வேலை செய்வாள். வண்ணானுக்குப் போட வேண்டிய அழுக்குத் துணிகள் யாவற்றிற்கும் குறிபோட்டுக் கொண்டிருந்தாள். துணியெடுக்கப்போன சமயம் ஆசாவின் முகக்குறிப்பையும் பார்த்தபிறகு எரிச்சல் பன் மடங்காயிற்று. 'நான்தான் குற்றம் இழைத்துவிட்டது போல யாவரும் சொல்லுகிறார்கள். குற்றத்தினால் ஏற் படும் பழியை ஏற்று அனுபவிக்கும்போது பயனையும் சுகத்தையும்மாத்திரம் கைவிடுவானேன்?' என்று யோசித் தாள்.

அச்சமயம் திடீரென்று மஹேந்திரன் அவள் முன் தோன்றினான். அங்கு நின்றிருந்த வேலைக்காரி அவனைக் கண்டதும் சட்டென்று வெளியே போய் விட்டாள். விநோதினி கண்களில் தீப்பொறி பறக்கக் கையிலிருந்த துணியை விட்டெறிந்துவிட்டு எழுந்து நின்று அவனை நோக்கி, "போ, வெளியே போ! என் எதிரில்வராதே!" என்று கர்ஜித்தாள்.

மஹேந்: ஏன்? நான் என்ன செய்துவிட்டேன்?

விநோதினி கோபத்துடன், "என்ன செய்தாயா? பயங்கொள்ளி! ஆண்மையற்றவன்! நீ செய்வதென்ன இருக்கிறது? கடமையைச் செய்யச் சக்தியற்ற நீ காதலென்பது என்னவென்று கண்டாய்! ஊர்ப்பழிக்கு என்னை ஏன் ஆளாக்குகிறாய்?" என்றாள்.

மஹேந்திரன் தீனக்குரலுடன், "உன்னை நான் காதலிக்க வில்லை யென்றா சொல்லுகிறாய்?" என்றான்.

விநோ: ஆமாம்! அப்படித்தான் சொல்லுகிறேன்! உன் ஒளிவு மறைவான திருட்டு நடவடிக்கையை நான் வெறுக்கிறேன். போ! என்னெதிரில் நில்லாதே!

மஹேந்திரனின் மனம் மோஹத்தால் கட்டுண்டு கிடந்தது. அவன் பரிதபித்து, "விநோதினி, என்னை வெறுக்கிறாயா நீ?" என்றான்.

விநோ: ஆமாம், உன்னைத்தான் வெறுக்கிறேன்!

விநாடியில் மஹேந்திரனின் மனம் மாறியது. அவன், "விநோதினி, பேச்சை வளர்த்துவதில் பயனில்லை. பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டிய சமயம் வந்துவிட்டது. இந்த இரண்டுங் கெட்ட நிலையில் இனி என்னால் இருக்க முடியாது. சகலத்தையும் துறந்து நான் இன்றே இவ் வீட்டை விட்டு வெளியேறினால் நீ என்னுடன் வரத் தயாராயிருக்கிறாயா? சொல்!" என்றான்.

அவன் அவள் கைகளை இறுகப்பிடித்துத் தன் அருகே இழுத்துக்கொள்ள முயன்றான். "ஐயோ! விட்டுவிடு! நீ செய்வது நன்றாயில்லை" என்று விநோதினி கத்தினாள்.

மஹேந்: அதிருக்கட்டும். நீ என்னுடன் வருவாயா மாட்டாயா? அதைச் சொல் முதலில்.

விநோ: நான் மாட்டேன்!

மஹேந்திரன் உணர்ச்சி மேலிட, "ஏன் மாட்டாய்? என்னைப் படுகுழியில் தள்ளிவிட்டு நீ மாத்திரம் தப்பிச் செல்லப் பார்க்கிறாயோ? அது ஒருகாலும் முடியாது! நீ என்னுடன் வரத்தான் வேண்டும்" என்று கூறி அவளைப் பலவந்தமாக இழுத்து அணைத்துக்கொண்டு, "நீ என்னை வெறுத்தாலும் சரி; உன்னையும் கூட அழைத்தே செல்வேன். நீ என்னை விரும்பித்தான் ஆகவேண்டும்" என்றான்.

விநோதினி அவன் பிடியிலிருந்து திமிறித் தன்னை விடுவித்துக் கொண்டாள்.

மஹேந்: எனது உள்ளத்தில் பெருந்தீயை மூட்டி விட்டாய். உன்னால் இனி அதை அணைக்கவும் முடியாது. நீயும் என்னிடமிருந்து தப்பி ஓடமுடியாது. (ஆவேசத்துடன்) ஏன் இப்படி ஒரு லீலை புரிந்தாய்? இதை லீலை என்று சொல்வது! நம்மிருவருடைய வாழ்வும் சாவும் இனி ஒருமித்தே இருக்கும்!

அதேசமயம் ராஜலக்ஷ்மி உள்ளே நுழைந்து, "மஹேன்! இதென்ன?" என்றாள். அவன் உன்மத்தம் பிடித்தவன்போல் தன் தாயையும் விநோதினியையும் மாறி மாறிப் பார்த்தான். கடைசியில் விநோதினியை நோக்கி, "எல்லாவற்றையும் துறந்து விடுகிறேன்; சொல்: என்னுடன் வருவாயா மாட்டாயா?" என்றான்.

விநோதினி கோபத்துடன் ராஜலக்ஷ்மியை ஒருமுறை விழித்துப் பார்த்தாள். உடனே சற்றும் தடுமாற்றமோ சங்கோசமோ இன்றி மஹேந்திரனின் கைகளைப் பிடித்துக் கொண்டு, "வருகிறேன்" என்றாள்.

மஹேந்திரன், "சரி! இன்று மாத்திரம் சற்றுப் பொறு. நாளையிலிருந்து இவ்வுலகில் நீதான் எனக்குச் சகலமும்" என்று கூறி வெளியே சென்றுவிட்டான்.

அச்சமயம் வண்ணான், "அம்மா! எவ்வளவுநேரம் நான் காத்திருப்பது? நான் போய் நாளைக்காவது வரட்டுமா?" என்று கத்தினான்.

குதிரைக்குக் கொள் இல்லையென்று வேலையாள் வந்து கூறி நின்றான்.

வீட்டிலோ வெளியிலோ ஒரு வேலையும் நிற்கக் காணோம். எல்லாம் வழக்கம்போல் நடந்துகொண் டிருந்தன.

---

## முப்பத்துநான்காம் அத்தியாயம்

விஹாரி வைத்தியக் கல்லூரியில் படித்துவந்தான். திடீரென்று பரீக்ஷைக்குச் சில தினங்களுக்கு முன்பாக அவன் படிப்பை நிறுத்தியது யாவருக்கும் ஆச்சரியத்தை அளித்தது. யாரேனும் கேட்டால், "பிறருக்கு வைத் தியம் செய்வதற்கு முன் எனது தேக சௌக்கியத்தைக் கவனித்துக்கொள்ள வேண்டாமா?" என்று சொல்லி விட்டான்.

அவன் ஒரு நிமிஷங்கூட வீணில் கழிக்கக் கூடியவ னல்ல. தன்னலமற்றவன். செல்வம், கீர்த்தி இவற்றை எதிர்பார்த்து ஊழியம் செய்பவனல்ல. பி. ஏ., பட்டம் பெற்றதும் எஞ்ஜினீரிங் கல்லூரியில் படித்துவந்தான். அவன் அதிக உழைப்பாளி. அங்கே படிப்பு முடிந்ததும் உடனே வைத்தியக் கல்லூரியில் வந்து சேர்ந்தான். மஹேந்திரன் அவனுக்கு ஒரு வருஷம் முன்பாகவே

சேர்ந்திருந்தான். இவ்விரு நண்பர்களின் நட்பு காலேஜ் முழுவதும் பிரசித்தம். பையன்கள் இவர்களை ராம லக்ஷ்மண ரென்றும், அச்வினி தேவதைகளென்றும் வேடிக்கையாய்க் கூப்பிடுவதுண்டு. திடீரென்று இவர்கள் நட்பு முறிந்தது யாவருக்கும் ஆச்சரியத்தை விளைவித்தது. இருவரும் முன்போல் பேசுவதில்லை; சேருவதில்லை. இதைச் சகபாடிகள் கவனித்து ஜாடையாய்ப் பேசிக் கொள்வர். விஹாரி மிகவும் புத்திசாலி. பரீக்ஷையில் தேறிச் சன்மானமும் பெறுவானென்று ஆசிரியர்கள் யாவரும் எதிர்பார்த்திருந்தனர். யாவரும் ஏமாறும் வண்ணம் அவன் பரீக்ஷையில் உட்காரவே யில்லை. படிப்பையே நிறுத்திவிட்டான்.

அவன் வீட்டிற்கு அருகில் ராஜேந்திர சக்கரவர்த்தி என்ற அச்சுக்கோக்கும் ஏழைப் பிராம்மணர் ஒருவர் வசித்துவந்தார். மாதச்சம்பளம் பன்னிரண்டு. மிகவும் கஷ்டத்துடன் ஜீவனம் நடத்திவந்தார்.

அவரிடம் விஹாரி, "உங்கள் பையனை என்னிடம் விட்டு விடுங்கள்; நானே அவனுக்குக் கல்வி கற்பித்துச் சம்ரக்ஷிக்கிறேன்" என்றான்.

அவ்வேழை அந்தணர் சந்தோஷத்துடன் சம்மதித்து வஸந்தன் என்ற தம் எட்டு வயதுப் பையனை விஹாரியிடம் ஒப்பித்துவிட்டார்.

'பையனுக்குப் பத்து வயதாகும் வரை எழுதவே கற்பிப்பதில்லை. முதலில் எல்லாம் வாய்ப்பாடமாகவே நடத்துவது' என விஹாரி நிச்சயித்தான்.

அதுமுதல் அச்சிறுவனோடு விளையாடியவாறே, அவனைக் கோட்டைமைதானம், ம்யூஸியம், ஆலிபுரம்

மிருகக் காட்சிச்சாலை, சிவபுரத்துப் பூந்தோட்டம் முதலிய இடங்களுக்கு அழைத்துப் போய்ப் பாடம் கற்பிப்பது, சரித்திரக் கதைகள் சொல்வது இவையே விஹாரியின் முக்கிய அலுவல்களாயிருந்தன.

அன்று ஸாயங்காலம் வெளியே செல்ல முடியவில்லை. மத்தியானம் மழை சற்று நின்று மாலையில் மீண்டும் பெய்ய ஆரம்பித்துவிட்டது. விஹாரி தன் வீட்டில் பெரிய அறையில் விளக்கேற்றிக்கொண்டு உட்கார்ந்து வஸந்தனுக்குத் தன் நூதன வழியில் பாடம் கற்பித்துக் கொண்டிருந்தான்.

விஹாரி: வஸந்தா, இவ்வீட்டில் எவ்வளவு வாயிற்படிகள் இருக்கின்றன? சீக்கிரம் சொல்லவேண்டும்; எண்ணக்கூடாது.

வஸந்தன்: இருபது.

விஹாரி: தப்பு; பதினெட்டே!

"அந்த ஜன்னலில் எவ்வளவு கம்பிகள் இருக்கின்றன? சீக்கிரம் சொல்" என்றான் விஹாரி.

வஸந்தன்: ஆறு.

விஹாரி, "நீ ஜயித்தாய்! இந்தப் பெஞ்சு எவ்வளவு அடி நீளம்? அந்தப் புத்தகம் எவ்வளவு கனம்?" என்றெல்லாம் சிறுவனைக் கேள்வி கேட்டுக்கொண்டிருக்கும் ஸமயம் வேலைக்காரன் வெளியே யாரோ ஒரு மாது விஹாரியைக் காண வந்திருப்பதாகத் தெரிவித்தான்.

அவன் சொல்லி முடிப்பதற்குள்ளாகவே விநோதினி அறையில் வந்து நின்றாள். விஹாரி ஆச்சரியத்துடன், "என்ன விசேஷம் இன்று?" என்று கேட்டான்.

விநோ: வீட்டில் ஸ்திரீகள் யாரும் இல்லையா?

விஹாரி: வீட்டிலுமில்லை, வெளியிலுமில்லை. அத்தைக்கிழவி ஒருத்தி இருக்கிறாள். அவளும் கிராமத்தில் வசிக்கிறாள்; இங்கே இல்லை.

விநோ: அப்படியானால் என்னை உங்கள் கிராம வீட்டிற்கு அனுப்பி வையுங்கள்.

விஹாரி: உன்னை யாரென்று சொல்லி அத்தையிடம் அறிமுகப்படுத்துவது?

விநோ: வேலைக்காரி என்று சொல்லுங்கள். நான் அவளுக்கு வேண்டிய ஊழியம் யாவும் புரிகிறேன்.

விஹாரி: தனக்கு வேலைக்கு ஆள்வேண்டுமென்று என் அத்தை என்னைக் கேட்டாலன்றோ நான் அனுப்பலாம்? அது கிடக்கட்டும். சமாசாரம் என்ன? வந்த காரணத்தை முதலில் தெரிவி.

பிறகு விஹாரி வஸந்தனைப் பார்த்து, "எழுந்து போய்ப் படுத்துத் தூங்கு அப்பா" என்று சொன்னான். சிறுவனும் அப்பால் சென்றான்.

விநோ: நீங்கள் கண்டவற்றிலிருந்து உங்களுக்கே யாவும் தெரிந்திருக்கவேண்டும்.

விஹாரி: தெரிந்ததாகவே இருக்கட்டும். அதனாலென்ன இப்பொழுது?

விநோ: நானே வேண்டுமானால் சொல்லுகிறேன்; கேளுங்கள் மஹேந்திரன் என்னை இச்சிக்கிறான்.

விஹாரி: இது ஒன்றும் புதிதல்ல; எனக்கு இதைக் கேட்கவும் இஷ்டமில்லை.

விநோ: எனக்கும் உங்களிடம் இதை அடிக்கடி தெரிவிக்க இஷ்டமில்லை. அதனால்தான் இன்று உங்களிடம் அடைக்கலம் புக வந்திருக்கிறேன்.

விஹாரி: உனது விருப்பமின்றி இந்த அனர்த்தம் எப்படி விளைந்தது? நல்வழியில் சென்ற அவன் மனத்தைத் திருப்பிக் கெடுத்தது யார்?

விநோ: நான்தான்! ஆமாம், நான் கெட்டவள் தான்! நான் அதை ஒளிக்கவில்லை. என் உள்ளத்தைத் திறந்து பாருங்கள். அங்கே எரியும் தீயினாலேயே நான் மஹேந்திரனின் வீட்டிலும் தீயிட்டேன். அவன்மேல் அன்பு கொண்டதாக நான் எண்ணிய எண்ணம் தவறு என்று பிறகுதான் அறிந்துகொண்டேன்.

விஹாரி: அன்பு இருக்குமானால் இப்படிக் குடியைக் கெடுப்பாயா என்ன?

விநோ: விஹாரி பாபு, சாஸ்திரம் நியதி இவற்றைத் தூரவைத்துவிட்டு அந்தர்யாமியைப் போல் எனது இருதயத்தினுட்புகுந்து பார்க்கும் சக்தி மாத்திரம் உங்களுக்கு இருக்குமானால் எனது உள்ளத்தை விண்டு காட்டவும் நான் சித்தமாயிருக்கிறேன். உங்களிடம் நான் எதையும் மறைக்க விரும்பவில்லை.

விஹாரி: உள்ளத்தின் மர்மத்தை அறியப் பகவானே வல்லவர். மனிதர்களாகிய நாம், சாஸ்திரம் விதி இவற்றிற்குக் கட்டுப்பட்டு நடந்தால்தான் மனத்தை நிலை நிறுத்தி வாழ முடியும்.

விநோ: இருக்கட்டும். நான் சொல்வதைச் சற்றுக் கேளுங்கள்: இக்காரியத்திலிருந்து நீங்கள் என்னை முன்பே தடுத்திருக்கக் கூடும். மஹேந்திரன் என்னை இச்சிக்கிறான்.

ஆனால் அவன் மூடன், காமாந்தகன். என்னை அவன் அறியவில்லை. நீங்கள் என் உள்ளத்தை உள்ளபடி அறிந்து கொண்டதாக ஒரு சமயம் எனக்குப் புலப்பட்டது. அப்பொழுது நீங்கள் என்னை மதித்துப் போற்றினீர்கள். நிஜத்தைச் சொல்லுங்கள். இது வாஸ்தவமா இல்லையா?

விஹாரி: நிஜந்தான். உண்மையாகவே அன்று உன்னிடத்தில் எனக்குச் சிரத்தை ஏற்பட்டது.

விநோ: அப்பொழுது நீங்கள் என்னைப் பற்றிக் கொண்ட அபிப்பிராயம் ஒன்றும் தவறல்ல. என்னிடம் அன்றுகொண்ட சிரத்தையை ஏன் விட்டுவிட்டீர்கள்? பெண்களுக்குரிய வெட்கம் மானம் யாவற்றையும் துறந்து நான் உங்களிடம் இன்று ஓடிவந்திருக்கிறேன். நீங்கள் ஏன் என்மேல் அன்பு கொள்ளவில்லை? அது எனது துர்ப்பாக்கியந்தான்! உங்கள் அன்பு ஆசாவின் பால் இருந்தது. கோபிக்க வேண்டாம்; பொறுங்கள். உங்கள் மனத்தை நான் அறிவேன். அவளிடம் என்ன அபூர்வ குணம் மோஹிக்கத் தக்கதாயிருக்கிறது? ஒன்றையும் காணேம்! புருஷர்களுக்குப் பிரும்மா புறக்கண்ணை அளித்தாரேதவிர அகக்கண்களை அளிக்கவில்லைபோலும்!

இதற்குள் விஹாரி எழுந்து நின்று, "இதோ நீ எது வேண்டுமானாலும் சொல்; கேட்கத் தயாராயிருக்கிறேன். ஆனால் சம்பந்தமற்ற தகாத சொற்களை மாத்திரம் சொல்ல வேண்டாம்" என்றான்.

விநோ: யாரைப்பற்றிப் பேசினால் உங்கள் மனம் புண்படுமென்று எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால், விஹாரிபாபு, இவ்விரவில் வெட்கம், பயம், யாவும் துறந்து

உங்களிடம் ஓடிவர என் மனம் எவ்வளவு புண்பட்டிருக்க வேண்டுமென்பதைச் சற்றே நினைத்துப் பாருங்கள்! நீங்கள் ஆசாவிடம் அன்புகொண்டிராவிடில், நான் இப்பொல்லாத் தீங்கு ஒரு நாளும் விளைவித்திருக்க மாட்டேனென்பது நிச்சயம்.

விஹாரியின் முகம் வெளுத்தது. அவன் மனம் பதைக்க, "ஆசாவிற்கு என்ன செய்தாய்? அவள் என்ன வானாள்?" என்று கேட்டான்.

விநோ: மஹேந்திரன் வீடு வாசல் மனைவி எல்லாவற்றையும் துறந்து என்னோடு வரத் தயாராயிருக்கிறான்.

"ஒருகாலும் கூடாது! இது நடக்கவே கூடாது!" என்று விஹாரி கர்ஜித்தான்.

விநோ: ஏன் கூடாது? மஹேந்திரனை இனிமேல் தடுக்கக்கூடியவர் யார்?

விஹாரி: உன்னால் தடுக்கமுடியும்.

விநோதினி ரோஷத்துடன், "எதற்காக நான தடுக்க வேண்டும்? உங்கள் ஆசாவுக்காகவா? என் சுகதுக்கத்தைக் கவனிக்கவேண்டாம் போலும்! மஹேந்திரனின் குடும்பத்தில் சுகமும் சாந்தியும் நிலவியிருக்கவேண்டி நான் என் சுகத்தைப் பலியிட வேண்டும் போலும்! இல்லை, இல்லை! நான் அவ்வளவு தியாகியல்ல. நான் இம்மாதிரியான தர்ம சாஸ்திரம் படித்ததில்லை. தியாகத்திற்குப் பிரதிபலன் எனக்கு என்ன கிடைக்கிறது?" என்றாள்.

இதைக் கேட்கவே, விஹாரியின் இருதயம் கல்லாயிற்று. அவள்பால் அவனுக்குச் சற்றும் இரக்கம் ஏற்படவில்லை. அவன், "ஏதேதோ நீயும் இதுவரை சொன்னாய். அதிகப் படிப்பு உன்னைக் கெடுத்துவிட்டது போல் இருக்

கிறது! உனது செய்கை, உனது பேச்சு, உனது நடிப்பு யாவும் நாடகமாடுவதற்கும் நாவல் எழுதுவதற்குமே தகுந்தவை" என்றான்.

விநோ: நாடகமா! நாவலா!!

விஹாரி, "ஆமாம்! அதுவும் உத்தம வகுப்பைச் சேர்ந்ததல்ல! ஒன்றும் தெரியாத பேதைப் பெண்ணாயிருந்தாலே நன்றாயிருந்திருக்கும். அப்பொழுது உண்மை அன்பைப் பெற்றிருக்கக் கூடும். ஆனால் நடிகையோ அரங்கத்தில்தான் சோபிப்பாள்; வீட்டில் இருக்கத் தகுதியற்றவள்" என்று வெறுப்புடன் கூறினான்.

விநோதினி சர்வநாடியும் ஒடுங்கியவள்போல் சிறிது நேரம்வரை பேசாது தலைகுனிந்து நின்றாள். பிறகு குனிந்தவாறே, "என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்?" என்றாள்.

விஹாரி: அசம்பாவிதமான எண்ணங்களை விட்டு நற்புத்தியுடன் உன் கிராமத்தில் போய் வசி.

விநோ: எப்படிப் போவது?

விஹாரி: நானே உன்னை ரெயிலிலுள்ள பெண்கள் வண்டியில் ஏற்றி உன் கிராமம் வரை கொண்டுவிட்டு வருகிறேன்.

விநோ: அப்படியானால் இரவு நான் இங்கேயே இருக்கிறேன்.

விஹாரி: இங்கே வேண்டாம். என்மீதே எனக்கு நம்பிக்கை இல்லை.

இதைக் கேட்டதும் விநோதினி அவனுடைய இரு பாதங்களையும் பிடித்துக் கண்களில் ஒற்றிக்கொண்டு, "விஹாரிபாபு, என்மீது சற்றாவது கருணை இருக்கட்டும்!

இருதயத்தைக் கல்லாகச் செய்துகொள்ள வேண்டாம்! பாவியிடம் சிறிது அன்புகொண்டதனால் உங்களுக்கும் துளி பாவம் சம்பவித்தாலும் பாதகமில்லை" என்று கூறி அவன் பாதங்களைப் பன்முறையும் முத்தமிட்டாள்.

விஹாரிக்கு அவளுடைய செய்கையால் ஏற்பட்ட உணர்ச்சி அடங்க ஒரு நிமிஷமாயிற்று. அவன் மனம் இரங்குவதை முகக் குறிப்பால் உணர்ந்த விநோதினி அவனருகில் மண்டியிட்டவண்ணம், "பிராணேசுவரா! உங்களை நான் என்றும் அடைய முடியாதென்பது எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் இன்று ஒரு நாழிகை என்னைக் காதலியுங்கள். அது போதும். என் உயிருள்ளளவும் அதை நான் மறவேன். பிறகு அப்பாழடைந்த கிராமத்தில் போய் ஆயுள் முழுவதும் வசிக்கச் சித்தமாயிருக்கிறேன்" என்று கூறி அவன்பாதத்தைப் பிடித்தபடியே உட்கார்ந்திருந்தாள்.

விஹாரி பெருமூச்சுவிட்டான். அவனுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. அவள் பிடியிலிருந்து கால்களை விடுவித்துக் கொண்டு எழுந்து தழுதழுத்த குரலில், "இரவு ஒருமணிக்குப் பாஸஞ்சர் வண்டி புறப்படுகிறது" என்றான்.

விநோதினியும் தீனக்குரலில், "அதிலேயே நான் புறப்பட்டுச் செல்கிறேன்" என்றாள். அச்சமயம் சிறுவன் வஸந்தன் விழித்தெழுந்து மஹேந்திரன் அருகில் வந்து நின்றுகொண்டு விநோதினியை உற்று உற்று நோக்கினான்.

விஹாரி, "தூங்கப்போகவில்லையாடா?" என்று கேட்டதைக்கூடக் கவனியாது அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் வஸந்தன்.



அவளுக்கு வெகுநாட்களாகத் தெரிந்த தபாற்காரக் கிழவன் அவ்வழியே வந்தான்.

—பக்கம் 249.

சிறுவனின் களங்கமற்ற அழகிய முகம் விநோதினியை வசீகரித்தது. அவனை வாரி அணைத்துக்கொள்ள இரு கைகளையும் நீட்டினாள். வஸந்தன் ஒரு நிமிஷம் யோசித்தான். பிறகு அவளருகில் வந்து நின்றான். அவனை வாரியெடுத்து முத்தமிட்டுத் தன் கண்ணீரால் அவ்வழகிய குழந்தையின் முகத்தை நனைத்தாள் விநோதினி.

---

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

எதிர்பாராத சம்பவங்கள் நேருவதும், சகித்தற்கரிய துன்பங்கள் நிகழ்ந்தும் அதைச் சகித்துக் கொள்வதும் வாழ்க்கையியல்பு. அன்றைய இரவு மஹேந்திரன் வீட்டில் எவ்விதமோ கழிந்தது. மறுநாள் விநோதினியை அழைத்துப் போவதாகச் சொல்லி அன்று சாயரட்சை வெளியே சென்ற மஹேந்திரன் இரவு வீட்டிற்கு வரவேயில்லை. ஹாஸ்டலில் தன் நண்பன் ஒருவனுடன் அன்று இரவைக் கழித்தான். மறுநாள் புறப்படத் தயாரா யிருக்குமாறு ஒரு கடிதம் விநோதினிக்கு எழுதித் தபாலில் போட்டு விட்டான்.

மறுதினம் காலைத் தபாலில் மஹேந்திரன் வீட்டிற்கு அக்கடிதம் கிடைத்தது. ஆசா சக்தியிழந்து சோர்வுற்று இன்னமும் படுக்கையை விட்டு எழுந்திருக்க வில்லை. "அம்மா, கடிதம் வந்திருக்கிறது" என்று வேலைக்காரன் கடிதத்தை ஆசாவின் கையில் கொடுத்தான்.

கடிதம் என்றதும் அவள் மனம் இடிந்தது. கை நடுங்கக் கடிதத்தை வாங்கிப் பார்த்தாள். மஹேந்திரனின் கையெழுத்து! விநோதினியின் விலாசத்திற்கு எழுதப் பட்டிருந்தது. அவள் உணர்விழந்தவள்போல் ஆனாள்.

கடிதத்தை அப்படியே வேலையாள் கையில் கொடுத்து விட்டாள்.

அவன் திகைத்து, "இதை யாரிடம் கொடுக்கட்டும்?" என்றான். "எனக்குத் தெரியாது" என்றாள் ஆசா.

இரவு எட்டு மணியிருக்கும். ஆத்திரத்துடன் மஹேந்திரன் வீட்டினுள் பிரவேசித்தான். நேரே விநோதினியின் அறைப்பக்கம் சென்றான். ஒரே இருட்டு. சப்தமே இல்லை. விளக்கை ஏற்றினான். அவ்வறையில் யாருமில்லை. ஒவ்வோர் இடமாய்த் தேடிப் பார்த்தான். எங்கும் அவளைக் காணாது கலவரமடைந்தான். 'என்ன முட்டாள் தனம் செய்தேன்! நான் அவளைக் கூடவே அழைத்துப் போயிருக்க வேண்டும். நான் இல்லாதிருக்கும் சமயம் அம்மா அவளை வைது திட்டியிருப்பாள். அவள் அதைப் பொறுக்காது எங்கோ சென்றுவிட்டாள்' எனத் தன்னையே நொந்து கொண்டான். அவன் கோபம் தாயின்மீது சென்றது. அவளிடம்போய், "விநோதினி எங்கே? அவளை என்ன சொன்னாய்?" என்று கேட்டான்.

ராஜலக்ஷ்மி: எனக்கு என்ன தெரியும்? அவளை நான் ஒன்றும் சொல்லவில்லை.

மஹேந்திரன் இதை நம்பவில்லை. "தெரியாதா இருக்கட்டும். நான் அவளைக் கண்டு பிடிக்காது விடப் போவதில்லை" என்று கூறிச் சரேலென வெளியே சென்றான். ராஜலக்ஷ்மி என்ன கூப்பிட்டும் அவன் திரும்பிப் பார்க்கவேயில்லை. வேலைக்காரனிடம் போய் "விநோதினியம்மா எங்கே சென்றாள் தெரியுமா?" என்று கேட்டான்.

"எங்களிடம் ஒன்றும் சொல்ல வில்லையே அந்த அம்மாள்! எனக்குத் தெரியாது ஒன்றும்" என்றான் வேலையாள்.

மஹேந்திரனுக்குக் கோபம் மேலிட்டது. வீட்டில் யாவரும் சேர்ந்து தன்னை ஏமாற்றச் சதி செய்வதாக நினைத்தான். எப்படியாவது விநோதினியைத் தேடிக் கண்டு பிடிக்க நிச்சயித்து வெளியே சென்றான்.

---

## முப்பத்தாறும் அத்தியாயம்

விஹாரி பரோபகாரி. பிறருக்கு உதவி செய்வதே அவனுக்குச் சந்தோஷம். தன் சுகதுக்கத்தைச் சற்றும் பாராட்டாதவன். விநோதினியை அவளது கிராமத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு அன்றுதான் திரும்பி வந்தான். திடசித்தமுடைய அவன்கூட அன்று துயரமே உருவெடுத்ததுபோல் தன் வீட்டு மாடியில் உட்கார்ந்து யோசித்துக்கொண்டிருந்தான். மனத்தில் சொல்லமுடியாத வேதனை. உலகமே தன்னைக் கைவிடத் தான் மாத்திரம் அதில் தனித்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது. மனம் எதிலும் செல்லவில்லை. வஸந்தனுக்கும் அன்று பாடம் கற்பிக்கவில்லை. அச்சிறுவன் படுத்துத் தூங்கி விட்டான். இரவுமணி ஒன்பது அடித்தும் விஹாரி இன்னமும் உட்கார்ந்து கொண்டே யிருந்தான். யாரைப்பற்றி நினைக்கவும் கூடாதென அவன் திடசங்கல்பம் செய்து கொண்டிருந்தானோ அவளைப்பற்றியே நினைக்க மனம் தூண்டியது. அவன் மனோதிடம் எங்கோ மாயமாய்ப் போயிற்று. சிறுவயதில் தான் மஹேந்திரனிடம் நட்புக் கொண்ட காலத்திலிருந்து அன்றுவரை நடந்த ஒவ்வொரு

சம்பவமும் மனத்திரையில் எழுதிய சித்தரமபோல் வரி சையாய்த் தோன்றி மறைந்தது. தங்கள் இருவரின் நட்பிற்கு முதல்பங்கம் எப்பொழுது, எப்படி ஏற்பட்டது என்று யோசித்தான். உடனே தான் விவாகத்திற்காகப் பெண் பார்க்கப் போனது, ஆசாவின் அழகிய களங்கமற்ற முகம், நாணித் தலை கவிழ்ந்த அவள் உருவம், தன் நண்பனின் சுகத்திற்காகத் தனது ஆசையைத் துறந்தது, நண்பனின் சுகமய தாம்பத்திய வாழ்க்கை, தம்பதிகளுக்கு மத்தியில் நல்ல மரத்தில் புல்லுருவிபோல் விநோதினி தோன்றியது, அவளால் சர்வநாசம்—இவை யாவும் அவன் மனக்கண்முன் தோன்றின.

விவாஹமான புதிதில் மஹேந்திரனும் ஆசாவும சேர்ந்து எடுத்துக்கொண்ட போட்டோ, விஹாரியின் மேஜைமீது வைக்கப் பட்டிருந்தது. அதன்மேல் அவன் பார்வை சென்றது. அதைக் கையிலெடுத்து ஒருமுறை பார்த்தான். பரிசுத்தமான காதலின் இன்ப வாழ்க்கை அவ்விளம் தம்பதிகளின் முகத்தில் பிரதிபலித்துப் பிர காசித்தது. அவ்வாழ்க்கை மண்ணாய்ப் போனதற்குக் காரணமாயிருந்த விநோதினியின்மீது வெறுப்பும் கோப மும் ஏற்பட்டன விஹாரிக்கு. அவளைத் தன் மனத்தி லிருந்து அறவே அகற்ற முயன்றான். ஆனால் என்ன ஆச்சரியம்! தன்னால் ஒருநாளும் அப்படிச் செய்ய முடியா தென்பதை அவன் அப்பொழுதுதான் உணர்ந்தான். கடைசியாக விநோதினி தன்னிடம் அன்புப் பிச்சை வேண்டி ஏங்கிநின்றது இன்னமும் கண்முன் நடப்பது போன்று இருந்தது; தன் பாதங்களைப் பிடித்துக் கண் களில் ஒற்றிக்கொண்டு அவள் முத்தமிடுவது போலவே யிருந்தது. அவள்பாலிருந்த துவேஷமெல்லாம் நொடி

யில் மறைந்தது. தான் காண்பது கனவோ நனவோவென வியந்தான்.

கையில் ஆசாவின் போட்டோ அப்படியே இருந்தது. யாரோ வந்த சப்தம் கேட்டுத்திடுக்கிட்டுத் திரும்பினான். மஹேந்திரன் வந்திருந்தான். உடனே எழுந்ததில் போட்டோ கீழே விழுந்ததைக் கூட அவன் கவனிக்க வில்லை.

மஹேந்திரன் வந்ததுமே, "விநோதினி எங்கே?" என்றான்.

விஹாரி நண்பனருகில் சென்று அவன் கையைப் பிடித்துக்கொண்டு, "மஹேன், சற்று உட்கார். உன்னோடு கொஞ்சம் பேசவேண்டும்" என்றான்.

மஹேந்: எனக்கு இப்பொழுது உட்கார்ந்து பேசச் சமயமில்லை. விநோதினி எங்கே? சொல்!

விஹாரி: நீ கேட்கும் கேள்விக்கு அவ்வளவு லகுவில் பதில் சொல்லிவிடமுடியாது. சற்று உட்கார்ந்து கேட்டால்தான் முடியும்.

மஹேந்: எனக்கு ஏதாவது உபதேசிக்கப் போகிறா யாக்கும்! எனக்கு அதெல்லாம் தெரியும். நீ ஒன்றும் சொல்லவேண்டியதில்லை.

விஹாரி: உபதேசம் ஒன்றுமில்லை. உபதேசிக்க எனக்கு அதிகாரமும் இல்லை; யோக்கியதையும் இல்லை.

மஹேந்: இல்லாவிடில் என்னைத் தூஷித்து நிந்திக் கப்போகிறாயாக்கும்! ஆமாம்! நான் நீசன்; அதமன்; மூடன்; எல்லாந்தான்! ஆனால் விநோதினி எங்கே? அதைச் சொல். அவள் இருப்பிடம் உனக்குத் தெரியுமா?

விஹாரி: தெரியும்.

மஹேந்: அதைத் தெரிவிப்பாயா, மாட்டாயா?

விஹாரி: மாட்டேன்.

மஹேந்: தெரிவித்துத்தான் ஆகவேண்டும். நீ அவளை மயக்கி ஏமாற்றி அழைத்துவந்து ஒளித்து வைத்திருக்கிறாய்! அவள் எனக்குச் சொந்தம்; என்னிடம் உடனே ஒப்படை!

விஹாரி துணிவுடன், "அவள் உனக்குச் சொந்தமில்லை. அவளை நான் ஏமாற்றி அழைத்து வரவுமில்லை. தானாகவே அவள் என்னிடம் வந்தாள்" என்றான்.

"எல்லாம் பொய்!" என்று மஹேந்திரன் கர்ஜித்தான். பிறகு, "விநோதினி! விநோதினி!" எனக் கூவிக்கொண்டே அவ்வீடு முழுவதும் தேடிச் சோதனையிட்டான். ஓர் அறையிலிருந்து யாரோ அழும் சப்தம் கேட்டது. கதவு தாழிடப்பட்டிருந்தது. "விநோதினி! இதோ நான் வந்துவிட்டேன். பயப்படாதே, அழாதே!" என்று சொல்லிக்கொண்டே பலங் கொண்டமட்டும் கதவை உதைத்துத் தள்ளினான். கதவு திறந்து கொண்டது. யாரோ கட்டிலில் படுத்திருப்பது தெரிந்தது. விளக்கை ஏற்றினான். அதற்குள் விஹாரி ஓடிவந்து, கட்டிலில் பயத்தினால் நடுநடுங்கி அழுதுகொண்டிருக்கும் வஸந்தனை எடுத்து மடியில் படுக்கவைத்துக்கொண்டு தேறுதல் கூறிச் சாந்தப்படுத்தினான்.

மஹேந்திரன் திகைத்து மறுபடியும், "விநோதினியை எங்கே வைத்திருக்கிறாய்? சொல்" என்றான்.

விஹாரி: நண்பா, ஏன் இப்படி அமர்க்களம் செய்கிறாய்? இக்குழந்தையை வீணில் நடுங்க வைத்துவிட்

டாய். இவனுக்கு ஜுரங்கூட வந்துவிடும்போல் இருக்கிறது. நான்தான் சொன்னேனே, விநோதினியினால் உனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லையென்று.

மஹேந்திரன் கோபத்தினால் பற்களை நறநறவெனக் கடித்து, "ஹே சாது! மஹாத்மா! மிக்க யோக்கியன் போல் நடிப்பதை நிறுத்து! என் மனைவியின் போட்டோவைக் கையில் வைத்துக்கொண்டு என்ன மந்திரம் ஜபித்துக்கொண்டிருந்தாய்? பாவி! மோசக்காரா!" என்று கத்தினான். அங்கே விழுந்து கிடந்த போட்டோவை எடுத்து விட்டெறிந்தான். அதைச் செருப்பால் மிதித்துக் கண்ணாடியைத் தூளாக்கினான்; படத்தைச் சுக்கு நூறுகக் கிழித்தான்.

விஹாரியின் மனம் சிதைந்தது. பேச நா எழவில்லை. வாசற்புறம் சுட்டிக் காட்டி, "போ!" என்றான்.

மஹேந்திரன் ஆத்திரத்துடன் வெளியே சென்று விட்டான்.

---

## முப்பத்தேழாம் அத்தியாயம்

விநோதினி தனது கிராமம் வந்தடைந்தாள். மனத்தை எவ்வளவோ திடப்படுத்திக்கொண்டாள்; 'சீ, இனி நான் ஏதும் வேண்டேன்! உலகசுகத்தையெல்லாம் வெறுத்து, மறந்துவிட்டு எஞ்சிய வாழ்க்கையைப் பிறர் அறியாது நிம்மதியுடன் கழித்துவிடுகிறேன். புண்ணியக் கதைகளைப் படிப்பது, ஒழிந்த நேரத்தில் கிராமத்தினருக்கு முடிந்த உதவியைச் செய்வது, இப்படிக் காலத்தைக் கழிக்க வேண்டும்' என்று முடிவு செய்துகொண்டாள். அவள் குடிசையை அடையும்போது சாயங்காலமாகிவிட்டது.

அந்த மண்குடிசை ஜனப்பழக்கமற்றுப் பாழடைந்து பார்க்கப் பயங்கரமாகக் காணப்பட்டது. விஹாரி அவளை ஸ்டேஷனிலேயே இறக்கிவிட்டுப் போய்விட்டான். பூட்டிக் கிடந்ததால் கதவைத் திறந்ததும் குப்பென நாற்றம் வீசியது. விநோதினி தன் மனத்தை எவ்வளவோ திடப்படுத்திக்கொண்டு வந்தும் அக்குடிசைக்குள் அடியெடுத்து வைக்கப் பின்வாங்கினாள். அவ்விடத்தைக் காணவே அசங்கியமாக இருந்தது. உள்ளே ஒரே இருட்டு. ஒரு மூலையில் கிடந்த தகர மண்ணெண்ணெய் விளக்கை ஏற்றினாள். புகை சூழ்ந்திருந்த அந்த மங்கலான வெளிச்சத்தில் குடிசையின் அலங்கோலம் பின்னும் பயங்கரமாகப் புலப்பட்டது. சுவர், சாமான், யாவும் செல்லரித்துக் கிடந்தன. எங்கே பார்த்தாலும் எலிவளைகள் தோண்டப்பட்டு மண் குவிந்து கிடந்தது. முன்பு அவளுடன் வசித்துவந்த தூரபந்துவான ஒரு கிழவியும் தன் பெண்ணைப் போய்ப் பார்த்துவர மருமகன் வீட்டிற்குச் சென்றிருந்தாள்.

விநோதினிக்கு அக்குடிசையில் தனித்திருக்கவே பிடிக்கவில்லை. அண்டை வீட்டிற்குச் சற்றப்போய் வருவோமென்று சென்றாள். அவளைத் தூரத்தில் பார்த்ததுமே கிராமத்து ஸ்திரீகள், மோவாயில் கையை வைத்துக்கொண்டு, "விநோதினியைப் பார்த்தாயோடீ? என்ன நன்றாய் வெளுத்துக் குண்டுமாதிரி வந்திருக்கிறாள்! அவள் புடைவையும் அவள் அதை உடுத்தும் மாதிரியும் பறங்கிக்காரச்சி போலன்றோ இருக்கின்றன!" என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டனர். விநோதினியின் காதிலும் இது விழாமலில்லை. கிராமத்தினருக்கு அவளிடம் நெருங்கவே விருப்பமில்லையென்பதை அவள் சீக்கிரமே

கண்டுகொண்டாள். தான் வசித்த கிராமத்திலேயே தான் இப்படிப் பகிஷ்கரிக்கப்பட்டவள் போல் நடத்தப் பட்டது அவள் மனத்தைப் பின்னும் புண்படுத்தியது.

விஹாரியை அவள் தனக்கு வாரத்திற்கு ஒரு கடிதமாவது இரண்டு வரிகள் தவறாது எழுதுமாறு மிகவும் வேண்டிக் கொண்டிருந்தாள். வந்து இரண்டு நாட்களே ஆனபோதிலும் விஹாரியினிடமிருந்து கடிதம் கிடைக்காதாவென எதிர்பார்த்து ஏங்கித் தவித்தாள். குளத்தில் குளிக்கப் போகும் சமயம் அவளுக்கு வெகு நாட்களாகத் தெரிந்த தபாற்காரக் கிழவன் அவ்வழியே வந்தான். ஆவலுடன் விநோதினி தலைப்பை இழுத்து நன்றாக உடம்பை மூடிக்கொண்டு, "எனக்கு ஏதாவது கடிதம் இருக்கிறதா?" என்று அவனைக் கேட்டாள். அவன், "இல்லை" என்று சொன்னான். "இருக்கிறதா என்று பார்க்கிறேன்" என்று சொல்லி அந்த ஊருக்கு வந்த நாலைந்து கடிதங்களை அப்படியும் இப்படியும் புரட்டிப் பார்த்துவிட்டுத் தனக்கு ஒரு கடிதமும் இராது போகவே முகம் தொங்கிக் குளத்திற்குத் திரும்பிவந்தாள். அப்பொழுது அவள் தோழி ஒருத்தி ஆச்சரியத்தினால் கண்கள் விரிய, "ஏண்டி விநோதினி, கடிதத்திற்காக இவ்வளவு ஆத்திரப் படுவானேன்?" என்று கேட்டாள். அதற்குள் மற்றொருத்தி, "வாஸ்தவந்தானடீ. கடிதம் வருவதற்கும் கொடுத்துவைத்திருக்க வேண்டுமோ இல்லை யோடீ! நம்ம பந்துக்கள்கூட உத்யோகந்தான் பார்க்கிறார்கள். ஆனால் ஒரு கடுதாசியாவது போடுகிறார்களா?" என்றாள். இப்படியெல்லாம் எல்லோரும் பரிஹஸிக்க ஆரம்பித்து விட்டனர் விநோதினியை. மஹேந்திரனுக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பு அவ்

லூராருக்கு எவ்விதமோ எட்டிவிடவே அவர்கள் அவளைப் பார்த்துக் கண் சிமிட்டி ஏசிப் பேசத் தொடங்கினர். ஒருவர் முகத்திலும் விழிக்காமல் தூர இருப்போமென்றாலும் அச்சிறு கிராமத்தில் விநோதினிக்கு அது எப்படிச் சாத்தியமாகும்? மனநிம்மதிக்காக இங்கு ஓடிவந்தால் இங்கும் அவளுக்கு அமைதியில்லை. கிராமத்தார் நடத்தையும் பேச்சும் புண்ணில் கோலிடுவதுபோன்று இருந்தன.

இரண்டாம் நாளும் விஹாரியிடமிருந்து கடிதம் கிடைக்காது போகவே அவள் மிகவும் ஏமாற்றமுற்றாள். உடனே அவனுக்கு ஒரு கடிதம் எழுதினாள்:

"விஹாரி பாபு,

ஏதோ காதற்கடிதமென்று நினைத்துப் பயப்படவேண்டாம். என்னைக் காக்குந் தெய்வமென்று நான் தங்களை வழிபடுகிறேன். ஆகையால்தான் நான் பாபியானாலும் தாங்கள் அதற்கு விதித்த கொடுந்தண்டனையையும் மனமுவந்து ஏற்றுக் கொண்டேன். நான்படுந் துன்பத்தைத் தாங்கள் கண்ணாரக் கண்டால் தங்கள் மனமும் கரைந்துவிடும். ஆனால் எனக்கு அத்தகைய பாக்கியம் ஏது? எந்தகைய துன்பத்தையும் தங்கள் சரணாரவிந்தத்தை ஸ்மரித்தே சகித்துக்கொள்ள நான் சித்தமாயிருக்கிறேன். ஹே பிரபோ, சிறையில் இருக்கும் குற்றவாளிக்குங்கூடச் சிறிதளவு, உயிர்வாழப் போதுமான அளவாவது உணவு கிடைக்கிறது. துர்ப்பாக்கியவதியான எனக்குத் தங்கள் கைப்பட இரண்டு வரிக் கடிதந்தான் உயிர் வாழ உணவுக்குச் சமானம். எனது இந்த அற்ப வேண்டுகோளைக் கூட ஏற்கமாட்டீர்களா?

எனது அகங்காரத்திற்குரிய தண்டனை கிடைத்துவிட்டது. இப்படிப் பிறரெதிரில் தலைகுனிய நேரிடுமென்று நான் கனவிலும் நினைத்திருக்கவில்லை. இப்பொழுது என்மீது தாங்கள் வெற்றி கொண்டதை நான் அங்கீகரிக்கிறேன். ஆனால்

பிரபுவே, என் மீது சற்று இரக்கங் கொள்ளுங்கள். நான் வேண்டுவதெல்லாம் உயிர்வாழச் சிறு ஆதாரம். அதைத் தாங்கள் எனக்கு அளித்தால் போதுமானது. எனது வேதனை நிரம்பிய மனம் வெடித்துவிடும்போல் இருக்கிறது. ஆனால் எதையும் தங்களிடம் வெளியிடுவதில்லை யென்று சங்கற்பித்துக் கொண்டிருக்கிறேன்.

இப்படிக்கு,
தங்கள்
விநோதினி"

கடிதத்தைத் தானே கொண்டுபோய்த் தபாலில் போட்டு வந்தாள். இதைப் பார்த்த கிராமத்தாரின் வம்பிற்குக் கேட்பானேன்; "சீச்சீ! என்ன மானங் கெட்டவள்! கதவைச் சாத்திக்கொண்டு கடிதம் எழுதுவது, அதை எடுத்துக்கொண்டு தபாலாபீஸிற்குப் போய்ப்போடுவது! கல்கத்தா சென்று வெட்கம் மானம் யாவற்றையும் துறந்துவிட்டாள்" என்று இகழ்ந்தனர்.

கொந்தளிக்கும் கடலில் அகப்பட்ட மரக்கலம் போன்றிருந்தது அவள் நிலை. மனத்தை நிலை நிறுத்த ஒரு சிறு ஆதாரமாவது அகப்படாதா வென்று தவித்தாள். விஹாரியின் ஞாபகச் சின்னமாகத் தன்னிடம் ஒன்றுமில்லையே என வருந்தினாள். அவன் கையெழுத்திட்ட ஒரு துண்டுக் கடிதமானாலுங் கூட அது தனக்குப் பெரிய ஆதாரமாகவும் துணையாகவும் இருக்குமென அவளுக்குத் தோன்றியது. சதா ஒருவரைத் தியானித்தால் அவர் நம்மால் இழுக்கப்படுவாரென்று சொல்லிக் கேட்டதுண்டு. அவளும் கண்களை மூடிக் கைகளைக் கூப்பி விஹாரியின் உருவத்தை மனத்தில் இருத்தி, "ஹே பிரபோ, எனக்கு எங்கும் சூன்யமயமாகவே காண்கிறது. வாழ்க்கையும் அப்படியே. இதற்கிடையே தங்கள் தரிச

னத்தை ஒரே ஒருமுறை வேண்டுகிறேன். தாங்கள் வரத்தான் வேண்டும்'' எனப் பிரார்த்தித்தாள். இதில் அவளுக்கு ஒருவகைச் சாந்தியும் மனோபலமும் ஏற்பட்டதுபோல் தோன்றியது. அவ்விருண்ட குடிசையில் அவள் வெகுநேரம்வரை விஹாரியைப்பற்றிய சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தாள்.

அச்சமயம் யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. தனது வேண்டுகோள் ஏற்றுக்கொள்ளப் பட்டதாகக் கருதி ஓடிப்போய்க் கதவைத் திறந்து கொண்டே, "பிரபுவே! வந்து விட்டீர்களா?'' என்று மனவெழுச்சியுடன் கூறி நின்றாள்.

"ஆமாம், வந்துவிட்டேன், விநோதினி!'' என்று கூவிக்கொண்டே மஹேந்திரன் உள்ளே நுழைந்தான்.

விநோதினி வெறுப்புடன் அவனைச் சபித்துக் கொண்டே, "நீ ஏன் இங்கு வந்தாய்? வெளியே போ! ஒரு நிமிஷமும் இங்கே நில்லாதே!'' என்று கர்ஜித்தாள்.

மஹேந்திரன் திகைத்து ஸ்தம்பித்து நின்று விட்டான். தற்செயலாய் அங்கு விநோதினியுடன் ஏதோ பேசவந்த அண்டைவீட்டுப் பாட்டி ஒருத்தி மஹேந்திரனைப் பார்த்துவிட்டு, "ஐயோ! அடியம்மா!'' என்று சொல்லித் தலையில் முட்டாக்கைச் சரியாகப் போட்டுக் கொண்டு தெருவை நோக்கி ஓட்டம் பிடித்தாள்.

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

கிராமமுழுவதும் ஒரு நொடியில் இச்சங்கதி பரவியது. கிராமச் சாவடியில் கிராமத்துப் பெரியோர்களின் 'மகாசபை' கூடியது. "அந்த வெட்கங்கெட்ட பிரஷ்டை கல்கத்தாவில் கூத்தடித்தது போதாதென்று கடிதம் எழுதி அவனை இங்கேயும் வரவழைத்து விட்டாளாமே! என்ன துணிச்சல் அவளுக்கு? இனிச் சும்மா இருக்கக் கூடாது. அவளை விரட்டியடிக்கவேண்டும்" என்று பேசிக்கொண்டிருந்தனர்.

விஹாரியின் கடிதத்தைக் கடைசிவரை எதிர்பார்த்தும் ஒரு வரியுள்ள கார்டும் கிடைக்காது போகவே ஏமாற்றத்தினால் விநோதினியின் மனம் மாறியது. 'நான் எதற்காக அவர் ஆக்ஞைப்படி நடக்கவேண்டும்? அவமானம், உலகநிந்தனை, இந்த வனவாசம், சுகமற்ற வாழ்க்கை இவை யாவற்றையும் சகித்து ஏன் அனுபவிக்க வேண்டும்? ஆசா சுகமடையவேண்டி நான் கஷ்டப் படுவது என்ன நியாயம்? அவள் சுகவாழ்க்கையைக் குலைக்கவேண்டுமெனக் கங்கணம் கட்டிக்கொண்டிருந் தேனே; அதையேன் நிறைவேற்றாது ஓடிவந்தேன்? என்னை இவ்வளவு துச்சமாக நினைக்கும் விஹாரியிடம் நான் ஏன் அடைக்கலம் புகுந்தேன்? என் மனம் அவரை ஏன் நாடியது? எல்லாம் எனது தவறு. எனது புத்தி ஏன் இப்படிப் போயிற்றோ!' என்றெல்லாம் எண்ணித் தன்னையே நொந்துகொண்டாள்.

அதேசமயம் மருமகனைப் பார்க்கச் சென்றிருந்த அவளுடைய ஒன்றுவிட்ட மாமியார் வந்து சேர்ந்தாள். வந்ததும் விநோதினியைத் தூஷிக்க ஆரம்பித்தாள். "வெட்கங்கெட்ட பெண்ணே, ஊரெல்லாம் உன் பேச்சே அடிபடுகிறதே; என்னடீ இது?" என்றாள்.

"அவை யாவும் உண்மையே" என்றாள் விநோதினி.

"சீச்சீ! உனது ஜன்மத்தைக் கொளுத்த! இங்கே ஏன் திரும்பிவந்தாய்? எல்லாரும் இறந்தொழிந்தனர். உனது இச்சீர்கெட்ட நிலையைக் காணவே நான் ஜீவித்திருக்கிறேன் போலிருக்கிறது! என்னால் சகிக்க முடிடவில்லை. ஊரார் முகத்தில் நான் எப்படி இனி விழிப்பது! நீ ஒழிந்து போ, இவ்விடத்தை விட்டு!" என்று கத்தினாள் அக்கிழவி.

"நான் இப்பொழுதே போய்விடுகிறேன்" என்றாள் விநோதினி.

விநோதினியின் கடுஞ்சொற்களைக் கேட்டதும் மஹேந்திரன் திரும்பி ரெயில்வே ஸ்டேஷனுக்கே சென்று இரவு முழுவதும் அங்கேயே கழித்தான். அவன் எப்படியும் விநோதினியை அழைத்தே செல்வதெனத் தீர்மானித்தான். 'விஷயம் ஊரறிந்துவிட்டது. இனிப் பின்வாங்குவானேன்? மனோரதத்தைப் பூர்த்தி செய்துகொண்டே விடுவது' என நிச்சயித்தான். இரவு முழுவதும் நித்திரையில்லை. அன்ன ஆஹாரமில்லை. முகம் வெறிகொண்டவனது போல் இருந்தது. பொழுது விடிந்ததும் ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு விநோதினியின் வீட்டை அடைந்தான்.

"விநோதினி, நான் நீ நினைப்பதுபோல் அவ்வளவு நீசனல்ல. உன்னை மாத்திரம் ஊர் அபவாதத்திற்கு

ஆளாக்கிவிட்டு நான் அதிலிருந்து தப்ப விரும்பவில்லை. நான் உன்னை அழைத்தே செல்வேன். முதலில் நீ இங்கிருந்து புறப்படு. பிறகு உன் இஷ்டப்படியெல்லாம் நான் நடக்கத் தயார்'' என்றான்.

''உன்னுடன்கூடவே வருகிறேன். அழைத்துச் செல்'' என்றாள் விநோதினி. அப்பொழுது விநோதினியின் ஒன்றுவிட்ட மாமியார் மஹேந்திரனிடம் வந்து, ''மஹேன், என்னை அடையாளம் தெரியவில்லையா உனக்கு? நான் உனக்கு ஒன்று விட்ட சித்தியாக வேண்டும். நானும் உன் தாய் ராஜலக்ஷ்மியும் இதே கிராமத்தில் பிறந்து ஒன்றாக வளர்ந்தவர்கள். தாயை விட்டு, மனைவியை விட்டு, அறிவிழந்து என்ன காரியம் செய்கிறாய்? நான்குபேர் மத்தியில் இனி நீ தலையெடுப்பது எப்படி?'' என்று புத்தி கூறினாள். மஹேந்திரனின் வெறிகொண்ட மனத்திலும் அவள் வார்த்தை ஊடுருவியது. கனவினின்றும் விழித்தது போன்ற ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. தாயைவிட்டு, மனைவியைவிட்டு, ஓர் உயர் குடும்பத்தில் பிறந்த விதவையுடன் தான் வீட்டை விட்டு ஓடுவது அப்பொழுதே நினைவிற்கு வந்தாற்போல் இருந்தது. அவன் பேசாது நின்றிருந்தான்.

கிழவி மறுபடியும், ''ஏன் நிற்கிறாய்? பேசாமல் புறப்பட்டுச் செல்'' என்றாள்.

இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே விநோதினி வண்டியில்போய் ஏறிக்கொண்டாள். மஹேந்திரனும் ஏறப் போனான். ஆனால் விநோதினி அவனைத் தடுத்து, ''ஸ்டேஷன் அதிகத் தூரமில்லை. நீ நடந்தே வா'' என்றாள்.

"கிராமத்தார் முன்னிலையிலா?" என்றான் மஹேந்திரன். "இன்னும் வெட்கம் மானம் பாக்கியிருக்கின்றனவா?" என்றாள் விநோதினி.

வண்டி புறப்பட்டுச் சென்றது. அக்கிரகாரத்தின் வழியாகச் செல்லாது குறுக்கே தோப்புகளில் புகுந்து சென்று மஹேந்திரன் ஸ்டேஷனை அடைந்தான்.

---

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

ராஜலக்ஷ்மி, மஹேந்திரன் வீட்டை விட்டுச் சென்றதுமுதல் மனக்கிலேசமுற்று ஊண் உறக்கம் யாவுமொழிந்து படுத்த படுக்கையாய்க் கிடந்தாள். எங்கெங்கே தேடியும், விசாரித்தும் அவன் போன இடம் தெரியவில்லை.

இதற்கிடையில் மஹேந்திரன் விநோதினியை அழைத்துக்கொண்டு கல்கத்தா வந்துசேர்ந்தான். ஒரு வீடு குடிக்கூலிக்குப் பேசி அதில் அவளை விட்டுத் தான் மாத்திரம் வீட்டிற்கு வந்தான். தாய் அதிகமாக நோயுற்றுப் படுத்திருப்பதையும் ஆசா அவளருகில் உட்கார்ந்து காலைப் பிடித்துக்கொண்டிருப்பதையும் கண்டான்.

அவனைக் கண்டதும் ஆசா திடுக்கிட்டு எழுந்து உடனே அறையை விட்டு வெளியே போய்விட்டாள். மஹேந்திரன் அன்னையின் அருகில் சென்று, "அம்மா, வீட்டில் இருப்பது படிப்பிற்கு இடையூறாக இருக்கின்றது. காலேஜிற்குப் பக்கத்திலேயே ஓர் அறை வாடகைக்கு எடுத்துக்கொண்டு இனி அங்கிருந்து படிக்கத் தீர்மானித்திருக்கிறேன்" என்றான்.

ராஜலக்ஷ்மி அவனைத் தன் அருகில் வந்து உட்காருமாறு சைகை செய்தாள். அவனும் மிகச் சங்கோசத்துடன் தாயின் அருகில் போய் உட்கார்ந்தான்.

"மஹேந், நீ எங்கே வேண்டுமானாலும் இரு. ஆனால் என் ஆசாவின் மனத்தை மாத்திரம் வருத்தாதே. இதுவரை அவளது நற்குணத்தை அறியாமல் நான் என்ன தவறு செய்தேன்! நீ எல்லாம் தெரிந்தவனுயிருந்தும் அவளை இக்கோர துக்கத்திற்கு ஆளாக்க எப்படி மனந்துணிந்தாய்? இன்று இரவாவது வீட்டில் இருப்பாயோ மாட்டாயோ?" எனக் கூறிக் கண்ணீர் பெருக அவன் முகத்தை நோக்கினுள் ராஜலக்ஷ்மி.

எழுந்து ஓட முடிந்திருந்தால் மஹேந்திரன் ஓடிப் போயிருப்பான். ஆனல் அச்சமயம் அதுவும் முடியவில்லை. "இரவு இருக்கப் போவதில்லை" என்றான் "என்ன? ஆசாவுடன் ஒன்றும் பேசக்கூடப் போவதில்லையா? பாவம்! அவள் இந்த மூன்று தினங்களாய்ப் படும் மனோவேதனையை ஈசனே அறிவார்! உனது லஜ்ஜையற்ற செய்கையைக் கண்டு என் உள்ளம் வெடித்துவிட்டது" என்று கூறி வேரற்ற மரம்போல் படுக்கையில் சாய்ந்தாள்.

இதுதான் சமயமென்று மஹேந்திரன் மெள்ள அவ்வறையைவிட்டு நழுவினுன். மாடி மீதிருக்கும் தனது அறைக்குச் சென்றான். அங்கே ஆசாவைச் சந்திக்கக் கூடுமென்று அவன் எதிர்பார்க்கவும் இல்லை; அவன் அதை விரும்பவும் இல்லை.

ஆசா ஆழ்ந்த யோசனையில் இருந்தாள். அவன் படியேறிவரும் சப்தம் அவள் செவியில் படவில்லை.

எதிரே வந்ததும் திடுக்கிட்டு எழுந்து ஒதுங்கி நின்றாள். அடியெடுத்து வைக்கக் கால்கள் மறுத்தன.

"ஆசா!" என்று அவன் ஒருமுறை அழைத்திருந்தால் கூடப்போதும்; உடனே நடந்தவை யாவற்றையும் மறந்து அவனை மன்னித்துத் தனது துக்கம் தீர அவனைக் கண்ணீரால் அபிஷேகம் செய்வித்திருப்பாள். ஆனால் அவன் அவள் பெயரைச் சொல்லவும் அஞ்சினான். அவளுடன் பேச எவ்வளவோ முயன்றும் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை. மனத்தில் ஒன்றும் வாயில் ஒன்றுமாகப் பேச அவனால் முடியவில்லை. தானே விளைவித்த அனர்த்தத்தைத் தானே தவிர்த்துக்கொள்வது முடியாதென்று உணர்ந்தான். விநோதினிக்கும் தனக்கும் ஏற்பட்ட பிணைப்பு இனி அறுபட முடியாததென்று நினைத்தான். 'காரியம் கைமீறிவிட்டது. இனி அவளுக்கு இவ்வுலகில் என்னைத் தவிர வேறு கதியில்லை. இனி விரும்பட்டும் விரும்பாது போகட்டும், அவளைக் காக்கும் பொறுப்பு என் தலையில்தான்' எனத் தீர்மானித்தான். தான் அதே மாடி அறையில் ஆசாவுடன் அநுபவித்த சுகங்களெல்லாம் ஒருமித்து நினைவிற்கு வரவே ஒரு நிமிஷம் ஸ்தம்பித்துப் பேசாது நின்றான். 'இல்லை! இனி நான் அவற்றையெல்லாம் மறந்துவிடவேண்டும். நினைத்துப் பயனில்லை. அப்பிணைப்பை என் கையால் நானே அறுத்துப்போட்ட பிறகு வருந்திப் பயனென்ன?' என்று சமாதானம் செய்துகொண்டான்.

ஒருமுறை ஆசாவைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான். அவள் அவனைப் பார்க்கவுமில்லை; அவ்விடத்தை விட்டு அசையவுமில்லை. பதுமை போன்று நின்றாள். வாய்

விட்டு அழத் தோன்றியது அவளுக்கு. ஆனால் வெகு கஷ்டத்துடன் அதை அடக்கிக்கொண்டிருந்தாள். அவ் விருண்ட இரவு அவளது வேதனைநிரம்பிய முகத்திற்குத் திரையிட விரும்பியதுபோல் அதை ஒருவாறு மறைத்தது.

என்ன நினைத்துக்கொண்டோ மஹேந்திரன் அவளருகில் வந்தான். ஆசாவிற்குத் தேகத்தில் ரத்த ஓட்டமே நின்றுவிட்டது போல் தோன்றியது. அவள் தன் கண்களை இறுக மூடிக்கொண்டாள். அவன் சொல்ல நினைத்தது என்னவோ! பேசாதுதிரும்பவும் மனமில்லை. கடைசியில் என்ன கேட்பதென்று தெரியாமல், "கொத்துச் சாவி எங்கே?" என்றான்.

அது படுக்கையடியில் இருந்தது. ஆசா கட்டிலருகில் சென்றாள். மஹேந்திரனும் கூடவே சென்றான். தலையணை அடியிலிருந்து சாவிக்கொத்தை எடுத்து அவன் முன்பு வைத்தாள். அதை எடுத்துக்கொண்டு அவன் தனது அலமாரியைத் திறக்க ஒவ்வொரு சாவியாய்ப் போட்டுப் பார்த்தான். ஒன்றும் திறக்கவில்லை.

ஆசாவினால் இதைப் பார்த்துக்கொண்டே பேசாது நிற்கமுடியவில்லை. "இந்த அலமாரியின் திறவுகோல் என்னிடம் இல்லை" என்றாள். வேறு யாரிடம் இருக்கிறதென்பதை அவளால் பெயர் குறிப்பிட்டுச் சொல்லவும் முடியவில்லை. அவன் அதை அறிந்து கொண்டான். ஆசாவினால் துக்கத்தை அடக்க முடியாது போயிற்று. சரேலென வெளியே சென்று அவ்வளவு நேரம் தடுத்த வெள்ளம் கரைபுரண்டோடியதுபோல் விக்கி விக்கி அழத் தொடங்கினாள்.

ஆனால் அதிகநேரம் அழவும் முடியவில்லை. மஹேந்திரனின் சாப்பாட்டு நேரமாகிவிட்டது நினைவிற்கு வரவே

அவசர அவசரமாய்க் கீழே இறங்கி வந்தாள். "மகேந்திரன் எங்கே இருக்கிறான்? அம்மா" என்று வினவினாள் ராஜலக்ஷ்மி.

ஆசா: மேலே இருக்கிறார்.

ராஜலக்ஷ்மி: பின் நீ ஏன் கீழே வந்துவிட்டாய்?

ஆசா தலைகுனிந்து, "அவருக்குச் சாப்பாடு. . . ." என்றாள்.

"சாப்பாடு எல்லாம் நான் தயார் செய்து அனுப்பு கிறேன். நீ சீக்கிரம் சென்று இக்கிழிந்த புடைவையை அவிழ்த்துவிட்டு வேறு நல்லதாக ஒன்று உடுத்திக் கொண்டு முகத்தைக் கழுவிக்கொண்டுவா. நான் தலை வாரிப் பின்னுகிறேன்" என்றாள்.

ஆசாவுக்குத் தன்னைச் சிங்காரித்துக்கொள்ள வெட்கம் ஒரு புறம், துக்கம் மறுபுறம். மாமியார் சொல்வதையும் தடுக்க முடியவில்லை. அவள் சொல்லியபடியே செய்து கொண்டாள். மெள்ள மாடியேறி எட்டிப் பார்த்தாள். அவனைக் காணவில்லை. ஒவ்வோர் அறையாகச் சென்று பார்த்தாள்; எங்கும் காணவில்லை. அலமாரிப் பூட்டு உடைபட்டுக் கீழே கிடந்தது. அதிலிருந்து சில துணிகளை எடுத்துப் போயிருந்தான் மகேந்திரன்.

மறுதினம் ஏகாதசி. ராஜலக்ஷ்மி மிகவும் களைப்புற்றுப் படுத்திருந்தாள். ஆசா மெள்ள அவளது தேகத்தை வருடிக்கொண்டே, "அம்மா, பால் பழம் எல்லாம் கொண்டு வந்திருக்கிறேன்; சாப்பிடுகிறீர்களா?" என்றாள்.

ராஜலக்ஷ்மிக்கு இந்த அன்புப் பணிவிடையினால் ஆனந்தக்கண்ணீர் பெருகியது. அவள் ஆசாவை அருகில்

இழுத்து முத்தமிட்டு, "மஹேறன் என்ன அம்மா செய்து கொண்டிருக்கிறன்?" என்ருள்.

வெட்கமும் துக்கமும் ஆசாவின் நெஞ்சை அடைத்தன. "நேற்றிரவே எங்கோ போய்விட்டார்" என்ருள்.

இதைக் கேட்டு ராஜலக்ஷ்மியின் உற்சாகமெல்லாம் பறந்தது.

---

## நாற்பதாம் அத்தியாயம்

மஹேந்திரன் சில துணிகளும் புத்தகங்களும் எடுத்துப்போக வீட்டிற்கு வந்தசமயம் விநோதினி அவ்வாடகை வீட்டில் தனிமையாய் உட்கார்ந்து யோசிக்கலாளுள். வாழ்வில் அவளது நலத்தைக் கோருபவர் வெகு சொற்பம். தனது செய்கையினுல் அச்சிலரையும் இப்பொழுது அவள் இழந்துவிட்டாள். கொந்தளிக்கும் கடலின் மத்தியிலுள்ள ஒரு சிறு படகு, படகோட்டி சாவதானமாக இரா விடில் எந்த நிமிஷத்திலும் கவிழ்ந்து அவனைக் கடலுள் அமிழ்த்தி விடக்கூடும். மஹேந்திரனை அப்படகாகவும் தன்னைப் படகோட்டிக்குச் சமானமாகவும் பாவித்துத் தனது நிலைமையை ஒப்பிட்டுக் கொண்டாள். திடசித்த மற்ற அவனிடம் தன்வாழ்வை ஒப்பிப்பதால் ஏற்படும் அபாயத்தை நினைக்கவே அவள் மனம் கலங்கியது. அவனிடம் அவளுக்கு நம்பிக்கையில்லை. தன்னைப் போன்ற பால்ய விதவை ஆதரவின்றித் தன்னந்தனியாய் இவ்வகண்ட உலகில் வாழ்க்கை நடத்தப் புறப்படுவதன் அனர்த்தத்தையும் அவள் அறியாமல் இல்லை. நம்பிக்கையான ஆச்ரயம் அளிக்கக் கூடியவர் ஒரே ஒருவர்தாம் உண்டு. இது

விஹாரியிஞல்தான் முடியுமென்பதை அவள் நன்ருக அறிந்தாள்.

விஹாரி அதே ஊரில் இரண்டு தெருக்களுக்கு அடுத்தாற்போல் வசிப்பதை அவள் அறிவாள். அவனது சுத்தமான வீடு, அவன் சிறுவன் வஸந்தனுக்குக் கல்வி கற்பிப்பது, அச்சிறுவனின் அழகிய குழந்தை முகம், தான் அவ்விடம் ஒருநாள் சென்றது, அன்று நடந்த சம்பவம் யாவும் இப்பொழுதும் கண்முன் நடப்பனபோல் தோன்றின.

இதை நினைக்கவே அவள் தேகம் சிலிர்த்தது; உணர்ச்சி பொங்கியது. இப்பொழுதும் நினைத்தமாத்திரத்தில் அவள் அங்கே செல்லக்கூடும். ஆனல் இப்பொழுது முன்போல் ஆத்திரப்பட்டு அவள் எதையும் செய்ய விரும்பவில்லை. தனது உத்தேசம் கைகூட ஆர அமர யோசித்து வகை செய்ய விரும்பினுள். தனது கடிதத்திற்குப் பதிலை எதிர்பார்த்தாள். அதைப் பார்த்துக்கொண்டுதான் ஒருவித முடிவிற்கு வருவது உசிதமென்று அவளுக்குத் தோன்றியது. 'வீணில் ஆத்திரப்பட்டு விஹாரியின் மனத்தைக் கெடுப்பது நலமன்று' எனக் கூறிக்கொண்டாள்.

தனது பெயருக்கு ஏதாவது கடிதம் வருமாகில் அதைக் கல்கத்தா விலாசத்திற்கு அனுப்புமாறு தன் கிராமத் தபாலாபீசில் ஏற்பாடுசெய்துவிட்டு வந்திருந்தாள். தனக்கு எப்படியும் விஹாரி பதிலெழுதுவான் என்பது அவளது முடிவான நம்பிக்கை. இவ்வார முடிவிற்குள் பதில் வராவிடில் பிறகு பார்த்துக்கொள்ளுவோமென்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டாள்.

இச்சமயம் மஹேந்திரனும் அங்கு வந்துசேர்ந்தான். மூன்று நான்கு தினங்களாய் வேலைக்கு ஆகாரமில்லை;

நித்திரையில்லை. மனக்கிலேசம், அலைச்சல் எல்லாமாகச் சேர்ந்து அவனைக் கேவலம் நடைப்பிணமாகச் செய்து விட்டன. விநோதினி இருக்கும் வீட்டு வாயிற்கதவு தாழிடப்பட்டிருந்தது. தெருவில் போவோர் வருவோர் முன்னிலையில் வாயிலில் நின்று கதவைத் தட்டிக் கூப்பிட அவனுக்கு வெட்கமாயிருந்தது. புதுவேலையாள் படுத்துத் தூங்கிவிட்டான்போல் இருந்தது; பலமாய் இடித்துத் தட்டிக் கூவிய பிறகுதான் கதவு திறக்கப்பட்டது.

மஹேந்திரன் செல்வம் மிகுந்த வீட்டுப் புத்திரன். தாய்க்கு ஒரே அருமை மகன். சுகபோகத்திற்குக் குறை வில்லை. வீடு நிறைய ஆட்கள். குடும்பநிர்வாகம், பொறுப்பு ஒன்றுமே அறியாதவன். இவ்வீட்டில் காலடி வைத்ததுமே, தான் இனி முன்போல் இருக்க முடியாதென்று அவனுக்குத் தோன்றியது. வீடு இருண்டு கிடந்தது; போதிய வெளிச்சமில்லை. மாடிப்படி, தரை எல்லாம் இடிந்து பெயர்ந்து கிடந்தன. வாயிற்புறம் இரண்டு கடைகள். "வீட்டிற்கு நல்ல பிரகாசமான விளக்குகள் வாங்கவேண்டும். வீட்டை 'ரிபேர்' செய்துகொடுக்க வீட்டுக்காரனை உடனே போய்த் தூண்டவேண்டும். வாசலில் இருக்கும் கடையை அப்புறப் படுத்திவிடவேண் டும். அதன் வாடகையையும் வேண்டுமானால் நானே கொடுத்துவிடுகிறேன்" என்றெல்லாம் நினைத்தான். இவை யெல்லாம் தன் பொறுப்பென்று நினைக்கும்போதே பெரிய பாரமாய்த் தோன்றியது.

மனத்தைத் திடப்படுத்திக்கொண்டான் அவன். எவளை அடையவேண்டி இவ்வளவு பாடுபட்டானோ அந்த விநோதினி இன்று அவனிடமே இருந்தும் மனவமைதி யில்லை.

கதவு தட்டிய சப்தத்திலிருந்தே விநோதினிக்கு வந்திருப்பது யாரெனத் தெரியும். சட்டென்று ஒரு துணியை எடுத்துக்கொண்டு தைக்க ஆரம்பித்தாள். தனது மனநிலையை மறைக்க இது ஓர் உபாயமெனக் கைக்கொண்டாள்.

மஹேந்திரன் உள்ளே வந்ததும், "இந்த வீடு உனக்கு மிகவும் அசௌகரியமாயிருக்கும்" என்றான்.

தைத்துக்கொண்டே விநோதினி, "எனக்கு ஓர் அசௌகரியமும் தெரியவில்லை" என்றாள்.

மஹேந்: இரண்டு நாள் எப்படியோ பொறுத்துக் கொள். அதற்குள் வேண்டிய சாமான் யாவும் வரவழைத்துச் சௌகரியமாய்ச் செய்து விடுகிறேன்.

விநோ: இங்கே இப்பொழுதிருக்கும் சாமான்களே யதேஷ்டம். இன்னும் வேறு வாங்கவேண்டாம்.

மஹேந்திரன் சிரித்துக்கொண்டே, "அப்படியானால் என்னைக்கூட அதிகப்படி உருப்படிகளில் ஒன்றென்று நினைப்பாயோ?" என்றான்.

நிச்சப்தமான இடத்தில் விளக்கினருகில் உட்கார்ந்து தைத்துக்கொண்டிருக்கும் விநோதினியின் முகவசீகரம் அவனை மோகத்தில் ஆழ்த்தியது. வேறு நிலையில் அவன் சுதந்திரத்துடன் இருந்தால் ஓடிப்போய் அவளை அணைத்துக்கொண்டிருப்பான். ஆனால் கூட்டில் அடைபட்ட பக்ஷிபோல் அவள் தன் கையில் அகப்பட்டிருக்கும் சமயத்தில், அவள் இச்சைக்கு விரோதமாக அவன் எதும் செய்ய விரும்பவில்லை.

விநோ: துணிமணிகளையும் புத்தகங்களையும் எடுத்து வந்திருக்கிறாயா?

மஹேந்: அவசியமென்று நினைத்துத்தான் கொண்டு வந்தேன். அவைகளும் அதிகப்படியென்று நினைக்கிறாயா?

விநோ: அவசியமென்பது தெரியும். ஆனால் இங்கே ஏன் கொண்டுவரவேண்டும்?

மஹேந்: உண்மைதான். இங்கே அவை வேண்டியதில்லைதான்! விநோதினி, இதோ அவற்றை உன்னிடமே கொடுத்துவிடுகிறேன். நீ அவற்றைத் தூரவிட்டெறிந்தாலும் எனக்கு ஆட்சேபமில்லை. ஆனால் என்னை மாத்திரம் 'தூரப் போ' என்று சொல்லிவிடாதே.

அவள் தலை நிமிரவில்லை. தைத்துக்கொண்டே, "நீ இங்கே இருப்பது கூடாது" என்றாள்.

இச்சொல் கொடியபாணம் போன்று அவன் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்தது. அவன், "விநோதினி, நான் ஏன் போகவேண்டும்? உனக்காகவன்றோ யாவற்றையும் துறந்தேன்? அதற்கு இதுதானா பிரதிபலன்?" என்றான்.

விநோதினி, "எனக்காக ஒன்றையும் துறக்க நான் உன்னை விடமாட்டேன்" என்றாள்.

மஹேந்திரன் பதற்றத்துடன், "காரியம் கை மீறி விட்டது. இப்பொழுது நீ செய்வதற்கு ஒன்றுமில்லை. வீடு வாசல் குடும்பம் யாவற்றையும் கைவிட்டு வந்தாயிற்று. இப்பொழுது நீதான் எனக்குத் துணை, கதி எல்லாம். விநோதினி, விநோதினி!" என்று அவள் கைகளைப் பிடித்துக்கொண்டான்.

விநோதினி தன் கைகளை விடுவித்துக்கொண்டு எழுந்து நின்று, "மஹேன், என்னை இங்கு அழைத்து வருமுன் என்ன சொன்னாய்? ஞாபகமில்லையா?" என்றாள்.

அதற்குள் மஹேந்திரன் சமாளித்து மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, "ஞாபகம் இருக்கிறது: உனது இஷ்டத்திற்கு விரோதமாக எதுவும் செய்வதில்லை என்று சொன்னேன். இப்பொழுதும் சொற்படி நடக்க நான் தயார். என்ன செய்யவேண்டும்? சொல்" என்றான்.

விநோ: நீ உன் வீட்டில் போய் வசிக்கவேண்டும்.

மஹேந்திரன், "உனது விருப்பம் இதுதான் என்றால் என்னை ஏன் இதுவரை இழுத்துவந்தாய்? பிடிக்காவிடில் என்னை ஏன் பின்பற்றி வந்தாய்? இதற்குக் காரணம் நீயா நானாவென்று யோசித்து நிஜத்தைச் சொல். நீ ஆட்டி வைக்கும் விதமெல்லாம் நான் ஆடும் விளையாட்டுக் கருவி யா? இருக்கட்டும். நான் எனது சொல்லைக் காப்பாற்ற இதைவிட்டுச் செல்கிறேன். எந்த வீட்டை நாசமாக்கி இனி அதில் கால் வைப்பதில்லையென்று நினைத்து வந்தே னோ அங்கேயே மறுபடி போகிறேன். ஆஹா! என்ன கடின இருதயம்! எனது துர்ப்பாக்கியமன்றோ உன்மேல் அன்பு கொள்ளச் செய்தது!" என்று கூறி வெளியே சென்றான்.

விநோதினி இன்னும் தையலிலேயே தனது கவனத் தைச்செலுத்தி அவனுக்குப் பதில் சொல்லாதிருந்தாள். அவள் அவனைப் பார்க்கவும் இல்லை.

அவன் வாயில்வரை சென்று மறுபடி உள்ளே திரும்பி வந்து, "நீ இங்கே தனியாய் எப்படி இருப்பாய்? துணை யின்றி நீ பயப்படுவாய். நான் இங்கேயே இருக்கிறேன்" என்றான்.

விநோ: அதைப்பற்றி நீ கவலைகொள்ளவேண்டாம். நம் வீட்டுப் பழைய வேலைக்காரியை அம்மா கோபித்துத் துரத்தி விட்டார்களாம். அவளை நான் இன்று முதல்

என்னிடமே வேலைக்கு அமர்த்திக்கொள்வதாகச் சொல்லி விட்டேன். அவள் எனக்குத் துணையாக இருப்பாள். கதவைத் தாழிட்டுக்கொண்டுவிட்டால் எங்களுக்குப் பயம் ஒன்றுமில்லை.

மஹேந்திரன் உடனே வெளியே போய்விட்டான். அவள் எவ்வளவுதான் அவனைக் கடிந்து விலக்கிய போதிலும், அவன் மனம் பின்னும் அதிகமாய் அவளை நாடியது.

வேறு சகாயமின்றி இருக்கும் இந்நிலையில்கூட அவள் தன்னை இப்படி அவமானப்படுத்துவதை நினைக்கும் போது அவன் மனம் பதைத்தது. 'நான் அவ்வளவு துச்சமா? என்னை இப்படி நடத்த அவளுக்கு இவ்வளவு துணிவு எங்கிருந்து வந்தது? என்னைத் தவிர அவளுக்குச் சகாயம் யார் செய்யக்கூடும்?' எனப் பலவாறு எண்ண மிட்டான்.

'ஆம்; விஹாரி இருக்கிறான்!' என்று திடீரென்று நினைவிற்கு வந்தது. மனம் கொதித்தெழுந்தது. 'விநோதினி அவனைத்தான் விரும்புகிறாள். அவளுடைய நோக்கம் அவனை அடைவதுதான். அதற்கு என்னை ஒரு சாதனமாகக் கொள்ள விரும்புகிறாள்போலும்! அவனுடன் அவள் கடிதப் போக்குவரத்துக்கூட வைத்துக்கொண் டிருக்கலாம். இல்லாவிடில் அவள் என்னை வெறுக்கக் காரணமில்லை' என்று நிச்சயப்படுத்திக்கொண்டு விஹாரி யின் வீட்டிற்கு விரைந்து சென்றான்.

வீட்டின் கதவு பூட்டப்பட்டிருந்தது. "எஜமான் வீட்டில் இல்லை" என்று வெளியில் உட்கார்ந்திருந்த வேலைக்காரன் சொன்னான்.

மஹேந்திரன் வியப்புற்றான். 'நான் முட்டாள்போல் இங்கும் அங்கும் திரிந்துகொண்டிருக்கும் சமயம் விஹாரி அவளைச் சந்திக்கச் சென்றிருக்கக்கூடும்' என நினைத்தான். வேலைக்காரனிடம், "எஜமான் எப்பொழுது வெளியில் சென்றார்?" என்று கேட்டான்.

"அவர் மேற்கே ஏதோ ஓர் ஊருக்குப் போவதாகச் சொல்லிப் புறப்பட்டுச் சென்று நான்கு ஐந்து நாட்களாகின்றன" என்றான் வேலையாள்.

மஹேந்திரனின் சந்தேகம் நீங்கியது. பழைய வேலைக்காரன் மஹேந்திரனை நன்கு அறிவான். கதவைத் திறக்கச் சொல்லி மஹேந்திரன் உள்ளே போய்ப் படுத்துக்கொண்டான். அன்று இரவை அங்கேயே கழிப்பதென்று நிச்சயித்தான்.

விஹாரியிடம் மஹேந்திரன் வந்து விநோதினியைப் பற்றி விசாரித்து உபத்திரவித்த மறுதினமே விஹாரி ஊரைவிட்டுப் போய்விட்டான். மஹேந்திரனை அடிக்கடி சந்திக்க நேரிடுவதையும் அதனால் விரோதம் இன்னும் முற்றி வருவதையும் தடுக்கவே அவன் அவ்வாறு செய்தான். அதோடு தனது துக்கத்தையும் மறந்து சாந்தியடையச் சுற்றுப் பிரயாணம் செய்வது நலமென்று அவனுக்குத் தோன்றியது.

விஹாரியின் வீட்டில் போய்ப் படுத்த மஹேந்திரன் அலுத்துப் போய் மறுதினம் காலை பதினொருமணி வரை நித்திரையினின்றும் எழுந்திருக்கவில்லை. வீட்டில் யஜமானன் இல்லாவிட்டாலும் மஹேந்திரன் அவ் வீட்டிற்குப் புதியவனல்லவாதலால் வேலைக்காரன் அவனுக்காகச் சிற்றுண்டி வரவழைத்துத் தயாராக வைத்

திருந்தான். அவன் எழுந்து பல் துலக்கிச் சிற்றுண்டி அருந்திவிட்டு மேஜையின் அருகில் போய் உட்கார்ந்தான். அங்கே முதலில் அவன் கண்ணில் பட்டது விநோதினி விஹாரிக்கு எழுதிய கடிதந்தான். கடிதம் பிரிக்கப் படாமல் அப்படியே இருந்தது. இதற்குத்தான் விநோதினி பிரதிதினமும் பதில் எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள்.

கடிதத்தைக் கையில் எடுத்ததும் மஹேந்திரனுக்கு ஆயிரம் தேள் கொட்டுவது போன்று இருந்தது. கவரை உடைத்துக் கடிதத்தைப் படித்தான். விநோதினியின் மனோபாவத்தை அறிய இனி இதைவிட வேறு அத்தாட்சி என்ன வேண்டும்! அவனுக்கு எல்லாம் சந்தேகமற விளங்கிவிட்டது. கடிதத்தைச் சிலமுறை படித்தான்.

'சீ, இனி அவள் முகத்திலேயே விழிக்கக்கூடாது' என்று முதலில் நினைத்தான். உடனேயே வேறு எண்ணம் தோன்றியது. 'கடிதத்திற்குப் பதில் கிடைக்காது போகவே அவனை நேரிலேயே காண விநோதினி வந்தாலும் வருவாள். அப்பொழுது அவன் ஊரில் இல்லாத சமாசாரம் தெரிந்தால் அவள் அவன்பால் கோபங் கொள்ளக் காரணமே இராது. இம்மாதிரி நடக்க நான் விடவேமாட்டேன்' என நிச்சயித்தான். கடிதத்தை ஜேபியில் போட்டுக்கொண்டு மறுபடி விநோதினி வசிக்கும் வீட்டை அடைந்தான்.

அவனது வாடிய முகத்தைக் கண்டு விநோதினி இரவு முழுவதும் அவன் ஊண் உறக்கமற்று அலைந்து திரிந்திருப்பானென்று நினைத்தாள். அவள் மனம்

இரங்கியது. "இரவு வீட்டிற்குச் சென்றிருந்தாயா?" என்றாள்.

மஹேந்திரன், "இல்லை" என்றான்.

உடனே அவள் அவனுக்குப் போஜனத்திற்கு ஏற்பாடு செய்ய எழுந்தாள்.

மஹேந்: எனக்காக ஒன்றும் செய்யவேண்டாம். சாப்பிட்டாயிற்று நான்.

விநோ: எங்கே சாப்பிட்டாய்?

மஹேந்: விஹாரியின் வீட்டில்.

விநோதினியின் முகம் சிறுத்தது. தனது உணர்ச்சியை மறைத்துக்கொண்டு, "விஹாரி சௌக்கியந்தானே?" என்றாள்.

மஹேந்: சௌக்கியந்தான். மேற்கே சுற்றுப் பிரயாணத்திற்குச் சென்றிருக்கிறான்.

ஏதோ விஹாரி அன்றுதான் சென்றதுபோல் மஹேந்திரன் இதைத் தெரிவித்தான்.

விநோ: என்ன விசித்திர சுபாவம்! நமது சங்கதி அவருக்கும் எட்டியிருக்குமென்று நினைக்கிறேன். இதைப்பற்றி மிகக் கோபமாயிருக்கிறாரோ?

மஹேந்திரன், "சொல்வதற்கென்ன இருக்கிறது? இதோ உனது கடிதம்" என்று சொல்லிக் கடிதத்தை அவள் கையில் கொடுத்து அவள் முகமாறுதலை உற்றுக் கவனித்தான்.

கடிதம் பிரிக்கப்பட்டிருந்தது. விநோதினி அதைத் திருப்பி நிமிர்த்திப் பார்த்தாள். விஹாரி அதிலேயே ஏதாவது எழுதியிருக்கக்கூடுமென்பது அவளது

நம்பிக்கை. ஆனால் அவனுடைய எழுத்து ஒன்றும் காணப்படவில்லை. சற்றுப் பேசாதிருந்து பிறகு, "கடிதத்தை நீ படித்தாயா?" என்று கேட்டாள்.

அவள் முகமாறுதலைக் கண்ட மஹேந்திரனுக்கு, "ஆம்" என்று சொல்லப் பயம். "இல்லை" என்று புளுகினான்.

அவள் அக்கடிதத்தைச் சுக்குநூறாகக் கிழித்து வெளியில் எறிந்தாள்.

மஹேந்திரன், "நான் வீட்டிற்குச் செல்கிறேன்" என்றான். அவளிடமிருந்து பதிலேயில்லை. அவன் மறுபடியும், "உனது விருப்பப்படி நான் நடக்கச் சித்தமாயிருக்கிறேன். இன்னும் ஒரு வாரம் வரை நான் எனது வீட்டிலேயே இருக்கிறேன். தினம் ஒரு முறை காலேஜிற்குச் செல்லும்போது வந்து விசாரித்துப் போகிறேன்" என்றான்.

அவன் சொல்லியது ஒன்றும் அவள் செவியில் பட்டதாகவே தெரியவில்லை. அவள் பதில் பேசவுமில்லை. அவன் வெளியே சென்றுவிட்டான்.

வெகுநேரம் வரை உணர்வற்றுப் பதுமைபோல் விநோதினி அங்கே உட்கார்ந்திருந்தாள். கடைசியில் துக்கம் பொறுக்கமுடியவில்லை. அடியுண்ட பக்ஷியைப் போல் கீழே தொப்பென்று விழுந்தாள். விக்கி விக்கி அழுதாள். வேலைக்காரி வந்து பார்த்து ஏதும் சொல்ல அஞ்சித் திரும்பிப் போய்விட்டாள். அன்று முழுதும் விநோதினி வெறுந்தரையில் அப்படியே படுத்திருந்தாள்.

காலையில் எழுந்ததும் ஒருவேளை மஹேந்திரன் பொய் சொல்லியிருப்பானோவெனச் சந்தேகம் தோன்றவே,

வேலைக்காரியை விஹாரியின் வீட்டிற்கு அனுப்பி அவன் இருக்கிறானா இல்லையாவெனத் தெரிந்துகொண்டு வரச் சொன்னாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் வேலைக்காரி திரும்பிவந்து, "வீடு பூட்டியிருக்கிறது. வேலையாள் 'அவர் ஊரில் இல்லை. சுற்றுப் பிரயாணம் போயிருக்கிறார்' என்று சொன்னான்" எனத் தெரிவித்தாள்.

விநோதினியின் சந்தேகம் நீங்கியது.

---

## நாற்பத்தோராம் அத்தியாயம்

'இராத்திரியே மஹேந்திரன் வெளியே போய்விட்டான். அதற்குக் காரணம் நம் மருமகளாகத்தான் இருக்கவேண்டும். அவள் கோபித்துப் பிணங்கியிருக்கக் கூடும். இல்லாவிடில் அவன் ஏன் செல்கிறான்?' என்று ராஜலக்ஷ்மி யோசித்தாள்.

ஆசாவைக் கூப்பிட்டு, "அவன் ஏன் சென்றுவிட்டான்?" என்றாள்.

ஆசா, "அதுவும் எனக்குத் தெரியாது" என்றாள்.

ராஜலக்ஷ்மி ஆத்திரத்துடன், "உனக்கு ஒன்றும் தெரியாது. பாவம், பச்சைக் குழந்தை! எல்லாம் உன்னால் விளைந்ததுதான்!" என்றாள்.

இந்த அபவாதத்தை ஆசாவினால் பொறுக்க முடியவில்லை. தனது அறைக்குள் சென்று அழுதாள். கணவன் வீட்டைவிட்டுச் சென்ற குற்றம் யாருடையதென்று அவளுக்கே விளங்கவில்லை. புருஷன் தன்மேல் முதலில் அதிக அன்பு பாராட்டியதும் அதைத் தான்

இழந்ததும் ஏன், அவ்வன்பைத் தான் திரும்ப அடைவது எப்படியென எவ்வளவு யோசித்தும் மனம் பின்னும் குழம்பியதே தவிரத் தெளிவடையவில்லை.

தன்னைக் காதலிக்கும் ஒருவனை எவ்விதம் தானும் காதலால் திருப்தி செய்வதென்பதை மனமும் போதிக்கிறது. ஆனால் தன்னை விரும்பாதவனை, வெறுப்பவனைக் காதல் கொள்ளச் செய்வது எப்படியென்பது ஆசாவுக்குப் புரியவேயில்லை. மனத்தைப் பிறரிடம் பறிகொடுத்த கணவனிடம் அன்பை யாசிப்பது வெட்கங்கெட்ட செய்கையென்றே அவளுக்குத் தோன்றியது.

ராஜலக்ஷ்மிக்கு ஜோசியம், மந்திரம் முதலியவற்றிலெல்லாம் நம்பிக்கையுண்டு. அவள் ஒரு தேர்ந்த ஜோசியரை வரவழைத்து ஆசாவின் ஜாதகத்தைப் பார்க்கச் சொன்னாள். புருஷனை வசப்படுத்த ஏதாவது பீடா பரிஹாரம், சாந்தி முதலியவை செய்யவேண்டுமா வெனக் கேட்டாள். ஆசாவைக் கூப்பிட்டு அவரிடம் கையைக் காண்பிக்கச் சொன்னாள்.

ஆசாவை வெட்கமும் துக்கமும் வதைத்தன. இஷ்டமில்லாவிடினும் மாமியார் சொல்வதை மறுக்கத் தைரியமில்லை. மிகவும் வெட்கத்துடன் கையை ஜோசியரிடம் நீட்டினாள்.

அச்சமயம் யாரோ பக்கத்து அறையைத் திறந்து கொண்டு நுழையும் சப்தம் கேட்டது. ராஜலக்ஷ்மி, "யாரது?" என்று கேட்டாள். பதிலில்லை. மறுபடியும் உரத்துக் கத்தவே பதிலொன்றும் சொல்லாது மெள்ள மஹேந்திரன் உள்ளே வந்தான்.

அவன் முகத்தில் வெட்கம் குடிகொண்டிருந்ததைக் காண ஆசாவின் மனம் குன்றியது.

அவனுக்குத் தன்னுடைய தாயும் மனைவியுமாகச் சேர்ந்து தன்னை வசியப்படுத்தவேண்டிக் குறிபார்ப்பது, ஜோசியம் கேட்பது இவை யெல்லாம் மிகவும் அநாகரிக மாகவும் வெட்கக்கேடாகவும் தோன்றின. அவனால் அங்கு நிற்கவும் பொறுக்கவில்லை. "நான் மாடிக்குப் போகிறேன்" என்று சொல்லிச் சென்றுவிட்டான்.

ஆசாவைத் தேடி அவளுடன் தனியாய்ப் பேசத்தான் அவன் மாடிக்குப் போகிறான் என ராஜலக்ஷ்மி நினைத்துச் சமையலறைக்குச் சென்ற ஆசாவைக் கூப்பிட்டு, "மாடிக் குச் சீக்கிரம் போ. மஹேந்திரனுக்கு ஏதோ வேண்டும் போல் இருக்கிறது" என்றாள்.

சங்கோசம் மேலிட மார்பு படபடக்க, மஹேந்திரன் தான் தன்னை வரச்சொல்லி அனுப்பியிருக்க வேண்டுமென நினைத்து ஆசா மேலே சென்றாள். உள்ளே செல்லக் கால் எழவில்லை. மஹேந்திரன் என்ன செய்துகொண்டிருக்கிறா னென்று மெள்ள எட்டிப்பார்த்தாள். சாய்வு நாற்காலி யில் படுத்தவண்ணம் அவன் ஆழ்ந்த யோசனையில் இருந் தான்.

ஆசா இருட்டில் நின்று அவனையே கவனித்துக்கொண் டிருந்தாள். அவன் விநோதினியிடமிருந்துதான் வந்திருக் கிறான். அவன் சரீரத்தில் அவள் கரஸ்பர்சம், அவன் செவிகளில் அவள் குரலொலி, கண்களில் அவள் உருவம், உள்ளத்தில் அவளைப்பற்றிய எண்ணம் இவையே நிறைந்து காணப்படுவனபோல் அவளுக்குத் தோன்றியது. இப்படித் தன்னையே விநோதினிக்கு அர்ப்பணம் செய்துவிட்ட அவ னிடம் தான் எப்படிப் பக்தி செலுத்திப் பூஜிப்பது எனப் பெருமூச்சுவிட்டாள்.

சித்தியின் உபதேசம், புராணக் கதைகளில் போதிக்கப்படும் நீதி, சாஸ்திரம் இவற்றில் ஒன்றையும் அச்சமயம் அவள் மனம் ஏற்கவில்லை. தாம்பத்திய சுவர்க்கத்திலிருந்து பிரஷ்டம் செய்யப்பட்ட மஹேந்திரனைத் தனது மனக் கோயிலில் வைத்து வணங்குவது எப்படி? விநோதினியின் மஹேந்திரன் இன்று ஆசாவுக்குப் பரபுருஷனைப்போல் தோன்றினான். தனது இருதயத்திலிருந்து அவனை அறவே அகற்றுவதுதான் சரியென்று அவளுக்குத்தோன்றியது.

அவன் இருந்த அறையில் சுவரில் அவள் போட்டோ ஒன்று மாட்டப்பட்டிருந்தது. அவன் அதை உற்றுநோக்குவதைக் கவனித்தாள். உடனே ஓடிப்போய் அது அவன் கண்ணில் படாதவாறு எடுத்துத் தூர எறிந்து வந்துவிடலாமாவென்று நினைத்தாள் ஆசா. அவன் அதைப் பார்த்துக் கேலி செய்வதுபோல் இருந்தது.

அடுத்த நிமிஷம் அவனது பார்வை அங்கிருந்த சிறு மேஜை மீது சென்றது. தனது படிப்பை அபிவிருத்தி செய்துகொள்வதற்காக ஆசா ஒழிந்த நேரத்தில் மஹேந்திரனுக்குச் சிறிய சிறிய கதைகள், மாதப் பத்திரிகைகள் இவை படித்துக் காட்டிவந்தாள். அவற்றில் சில புத்தகங்களும் பத்திரிகைகளும் அம்மேஜையின்மீது வைக்கப்பட்டிருந்தன. ஏதோ யோசித்தவண்ணம் மஹேந்திரன் அதில் ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்துப் பக்கங்களைப் புரட்டினான். தனது அசங்கியமான கையெழுத்தை அவன் பார்ப்பானென்று நினைத்ததுமே அவளால் அங்கு நிற்கமுடியவில்லை. கீழே இறங்கி வந்துவிட்டாள்.

பிள்ளையும் நாட்டுப்பெண்ணும் பேசிக்கொண்டிருப்பதாக நினைத்து ராஜலக்ஷ்மி மஹேந்திரனைச் சாப்பாட்டிற்

குக் கூட அழையாது காத்திருந்தாள். ஆசா கீழேயிறங்கி வந்துவிட்டதைக் கண்டதும் அவனைப் போஜனமருந்தக் கூப்பிட்டாள். அவன் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது ஆசா மாடி அறையிலிருந்து தன் போட்டோவை யும் புத்தகங்களையும் அப்புறப்படுத்தி விட்டாள்.

மஹேந்திரன் சாப்பிட்டுக் கைகழுவி மேலே போனு னோ இல்லையோ, இங்கு ராஜலக்ஷ்மி மறுபடியும் ஆசாவை அவனுடன் கூடப் போயிருந்து பேசுமாறு வற்புறுத்த ஆரம்பித்துவிட்டாள். "அவன் அந்த மாயாவினியிட மிருந்து விடுபெற்றுச் சற்றுநேரம் வீட்டிற்கு வந்திருந்தா லுங்கூட நீ முகங் கொடுத்துப் பேசாவிடில் அவன் மறுபடி அவளிடமே போய்விடுவதில் ஆச்சரியமென்ன இருக்கி றது? புருஷன் கெட்டவழியிற் சென்றாலும் தனது சாமர்த் தியம், புத்தி சாதுரியம் இவற்றால் அவனை நன்மார்க்கத்திற் குக் கொண்டுவரவேண்டியது ஸ்திரீயின் கடமையன்றோ?" என்றெல்லாம் ராஜலக்ஷ்மி அவளுக்கு உபதேசித்தாள்.

ஆசாவினால் அவள் சொல்வதை மறுத்துக் கூறவும் முடியவில்லை. அபராதம் செய்தவள்போல் தலை குனிந்து நேரே தன் கணவனின் அறைக்குள் சென்றாள்.

சஞ்சல சித்தமுடைய மஹேந்திரனின் மனம் அச் சமயம் விநோதினிக்குப் பிரதிகூலமாயிருந்தது. 'விநோ தினி என்னை ஒரு பொருளாகவே மதியாது அடிமைபோ லன்றோ நடத்துகிறாள்? நான் மனந்திரும்பி முன்போல் ஆசாவின்பேரில் அன்புடன் எனது கடமையைச் செலுத்து வேனாகில் இன்று விநோதினியின் கதி என்னவாகும்? அவ ளிடம் நான் அடைந்த அவமானத்திற்குப் பிரதியாகச் சிறிது அன்பாவது பெற்றேனா? அதுவுமில்லை! இனி விநோதினிக்குப் புத்தி புகட்டும்படியாக ஆசாவையே நான்

நேசிப்பேன்' எனக் கூறிக்கொண்டான். அதேசமயந்தான் ஆசாவும் அங்கு வந்தாள்.

அவளுடன் என்ன பேசுவது, எப்படி ஆரம்பிப்பது என்பதே மஹேந்திரனுக்குப் பெரிய பிரச்னையாகிவிட்டது. மிகச் சிரமப்பட்டு முகத்தில் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு கடைசியில், "என்னைப் போலவே படிப்பில் நீயும் முனைந்திருக்கிறாய்போல் இருக்கிறது? இப்பொழுது நான் இங்கே உன் புஸ்தகங்களைப் பார்த்தேன். அதற்குள் அவை எங்கே போயின?" என்று கேட்டான்.

ஆசாவுக்கு இக்கேள்வி வேடிக்கையாகத் தோன்றவில்லை. தனக்குக் கல்வியறிவு இல்லையென்பதும் அதைத் தான் அடைய விரும்புவது பரிஹாசத்திற்கு இடமென்பதும் அவளுடைய அபிப்பிராயம். அப்படியிருக்கச் சில தினங்களாகப் பேசாமலிருந்த மஹேந்திரன் தன்னை முதன் முதல் இப்படிக் கேட்பது தனது கல்வியின்மையைச் சுட்டிக் காண்பித்து ஏளனம் செய்வதுபோல் அவளுக்குத் தோன்றியது. அவள் பதிலே சொல்லவில்லை.

தான் இப்படிக் கேட்டது உசிதமல்லவென்று மஹேந்திரனுக்கும் பிறகு தோன்றியது. ஆனால் வேறு என்ன தான் பேசுவதெனவும் தெரியாது திகைத்தான். முன் போல் மனம்விட்டுப் பேசவோ அவனால் முடியவில்லை. நாடக பாத்திரங்கள் அரங்கத்தில் ஏறி நடிக்குமுன் ஒத்திகை நடத்திப் பார்த்துக்கொள்வதுபோல் அவன் மனத்திலும் தான் பேசவேண்டியதைப்பற்றி ஒத்திகை நடந்தது. இவ்விதம் யோசனை செய்துகொண்டிருக்கையில், மிகவும் மெதுவான சப்தம் ஒன்று கேட்கவே திரும்பிப்பார்த்தான். ஆசா அறையைவிட்டுச் சென்றுவிட்டதைக் கண்டான்.

# நாற்பத்திரண்டாம் அத்தியாயம்

மறுதினம் மஹேந்திரன், "அம்மா, எனக்கு நிம்மதியாய்ப் படிப்பதற்கு ஒரு தனியறை வேண்டும். பெரியம்மா இருந்த அறையை எனக்குக் கொடுத்துவிடு" என்றான்.

'பிள்ளை வீட்டிலேயே இருக்கத் தீர்மானித்துவிட்டான். தம்பதிகள் மனஸ்தாபம் நீங்கி அன்னியோன்னியம் கொண்டு விட்டனர்போல் இருக்கிறது. என் மருமகள் தங்கமான பெண்ணல்லவா? அவள் லக்ஷ்மியின் அவதாரமன்றோ! அவளை விட்டுப் போக யாருக்குத்தான் மனம் வரும்!' என்றெல்லாம் நினைத்து ராஜலக்ஷ்மி பூரித்தாள். உடனே ஆசாவைக் கூப்பிட்டு உத்தரவிட்டாள். வெகு நாட்களாகப் பூட்டப்பட்டிருந்த அன்னபூரணியின் அறை திறக்கப்பட்டது. பெருக்குவதும் கழுவுவதும் மேஜை நாற்காலிகள் கொண்டுவந்து போடுவதுமாய் மாமியும் மருமகளுமாய்ச் சேர்ந்து பெரிய அரசனுக்கு வரவேற்பளிக்க ஏற்பாடு செய்வதுபோல் செய்தனர். மஹேந்திரன் இவை யொன்றையும் கவனிக்கவில்லை. புத்தகங்களுடன் தனது புது அறையில் பிரவேசித்து ஒரு நிமிஷமும் வீணாக்காது படிப்பில் மும்முரமாய் ஈடுபட்டிருப்பது போல் இருந்தான். சாயங்காலமாயிற்று. வழக்கம்போல் மாடியறையில் படுக்கப்போகிறானா அல்லது கீழேயே தூங்கப்போகிறானாவென்று ராஜலக்ஷ்மிக்கு விசாரம். தானே அன்று ஆசாவுக்குத் தலைவாரிச் சிங்காரித்தாள். "படுக்

கையை எங்கே போடுவதென்று மஹேந்திரனைப் போய்க் கேட்டு வா" எனத் தூண்டினாள். ஆசாவிற்கு என்ன சொல்வதெனத் தெரியவில்லை. அப்படியே பூமி இரண்டாகப் பிளந்து தன்னை விழுங்காதாவென்று ஏங்கிப் பரிதவித்தாள். குனிந்த தலை நிமிரவில்லை.

ராஜலக்ஷ்மி கோபிக்கலானாள். வேறு விதியின்றி மெள்ள மஹேந்திரன் படிக்கும் அறைக் கதவுவரை சென்றாள். அதற்கு மேல் அவளால் செல்ல முடியவில்லை. அங்கேயே நின்றுவிட்டாள். தூரத்திலேயே நின்று பார்த்துக்கொண்டிருந்த ராஜலக்ஷ்மி உள்ளேபோகுமாறு சைகை செய்தாள். விசையினால் தள்ளப்படும் பதுமைபோல் ஆசா உள்ளே நுழைந்தாள். காலடிச் சத்தம்கேட்டும் மஹேந்திரன் அவள் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை; கையிலிருக்கும் புத்தகத்தைப் பார்த்துக்கொண்டே, "இரவு வெகு நேரம் வரை படிக்கவேண்டும். பிறகு விடியற்காலையிலும் படிக்கவேண்டும். ஆகையால் இங்கேயே படுத்துக்கொள்ளப்போகிறேன்" என்றான்.

வெட்கக் கேடு! மாடி அறையில் தான் படுக்க வேண்டுமென்று ஆசா என்ன வேண்டிக்கொள்ளவா வந்தாள்?

ஆசா வெளியில் வந்ததுமே ராஜலக்ஷ்மி பரபரப்புடன், " என்ன சொன்னான் மஹேந்திரன்? " என்றாள்.

ஆசா மிகவும் தீனக்குரலில், "கீழேயே படுத்துக்கொள்கிறாராம்" என்றாள். இதைச் சொல்லிவிட்டு ஆசா அவமானம் பொறுக்காது தன் படுக்கையில் போய் விழுந்து மனமுடைந்து அழுதாள். தனக்கு இனி ஒரு க்ஷணமும் சுகம் கிடையாதாவென்று நினைத்துத் தரையில் விழுந்து புழுப்போல் துடித்தாள்.

நடுநிசியில் யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டு ஆசா எழுந்து கதவைத் திறந்தாள். படியேறி வந்ததால் மூச்சுத் திணற ராஜலக்ஷ்மி பேசமுடியாமல் ஆசாவின் அருகில் வந்து உட்கார்ந்தாள். சிறிது நேரம் சமாளித்துக் கொண்டபிறகு மெள்ள, "ஆசா, என்ன இப்படிச் செய்கிருய்? இங்கே வந்து கதவையும் தாழிட்டுக்கொண்டு படுத்திருக்கிருயே? கோபத்தைக் காட்டவும் சண்டை போடவும் இதுதானு சமயம்? இவ்வளவு பட்டுங்கூட உனக்கு இன்னும் புத்திவரவில்லை! போ, கீழே அவன் இருக்குமிடத்திற்குப் போ!" என்ருள்.

"தனியாயிருக்க வேண்டுமென்று அவர் சொன்ஞர்" என்ருள் ஆசா.

ராஜலக்ஷ்மி: அவன் சொல்வதும் நீ கேட்பதும் நன்ருயிருக்கின்றன! கோபத்தில் அவன்தான் ஏதோ இரண்டு வார்த்தை சொல்லிவிட்டால் நீயும் இப்படி வந்து விடுவதாக்கும்! இச்சமயம் இவ்வளவு மானம் மரியாதை பார்த்தால் முடியுமா? போ, சீக்கிரம் போ!

துக்க காலத்தில் மாமியார் மருமகள் என்ற பேதமெல்லாம் பறந்துவிட்டது. தன்ஞல் முடிந்தவரை பாடுபட்டுப் பிள்ளைக்கும் மருமகளுக்கும் ஒற்றுமையுண்டாக்கிப் பிள்ளையை வீட்டில் நிலைக்கச் செய்ய வேண்டுமென்று ராஜலக்ஷ்மி நிச்சயித்தாள். அவளால் அதிகம் பேசமுடியவில்லை. மூச்சு வாங்கியது. ஆசா அவள் கையைப் பிடித்து மெதுவாய்க் கீழே அழைத்து வந்தாள். அவள் படுக்கையில் தலையணைகளையெல்லாம் ஒழுங்காகத் தட்டி எடுத்து வைத்தாள்.

ராஜலக்ஷ்மி, "அதெல்லாம் அப்படியே இருக்கட்டும்; ஆசா, வேலைக்காரியை என்னிடம் அனுப்பிவிட்டு நீ அவனிடம் செல்; சீக்கிரம் போ; தாமதியாதே" என்ருள்.

ஆசா சற்றும் அதைரியமடையவில்லை. நேரே மஹேந்திரன் இருக்கும் அறையினுள் பிரவேசித்தாள். இரவு நெடுநேரமாகியும் இன்னும் அவன் தூங்கவில்லை. புத்தகம் விரித்தபடியே மேஜை மீது கிடந்தது. இரண்டு கால்களையும் மேஜைமீது நீட்டியவாறு யோசித்தபடி நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். காலடிச் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினான். தன் மனத்தில் தியானிக்கும் தேவதைதான் கருணைகொண்டு தன்னெதிரில் பிரத்யக்ஷமாகிவிட்டதுபோல் ஒரு பிரமை ஏற்பட்டது. ஆனால் அப்பிரமை ஒரு நொடியில் அகன்றது. வந்தது ஆசாவென அறிந்தான். மேஜைமீதிருந்து கால்களை இழுத்துக்கொண்டு மறுபடி புத்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டான்.

இப்படிச் சங்கோசமின்றி ஆசா என்றும் அவனிடம் வந்ததில்லை. அவனுக்கு இது ஆச்சரியத்தை அளித்தது. இரவு அந்நேரத்தில் அவள் அங்கு வந்து சிறிதும் தயக்கமின்றி நிற்பதையும், ஏதோ பேசவே அவள் அங்கு நிற்கிறாளென்பதையும் அவன் அறிந்துகொண்டு அவள் முகத்தை நோக்கினான்.

ஆசா, “அம்மா மூச்சு விடமுடியாது திணறுகிறார். சற்று வந்து பார்த்தால் நல்லது” என்று குரலில் சிறிதும் சலனமின்றி உரைத்தாள்.

மஹேந்: அம்மா எங்கே இருக்கிறாள்?

ஆசா: படுக்கையறையில். அவரால் தூங்கமுடியவில்லை.

மஹேந்: வா, போகலாம்.

வெகு நாட்களுக்குப் பிறகு ஆசாவுடன் இவ்வளவு பேசியதும் மனத்திலிருந்த பெரிய பாரம் குறைந்தது

போன்று இருந்தது அவனுக்கு. தனக்கும் அவளுக்கும் இடையில் எழுப்பப்பட்டிருக்கும் சுவரை உடைத் தெறியக் கூடிய ஆயுதம் அவனிடம் இல்லை. அவ்வாயு தத்தை இன்று ஆசாவே தன் கையில் அளித்தது போன்று இருந்தது அவனுக்கு.

ஆசா தான் வெளியிலேயே நின்றுகொண்டு மஹேந் திரனை மாத்திரம் உள்ளே போகச் சொன்னாள். இவ்வேளை யில் அவன் தன்னிடம் வருவதன் காரணம் என்னவோ வென ராஜலக்ஷ்மி பயந்தாள். ஒருகால் ஆசாவுடன் ஏதா வது சண்டையிட்டுக் கொண்டு வந்திருப்பானோவெனச் சந்தேகித்தாள்.

மஹேந்திரன் அவள் அருகில் வந்து, "அம்மா, மூச்சு விடக் கஷ்டமாயிருக்கிறதா?" என்றான்.

இவ்வளவு நாட்களுக்குப் பிறகு அவனிடமிருந்து இப்படி ஓர் அன்பான சொல்லைக் கேட்டுத் தாயின் மனம் புத்திர வாஞ்சையால் புளகித்தது. மிக்க பிரயாசையுடன் சமாளித்துக் கொண்டு, "அப்பா, நீ போய்ப் படுத்துத் தூங்கு. எனக்கு இது நித்திய ரோகந்தானே? புதிதா என்ன?" என்றாள்.

மஹேந்: இல்லையம்மா; இது சாதாரண வியாதி யல்ல. நன்றாய்ச் சிகித்சை செய்துகொள்ள வேண்டும்.

தாயின் முகக்குறி வியாதி அதிகரித்து வருவதைத் தெளிவாய்த் தெரிவித்தது. அதைக் காணவே மஹேந்திர சற்றுக் கவலை கொண்டான்.

ராஜலக்ஷ்மி: கவனிப்பதற்கு என்ன இருக்கிறது? இது குணமடையும் நோயாயிருந்தாலன்றோ அக்கவலை?

மஹேந்: எதற்கும் இப்பொழுது தூக்கம் வரு வதற்கு ஒரு மருந்து கொடுக்கிறேன். அதைச் சாப்பிடு. நாளைக்குத் தேகநிலையைப் பரீட்சித்துப் பார்க்கலாம்.

ராஜலக்ஷ்மி: எவ்வளவோ மருந்து குடித்தாய் விட் டது. அதனால் என்ன குணங்கண்டது? நீ போய்ப் படுத்துக் கொள், அப்பா. நேரமாகிவிட்டது.

மஹேந்: உனக்கு மூச்சுத் திணறுவது சற்று நிற் கட்டும். பிறகு நான் போகிறேன்.

ராஜலக்ஷ்மி வாயிற்படியண்டை நின்றிருக்கும் ஆசா வைப் பார்த்துக் கோபிப்பதுபோல், "ஆசா, இந் நடுநிசியில் அவனை ஏன் எழுப்பி இங்கே கூட்டி வந்தாய்?" என்றாள்.

அவ்வளவு பேசியதே ராஜலக்ஷ்மிக்குக் கஷ்டமாகி விட்டது. மேல் மூச்சு வாங்க ஆரம்பித்தது. ஆசா அவன் பக்கத்தில் வந்து நின்றுகொண்டு, "நீங்கள் போங் கள்; நான் அம்மாவினருகில் இருந்து கவனித்துக் கொள்ளு கிறேன்" என்று மஹேந்திரனிடம் கூறினாள்.

மஹேந்திரன் ஆசாவைச் சற்று அப்பால் அழைத்து, "நான் இரண்டு அவுன்ஸ் மருந்து கொடுக்கிறேன். அம் மாவுக்கு ஓர் அவுன்ஸ் அதில் இப்பொழுதே கொடு. தூங்காவிட்டால் சற்று நேரம் கழித்து இன்னோர் அவுன் ஸையும் கொடுத்து விடு. அப்படியும் அவள் இரவு மிக வும் கஷ்டப்பட்டால் என்னிடம் வந்து தெரிவி" எனச் சொல்லிப் போனான்.

ஆசாவின் அன்றைய நடத்தை மஹேந்திரனுக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. அவளிடம் சங்கோசமில்லை; தீனக்குரலுடன் அவனிடம் அவள் எதையும் யாசிக்க வில்லை. தன் அதிகாரத்தையும் பொறுப்பையும் உணர்ந்த

வள்போல் அவள் நடந்து கொண்டதைக் காண மஹேந்திரன் அவளிடம் என்றுமில்லாத மதிப்புக் கொண்டான்.

தன் நாட்டுப்பெண்ணிற்குத் தன்னிடம் இவ்வளவு அன்பும் ஆதரவும் இருப்பதைக் காண ராஜலக்ஷ்மிக்கு உள்ளூறப் பெருமையும் சந்தோஷமும் உண்டாயின. அவள், "உன்னைத் தூங்கப் போகச்சொன்னால் நீயும் தூங்காது அவனையும் எழுப்பிக் கூட்டி வந்து விட்டாயே? வெகு நேரமாகிவிட்டது. நீ போய்ச் சற்றுத் தூங்கு" என்று ஆசாவைப் பார்த்துச் சொன்னாள்.

ஆசா, ராஜலக்ஷ்மிக்கு விசிறிக்கொண்டே, "என்னை இங்கேயேதான் இருக்கச் சொல்லியிருக்கிறார்" என்று மெதுவாகக் கூறினாள். தாயின் சுசுருஷைக்காக மஹேந்திரன் அங்கு இருக்கச் சொன்னதாகச் சொன்னால் ராஜலக்ஷ்மிக்குச் சந்தோஷமாயிருக்குமென்பது அவளுக்குத் தெரியும்.

---

## நாற்பத்துமூன்றாம் அத்தியாயம்

தம்பதிகளுக்குள் ஒற்றுமையில்லையென்பது ராஜலக்ஷ்மிக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. கடைசியில் தான் நோயுற்றிருப்பதை உத்தேசித்தாவது மஹேந்திரன் வீட்டைவிட்டுச் செல்லாதிருக்கட்டுமென்று யோசித்தாள். இதற்காக நோய் குணமடையாதிருக்க வேண்டி, கொடுக்கும் மருந்தையெல்லாம் ஆசாவுக்குத் தெரியாமல் தூரக் கொட்டிவிடுவாள்.

மஹேந்திரனோ தாயைக் கவனிப்பதாகக் காணோம். நோய் முற்றிவருவதைக் காணும்போது ஆசா கவலை

கொண்டாள். மஹேந்திரன் தன் தாயின் விஷயத்திலும் இப்படி உதாசீனமா யிருப்பது அவள் மனத்தை மேலும் வருத்தியது. 'அவர் மனம் இப்படியா மாறிக் கெடவேண்டும்?' என்று நொந்தாள்.

வியாதியின் உபத்திரவம் அதிகரித்தது. ராஜலக்ஷ்மிக்கு அச்சமயம் விஹாரியின் நினைவு வந்தது. சதா இக் குடும்பத்தின் நன்மையைக் கோரி உதவும் விஹாரி இச்சமயம் தன்னருகில் இல்லையே யென்று வருந்தினாள். அவன் மஹேந்திரனைப்போல் கடின நெஞ்சுடையவனல்ல என்பதை அறிவாள். ஆசாவிடம், "விஹாரி எங்கே இருக்கிறானென்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டாள். உடனே, "ஒருவேளை மஹேந்திரன் அவன் கூடவும் சண்டையிட்டிருப்பான். அதனால்தான் அவன் இப்பொழுதெல்லாம் இங்கு வருவதில்லைபோலும்! மஹேந்திரனின் நடத்தை ஒன்றும் நன்றாயில்லை. விஹாரியைப் போன்ற நல்ல நண்பன் கிடைப்பது துர்லபம்" என்று சொல்லி ராஜலக்ஷ்மி கண்ணீருகுத்தாள்.

ஆசாவுக்கு அப்பொழுது விஹாரியைப் பற்றிய அநேக விஷயங்கள் ஞாபகத்திற்கு வந்தன. எவ்வளவோ முறை விஹாரி ஆசாவின் அறியாமையை எடுத்துக் காட்டி உண்மையை விளக்க முயன்றும் அவள் அதை அறிந்து கொள்ளும் சக்தியற்ற பேதையாயிருந்ததன்றி அவன்மேல் கோபங்கொண்டதும் நினைவிற்கு வரவே, அவள் தன்னையே நொந்துகொண்டாள். நிரபராதியான விஹாரியின் மனத்தை வருந்தச் செய்ததற்காகவே கடவுள் தனக்குத் தகுந்த தண்டனை விதித்ததாக எண்ணினாள்.

இடையில் ராஜலக்ஷ்மி மறுபடியும், "ஆசா, விஹாரி மாத்திரம் இருந்திருந்தால் வீட்டில் இந்த நிகழ்ச்சிகள்

நடக்கும்படி விடமாட்டான். அவன் இதைத் தடுத்துக் கட்டாயம் நம்மைப் பாதுகாத்திருப்பான்" என்றாள்.

ராஜலக்ஷ்மிக்குச் சுவாசிப்பது கஷ்டமாய் விடவே சற்று நிதானித்துச் சமாளித்துக்கொண்டு, "நான் இவ்வளவு நோயுற்றுப் படுத்திருக்கும் செய்தி அவனுக்குத் தெரிந்தால் அவன் வராமல் இருக்கவே மாட்டான்" என்றாள்.

விஹாரியைக் காண்பதற்கு ராஜலக்ஷ்மி மிகவும் ஆவலாயிருப்பதும், அவனின்றி அவள் உடம்பு குணமடையாதென்பதும் ஆசாவுக்கு நன்றாகத் தெரிந்தன.

விளக்கை அணைத்துவிட்டு நிலவொளியில் வெளியே வந்து உட்கார்ந்து மஹேந்திரன் யோசித்துக் கொண்டிருந்தான். வீட்டிலோ சுகமில்லை; நிம்மதியில்லை. மனம் வேறுபடும்போது பரம மித்திரர்களும் பரம சத்துருக்களாகவே தோன்றுவது சகஜம். தாயிடம் நெருங்கவே அவனுக்கு மனமில்லை. ஆசாவைச் சந்தித்தாலோ என்ன பேசுவதெனத் தெரியவில்லை. பேசாதிருக்கவும் மனச்சாட்சி இடமளிப்பதில்லை. இச்சங்கட நிலையில் வீட்டில் ஒரு நிமிஷம் கழிவது ஒரு யுகம்போலத் தோன்றியது. ஒரு வாரம் பொறுப்பதாக விநோதினிக்கு வாக்களித்திருந்தான். இன்னும் இரண்டே தினங்கள் பாக்கி இருந்தன.

ஆசா அங்கு வந்து நின்றதை அவன் பார்த்தும் பாராதவன் போல் திரும்பிக்கொண்டிருந்தான். அவளும் அவன் மனோபாவத்தை அறியாமலில்லை. அவள் திரும்பிப் போகவும் இல்லை. உறுதியான குரலில், "ஒரு சங்கதி தெரிவிக்கவே வந்தேன். அதைச் சொல்லிவிட்டு நான் போய்விடுகிறேன்" என்றாள்.

மஹேந்: போவானேன்? உட்கார்ந்து சொல்லக் கூடாதா என்ன?

இந்த மரியாதைச் சொல்லை அவள் கவனிக்காமல் நின்று கொண்டே, "அம்மாவின் நோயைப் பற்றிய சங் கதியை விஹாரி பாபுவுக்குத் தெரிவிப்பது உசிதம்" என் ருள்.

அவன் பெயரைக் கேட்டதுமே மஹேந்திரனுக்கு மனத்தில் சுருக்கெனத் தைத்தது. அவன், "ஏன்? எதற் காக? நான் செய்யும் வைத்தியத்தில் உனக்கு நம்பிக்கை யில்லையா?" என்று கேட்டான்.

அவன் கவனித்து வைத்தியம் செய்யவில்லையென்பது தான் ஆசாவின் எண்ணமும். "ஆமாம், வியாதிதான் முற்றி வருகிறதே?" என்ருள். ஆசா இம்மாதிரி அவனை இது வரையில் தாக்கிப் பேசியதே கிடையாது. கோபம் பொங்கி யெழ அவன், "உன்னிடமிருந்துதான் நான் இனி வைத் தியம் கற்றுக்கொள்ளவேண்டும் போல் இருக்கிறது!" என்ருன்.

இக்கேள்வி ஆசாவுக்குப் புண்ணில் கோலிடுவது போன்று இருந்தது. அவள் உடனே, "வைத்தியம் மாத் திரமல்ல; தாய்க்கு எவ்விதம் பணிவிடை செய்ய வேண்டு மென்பதையும் நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டும்" என்று என்றுமில்லாத துடுக்குடன் மொழிந்தாள்.

மஹேந்திரனுக்கு அவளுடைய வார்த்தை ஒவ் வொன்றும் ஆச்சரியத்தை விளைவித்தது. ஒன்றுமேயறி யாத, வெளுத்ததெல்லாம் பாலென நம்பும் பேதையான ஆசா, சிறிதும் பயமின்றித் தன் முன் இப்படிப் பேசுவா ளென அவன் கனவிலும் நினைக்கவில்லை! அவளை மட்டந்

தட்ட வேண்டுமென நினைத்து, "உன் விஹாரியை இங்கே வரவிடாமல் தடுத்தது எதற்காகவென்று உனக்குத் தெரியாதோ? அப்படியும் அவனை நீ இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறாய்போல் இருக்கிறது!" என்றான்.

ஆசா சரேலென்று அவ்விடத்தை விட்டுப் போய் விட்டாள். வெட்கத்தால் அவள் தேகம் குன்றியது. தன் செயலுக்காக வெட்கமில்லை; செய்யத் தகாத செய்கையையும் செய்துவிட்டுத் தன்னையும் தூஷிக்க வாய் வேறா என்பதை நினைக்கவே அவள் வெட்கினாள்.

அவள் போய் விட்டதுமே மஹேந்திரனும் தனது தவற்றை உணர்ந்தான். தோல்வியும் அவமானமும் அடைந்தவன் போல் அவன் மனம் சிறுத்தது. எந்த இருதய சிம்மாசனத்தில் தான் இதுவரை வீற்றிருந்தானோ அது இன்று மண்ணோடு மண்ணாய் மடிந்தது போல் அவனுக்குத் தோன்றித் திடுக்கிடச் செய்தது. அதற்குப் பதில் அவ்வுள்ளத்தில் எங்கே துவேஷம் குடிகொண்டு விடுமோவென்று அஞ்சினான்.

விஹாரியின் நினைவு வேறு அவனை வதைத்தது. 'நான் இங்கிருக்கும்போது ஒரு வேளை விஹாரி ஊருக்குத் திரும்பி வந்திருந்தால் கட்டாயம் விநோதினி அவனைக் கண்டு பேசியிருப்பாள்' என்று நினைக்கவே அவன் மனம் பதறியது. வாக்குறுதியைக் காப்பாற்றுவது அவனுக்குக் கடினமாகிவிட்டது.

ராஜலக்ஷ்மிக்கு இரவு மூச்சுத் திணறல் அதிகமாகி விட்டது. அவள் மஹேந்திரனைக் கூப்பிட்டனுப்பினாள். வந்ததும் அவனிடம், "மஹேன், எனக்கு விஹாரியைக் காண வெகு ஆவலாயிருக்கிறது. அவன் வீட்டிற்கு வந்து வெகு நாட்களாயின" என்றாள்.

ஆசா தலையைக் குனிந்துகொண்டு ராஜலக்ஷ்மிக்கு விசிறிக் கொண்டிருந்தாள். "அவன் ஊரில் இல்லை. எங்கோ வெளியூருக்குச் சென்றிருக்கிறானாம்" என்றான் மஹேந்திரன்.

ராஜலக்ஷ்மி: அவன் ஊரிலேயேதான் இருக்கிறான். ஏதோ உன் மீதுள்ள மனத்தாங்கலால் அவன் இங்கே வருவதில்லை. எனதாணை: நீ அவனை நாளைக்குச் சென்று காணவேண்டும்.

மஹேந்: ஆகட்டும், போகிறேன்.

'ஒவ்வொருவரும் விஹாரியையே வேண்டுகின்றனர், அழைக்கின்றனர். இவ்வுலகில் என்னை விரும்புவார் யாரும் இல்லையா?' என மஹேந்திரன் பரிதவித்தான்.

---

## நாற்பத்துநான்காம் அத்தியாயம்

மறுதினம் அதிகாலையிலேயே மஹேந்திரன் வண்டியிலேறி விஹாரியின் வீட்டை அடைந்தான். அவன் வீட்டு வாசலில் வரிசையாய் மாட்டுவண்டிகள் நின்றன. ஆட்கள் வீட்டுச் சாமானையெல்லாம் அதில் ஏற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு மஹேந்திரன் வியப்புற்று, "ச மான்களெல்லாம் எங்கே போகின்றன?" என்று வேலைக்காரனைக் கேட்டான்.

"எஜமான் கங்கைக்கரையில் பாலி என்ற இடத்தில் பெரிய தோட்டமும் வீடும் வாங்கியிருக்கிறார். சாமான்களெல்லாம் அங்கே போகின்றன" என்றான் வேலையாள்.

"எஜமான் இப்பொழுது வந்திருக்கிறாரா?" என்று கேட்டான் மஹேந்திரன். "வந்து இரண்டு தினங்கள்

இருந்துவிட்டு நேற்றுத்தான் திரும்பிச் சென்றார்" என்று பதிலளித்தான் வேலையாள்.

'சரிதான்! அப்படியானால் நிச்சயம் விநோதினியைப் பார்த்திருக்கக்கூடும். ஒரு வேளை அவளும் அவனுடன் புறப்பட்டு விட்டாளோ?' என்ற சங்கை யெழவே தலை தெறிக்க வண்டியில் ஏறி விநோதினி இருந்த வீட்டுப் பக்கம் வண்டியை விடச்சொன்னான். வழியில் வண்டியை வேகமாய் விடவில்லையெனக் கோபித்து வைதான். வண்டி அவ்வீட்டு வாசலில் போய் நின்றதோ இல்லையோ, இறங்கிக் குதித்து ஓடிப்போய் வேலைக்காரனிடம், விநோதினி வீட்டில் இருக்கிறாளாவென விசாரித்தான். அவன் ஆமாம் என்று சொன்ன பிறகுதான் மஹேந்திரன் மூச்சு விட்டான்.

விநோதினி குளிக்கப் போயிருந்தாள். படுக்கை விரித்தபடியே இருந்தது. மஹேந்திரன் களைப்புத் தீர அதில் போய்ப் படுத்தான். அது விநோதினி படுத்திருந்த படுக்கை யென்பதே மஹேந்திரனுக்குச் சுகமய உணர்ச்சியை ஊட்டக் கூடியதாயிருந்தது. அவள் வருவதற்கு முன்னதாகவே எழுந்து அவளை எதிர்பார்த்து உலாவிக்கொண்டிருந்தான். சட்டெனப் படுக்கைக்கருகில் கிடந்த ஒரு சமாசாரப் பத்திரிகையின் மீது அவன் கவனம் சென்றது. அதைக் கையில் எடுத்துப் பார்த்தான். அதில் ஒரு மூலையில் இருந்த விஹாரியின் பெயர் அவனது கவனத்தைக் கவர்ந்தது. "ஏழைகளுக்கு இலவச வைத்தியம் செய்வதற்காகக் கங்கைக் கரையில் ஓர் இலவச வைத்திய சாலை விஹாரி பாபுவினால் திறக்கப்பட்டிருக்கிறது. ஒரே சமயத்தில் பத்துப்பேர் தங்குவதற்கேற்றபடி படுக்கை சாப்பாடு முதலிய வசதிகள் அளிக்கப்படும்" என்று

வெளியாகியிருப்பதைப் பார்த்து மஹேந்திரன் மனம் பொருமினன். இதை விநோதினி படித்திருந்தால் அவன் பாலுள்ள சிரத்தையும் மதிப்பும் அவளுக்கு இன்னும் அதிகரித்திருக்குமென்பதே மஹேந்திரனின் மனத்தில் பொருமைத்தீயை எழுப்பப் போதுமானதா யிருந்தது.

'விஹாரி சிறு வயதிலிருந்தே பரோபகாரிபோல் நடித்து நல்ல பெயரெடுப்பதில் தேர்ந்தவன். அவன் கபட வேஷதாரி. நான் கபடமற்றவன்; ஏமாற்றிப் பிறரை வசீகரப்படுத்தும் குணம் என்னிடம் இல்லை. இப்பொழுதும் அவன் கீர்த்தி சம்பாதிக்கவே இப்படி உபாயம் செய்திருக்கிருன்' என்பது மஹேந்திரனின் எண்ணம்.

விநோதினியின் கண்ணில் படாதிருக்கவேண்டி மஹேந்திரன் பத்திரிகையை மறைத்துக்கொண்டான். அவள் வந்ததும் அவள் முகக்குறிப்பை அறியவேண்டி உற்று நோக்கினன். அவள் மெலிந்து காணப்பட்டபோதிலும் இதுவரையில்லாத ஓர் அற்புத தேஜஸ் அவள் முகத்தில் திகழ்வதைக் கண்டான்.

விஹாரியினிடமிருந்து பதில் கிடைக்குமென்ற நம்பிக்கை அவளுக்கு இப்பொழுது இல்லை. தன்னைக் காணு திருக்கவும், தன்னைப் புறக்கணிக்கவும் வேண்டியே அவன் ஊரைவிட்டுச் சென்று விட்டானென்பதை எண்ணவே அவள் உள்ளம் வெந்தழலி லிட்டதுபோல் உருகியது. இச் சிறு வீட்டில் வேலையின்றி, அன்பின்றி, சந்தோஷமின்றித் தனது ஆயுள் பூராவும் எங்கே கழிக்க நேரிடுமோவென அஞ்சிப் பதைத்தாள். தனக்குப் போக்கிடமின்றி இக் கதிக்கு ஆளாக்கிய மஹேந்திரனை அவள் முற்றிலும் வெறுத்தாள்.

'பிரதிதினமும் மஹேந்திரனைச் சந்திக்க வேண்டி யிருக்கும். என்னிடம் நெருங்க விடாது அவனைத் தடுப் பது அசாத்தியம். நானே அவன் மனத்தில் அணைக்க முடியாத காமத்தீயை மூட்டி விட்டாகிவிட்டது. அத் தீயிற்கு நானும் இரையாகாது தப்புவதெப்படி? இதற்கு முடிவெங்கே?' என்றெல்லாம் எண்ணி நரக வேதனையில் ஆழ்ந்தாள் விநோதினி.

இதற்கு மாறாக மஹேந்திரனுக்கோ விநோதினியைத் தன் வசப்படுத்திக் கொள்வது எப்படி, விஹாரியை அவள் மனத்திலிருந்து அகற்றுவது எவ்விதம் என்று தீராத யோசனையாயிருந்தது.

இப்படி இருவரும் தத்தம் யோசனையில் ஆழ்ந்து சிறிது நேரம்வரை பேசவேயில்லை. கடைசியில் விநோ தினி, "நீ காப்பி சாப்பிட்டாயிற்று?" என்றாள்.

மஹேந்: சாப்பிட்டாயிருந்தால்தான் என்ன? உனது கையால் இன்னொரு முறை கொடுக்கக் கூடாதா? கொண்டு வா என்........

விநோதினி அவனைக் கோபத்துடன் பார்த்தாள். இச் சமயம் அவனது உணர்ச்சியைப் புண்படுத்தவேண்டியே அவள், "விஹாரி பாபு எங்கிருக்கிறார்? அவரைப்பற்றி ஏதாவது சமாசாரம் தெரியுமா?" என்று கேட்டாள். மஹேந்திரன் முகம் சிறுத்தது. "அவன் கல்கத்தாவில் இல்லை" என்றான்.

விநோ: அது தெரியும். எங்கே சென்றாரென்பது தெரியுமா?

மஹேந்: அவற்றை அவன் ஒருவருக்கும் தெரிவிக்க வில்லை.

விநோ: விசாரித்துக் கண்டுபிடிக்க முடியாதா?

மஹேந்: அது அவசியமென்று எனக்குத் தோன்ற வில்லை.

விநோ: அவசியம் வேறு? சிறுவயதுத் தோழரல்லவா அவர்?

மஹேந்: எனக்கென்னவோ சிறு வயதிலிருந்தே நண்பன். ஆனாலும் என்னைக்காட்டிலும் இரண்டு நாள் நட்புக் கொண்ட உனக்கல்லவோ அவனைப்பற்றி அக்கரை அதிகமாயிருக்கிறது!

விநோ: அதைக் கண்டாவது நீ வெட்கங் கொள்ள வேண்டும். இவ்வளவு நல்ல நண்பர் கிடைத்தும் நட்புரிமையைப்பற்றி நீ அறிந்து கொள்ளவில்லையே!

மஹேந்: எனக்கு அதைப்பற்றி வருத்தமுமில்லை; வெட்கமுமில்லை. ஆனால் மாதரை வசீகரிக்கும் வித்தையை அவனிடத்திலிருந்து நான் கற்றுக்கொள்ளாமல் போனேனே என்றுதான் வருந்துகிறேன். அதைக் கற்றிருந்தால் இப்பொழுது எவ்வளவு பிரயோஜனமா யிருக்கும்?

விநோ: அவ்வித்தை கற்றுக்கொண்டால் வராது; தனக்கே யோக்கியதை இருக்கவேண்டும். அதிருக்கட்டும். அவர் இருக்குமிடத்தை விசாரித்து அறியும்வரை என்னெதிரில் உன் அன்புப் பேச்சுகளையெல்லாம் எடுக்காதே. நண்பனிடம் நீ நடந்து கொள்ளும் முறையைக் கண்ட யார் தாம் உன்னை நம்புவர்?

மஹேந்: உனக்கு என்மீது நம்பிக்கையில்லாமையால் தான் என்னை இவ்வளவு அவமானத்திற்கு உட்படுத்துகிறாய். இம்மாதிரி பந்தனத்தில் அகப்படாமல் இருக்கும்

வித்தை விஹாரிக்குத் தெரிந்திருக்க எனக்கு மாத்திரம் தெரியாது போயிற்றே!

"அவர் கண்ணிய புருஷர். அம்மாதிரியானவர்கள் எவ்விதப் பந்தனத்திலிருந்தும் விடுபட்டவர்கள்" என்று சொல்லி விநோதினி வேறு பக்கம் திரும்பிக்கொண்டாள்.

மஹேந்திரனால் பொறுக்க முடியாமற் போயிற்று. "நினைத்தபோதெல்லாம் என்னை இப்படியா அவமானப் படுத்தத் துணிந்தாய்? நான் பொறுத்துக்கொண்டு போவதால் உனக்குத் துணிச்சல் அதிகமாகிவிட்டது. நானென்ன, மனிதனல்ல மிருகமென்று நினைத்தாயோ? எப்பொழுதுமே எதிர்த்து நிற்காது உன் விரட்டலுக் கெல்லாம் உட்படுவேனென்று நினைத்துவிடாதே" என்று கர்ஜித்தான்.

கோபத்தினால் விநோதினியை அவன் வெறித்துப் பார்த்தான். அவள் பதிலே சொல்லவில்லை. சற்று நேரத் திற்குப் பிறகு அவன், "விநோதினி, புறப்படு. இந்த நிமிஷமே நாம் வேறெங்காவது சென்றுவிடலாம். இந்த இடத்தை விட்டுக் காடோ மலையோ எங்கே வேண்டுமானா லும் செல்வோம். என்னால் இனி இங்கே இருக்கமுடி யாது" என்றான்.

விநோ: இப்பொழுதே புறப்படு. வா, மேற்கே போக லாம்.

மஹேந்: மேற்கே எங்கே போவது?

விநோ: எங்குமில்லை. ஒரு குறிப்பிட்ட இடத்திலும் தங்காது சுற்றிக்கொண்டே இருக்கப் போகிறேன்.

மஹேந்: எப்படியானாலும் சரி. இன்று இரவே புறப்படுவோம்.

விநோதினியும் அதற்கு உடன்பட்டாள். அவள் உள்ளே சமையலைக் கவனிக்கச் சென்றாள்.

அவளுக்கு விஹாரியைப் பற்றிய செய்தி இன்னும் தெரியவில்லை என்பதை மஹேந்திரன் அறிந்துகொண்டான். ஆனால் தற்செயலாக எவ்விதமாவது தெரிந்து விடப்போகிறதே என்று பயந்தவனாய் அன்று முழுவதும் மிகவும் ஜாக்கிரதையாக இருந்து வந்தான்.

---

## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

விஹாரியை அழைத்துவரத்தான் மஹேந்திரன் போயிருக்கிறானென்று ராஜலக்ஷ்மி நினைத்து, விஹாரியின் வரவை எதிர்பார்த்து அவனுக்குப் பிடித்த சமையலை அன்று செய்யக் கட்டளை யிட்டாள். பகற்பொழுது கழிந்து இரவும் வந்துவிட்டது. அப்பொழுதும் மஹேந்திரன் வீட்டிற்கு வராததைக் கண்ட ராஜலக்ஷ்மி திகிலும் கவலையும் அடைந்தாள். விநோதினியின் வீட்டில் மஹேந்திரன் இறங்கிக்கொண்டு வண்டியை வீட்டிற்கு அனுப்பி விட்டதாக வண்டிக்காரன் தெரிவித்தான். தான் இவ்வளவு நோயுற்றுப் படுத்திருந்தும் மஹேந்திரன் தன்னைச் சற்றுக்கூடக் கவனியாமல் காமாந்தகனாய் விநோதினியைச் சுற்றியலைவது ராஜலக்ஷ்மியின் உள்ளத்தை வாள் கொண்டு அறுப்பது போன்று இருந்தது.

ஆசா தனது மனோவேதனையை வெளிக்குக் காட்டாது, "அம்மா, மருந்து கொடுக்கும் நேரமாகிவிட்டது. கொண்டு வரட்டுமா?" என்றாள். ராஜலக்ஷ்மி, "மருந்தும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம் எனக்கு" என்றாள். ஆசாவுக்குத் தான் படும் துன்பத்தைவிட வயதான

நோயுற்ற மாமியாரின் மனத்துயரத்தைக் காணச் சகிக்க முடியவில்லை. என்ன அடக்கியும் முடியாது அவள் ராஜ லக்ஷ்மியின் தலைமாட்டிலேயே நின்று விம்மி அழலானாள். அதைக் காண்கையில் ராஜலக்ஷ்மியின் மனம் உருகியது. மெள்ள ஆசாவின் கன்னங்களை வருடிக்கொண்டே, “அம்மா ஆசா, நீ இன்னும் சிறியவள். இப்பொழுது துன் பப்பட்டாலும், துன்பம் நீங்கிச் சுகமடையும் நாள் வரும். எனக்கோ வயதாகிவிட்டது. இனி நான் இருப்பதும் இறப்பதும் ஒன்றுதான். என்னைப்பற்றி நீ சிறிதும் கவலை கொள்ளாதே” என்று அன்பும் கருணையும் ததும்பக் கூறி ஞள். இதனால் ஆசாவின் அழுகை பின்னும் அதிகரித்தது.

மஹேந்திரனின் வீடு துக்கமே குடிகொண்டது போல் காணப்பட்டது. நோயுற்ற தாயும், மனமுடைந்த மனைவியும் இன்னமும் அவன் வரமாட்டானௌவென எதிர் பார்த்துக்கொண்டே இருந்தனர். ஏதாவது சிறு சப்தம் கேட்டாலும் அவன் வந்து விட்டானோவெனப் பார்ப்பர். பிறகு ஏமாற்றமடைவர். இருட்டி விட்டதேயென்று ஆசா விளக்கை ஏற்றினாள். “வேண்டாம், அணைத்துவிடு” என்று சொல்லிவிட்டாள் ராஜலக்ஷ்மி.

இருட்டில் மாமியாரருகில் உட்கார்ந்து ஆசா, “அம்மா, அவரைக் கூட்டிவர ஆளை அனுப்பட்டுமா?” என்று கேட்டாள். ராஜலக்ஷ்மி, “அவனுக்கு ஒன்றும் சொல்லியனுப்பக்கூடாது” என்று உறுதியுடன் மறுத் தாள்.

அச்சமயம், “எஜமான் கடிதம் கொடுத்தனுப்பி யிருக் கிறார்” என்று வேலைக்காரன் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தான்.

ராஜலக்ஷ்மி ஆவலுடன், "ஆசா, சீக்கிரம் படி. கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறனென்று சொல்" என்றாள்.

ஆசா கை நடுங்கக் கடிதத்தைப் பிரித்தாள்.

சில தினங்களாகத் தனக்கு அங்கு இருக்கவே பிடிக்காததால் இப்பொழுது மேற்குப் பிரதேசங்களில் சில காலம் சுற்றுப் பிரயாணம் செய்யப் போவதாகவும், அம்மாவின் தேக நிலையைப்பற்றிக் கவலை கொள்ளக் காரணமில்லை யென்றும், அவளை அடிக்கடி போய்ப் பார்த்து வேண்டிய மருந்து கொடுக்கும்படி தன் நண்பனை ஒரு புதிய டாக்டரிடம் சொல்லியிருப்பதாகவும், இரவில் அம்மாவுக்குத் தூக்கம் வராவிடில் தான் அக்கடிதத்தோடு அனுப்பியிருக்கும் மருந்துகளைக் கொடுக்குமாறும், அம்மாவின் தேக ஸ்திதியைப்பற்றி அடிக்கடி கிரிதி என்ற ஊருக்குத் தனக்குக் கடிதம் போடும்படியும் எழுதி விலாசத்தையும் தெரிவித்திருந்தான்.

அக்கடிதத்தைப் படித்ததும் ஆசா அப்படியே ஸ்தம்பித்துச் சிலைபோல் நின்றாள். கடிதத்தில் இருக்கும் இரக்கமற்ற நிஷ்டூரமான விஷயத்தை ராஜலக்ஷ்மிக்குத் தெரிவிக்கவும் கூசினாள்.

ராஜலக்ஷ்மியோ விஷயத்தை அறியத் துடித்தாள். மிகவும் கஷ்டத்துடன் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து, "என்ன எழுதியிருக்கிறான், மஹேந்திரன்? சீக்கிரம் படியேன்" என்றாள்.

ஆசா கடிதமுழுவதையும் படித்துக் காட்டினாள்.

ராஜலக்ஷ்மியின் உள்ளம் சிதைந்தது. அவள், "இங்கே இருக்க அவனுக்கு எப்படிப் பிடிக்கும்? நான் சாகவும் சாகாமல் வியாதியாய்ப் படுத்துச் சதா அவன் கண்ணில்

உறுத்திக் கொண்டிருந்தேனாகில் அவனுக்கு இங்கே இருக்க எப்படி மனம் வரும்? நான் பிறர் அறியாது ஒரு மூலையில் விழுந்து கிடந்து பிராணனை விட்டிருப்பேனே! நீ ஏன் போய் அவனிடம் எனக்கு நோய் அதிகரித்ததைச் சொல்லி என் முன் இழுத்து வந்தாய்? இவ்வளவு கஷ்டப் பட்டும் உனக்குச் சிறிதும் புத்தியில்லை" என்று துக்கம் பொறுக்காமல் ஆசாவிடம் கூறிப் படுக்கையில் தடாலென விழுந்தாள்.

அச்சமயம் டாக்டர் உள்ளே வந்தார்; "உடம்பு எப் படி இருக்கிறது அம்மா?" என்றார்.

கோபத்துடன் ராஜலக்ஷ்மி, "எப்படியிருப்பதென்ன? சாவைத் தடுப்பது உங்களால் சாத்தியமா என்ன? உங்கள் மருந்து எல்லாரையும் சிரஞ்ஜீவிகளாய் வாழச் செய்து விடுமோ?" என்றாள்.

டாக்டர் பொறுமையுடன், "சிரஞ்ஜீவிகளாக்க முடி யாமற் போனாலும் வியாதியின் உபத்திரவத்தைக் குறைக்க ......" என்பதற்குள், அவரை இடையிலே தடுத்து ராஜலக்ஷ்மி, "விதவைகளின் வாழ்க்கையே கஷ்டம் அனு பவிப்பதற்குத்தான். என்னை இப்படியே விட்டுவிடுங்கள்; என்னைத் துன்புறுத்த வேண்டாம். நீங்கள் போகலாம்" என்றாள்.

டாக்டர்: சற்று நாடியைப் பிடித்துப் பார்க்கிறேன்.

ராஜலக்ஷ்மி ஆத்திரத்துடன், "நாடியெல்லாம் நன் றாய்த்தான் இருக்கிறது. அது ஒன்றும் இப்போதைக்கு நின்று விடும்போல் இல்லை!" என்றாள்.

டாக்டர்: மஹேந்திரன் உங்களுக்கு வைத்தியம் செய் யும் பொறுப்பை என்னிடம் ஒப்பித்துப் போயிருக்கிறான்.

நீங்கள் இப்படி வைத்தியம் செய்துகொள்ள மறுத்தால் அவன் மிகவும் மனம் வருந்துவான்.

மஹேந்திரன் அவளுக்காக மனம் வருந்துவது! இது ராஜலக்ஷ்மியைக் கேலி செய்வது போன்று இருந்தது. அவள் பின்னும் ஆத்திரத்துடன், "நீங்கள் இதற்காகக் கவலைப்பட வேண்டாம். அவன் இதற்காக மனம் வருந்தப் போவதில்லை. நீங்கள் போகலாம். என்னைச் சற்று நித்திரை செய்ய விடுங்கள்" என்றாள்.

'இனி இவளுடன் வாதாடுவதில் பயனில்லை' என்று கண்டு டாக்டர் வெளியே வந்து ஆசாவிடம் ராஜலக்ஷ்மிக்கு என்ன செய்யவேண்டும் என்பதைத் தெரிவித்துப் போய்விட்டார்.

ஆசா அருகில் வந்ததுமே ராஜலக்ஷ்மி, "ஆசா, நீ ஏன் இப்படி நாள் முழுவதும் என்னிடம் உட்கார்ந்து பாடுபடுகிறாய்? போய்ச் சற்று இளைப்பாறு. வேலைக்காரியை என்னிடம் அனுப்பிவிட்டு நீ போய்ப் படுத்துக் கொள்" என்றாள்.

ஆசாவுக்கு ராஜலக்ஷ்மியின் பிடிவாத சுபாவம் நன்கு தெரியுமாதலால் அவள் உடனே அவ்வாக்கைக்குக் கீழ்ப் படிந்தாள். அவள் தன் அறைக்குப் போய் வெறுந் தரையிலேயே படுத்துக்கொண்டாள்.

நாள் முழுவதும் பட்டினி கிடந்ததாலும் நித்திரை செய்யாததாலும் ஆசா இளைத்துத் துரும்பாகிவிட்டாள். தெருவில் ஒரு வீட்டில் கலியாணம். நாகசுரத்தின் (ஸானாயி) சப்தம் கேட்டது. நடந்துபோன பல சம்பவங்கள் அவள் நினைவிற்கு வந்தன. சொற்பகாலத்திற்கு முன் தனக்குக் கலியாணமானது, அன்றைக் கோலாஹலம்,

பிறகு தங்களது இன்ப வாழ்க்கை—இவற்றுடன் தற்போதைய நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கவே, அவள் மனம் புண்பட்டது. வாழ்வில் தனக்கு இனியும் சுகம் கிட்டுமாவென ஏங்கினாள். கடவுளை மனமாரத் தியானித்துப் பிரார்த்தித்தாள். தான் பிரத்தியக்ஷ தெய்வமாகக் கருதும் அன்னபூரணியின் நினைவு வந்தது. தனது துயரத்தைச் சொல்லி அவளையும் துக்கத்தில் ஆழ்த்தக் கூடாதென்று ஆசா இதுவரை அன்னபூரணிக்கு ஒரு கடிதமும் எழுதவில்லை. இன்று அவள் மனம் துக்கத்தால் வெடித்துவிடும்போல் இருந்தது. தனது மனத் துயரை ஆற்றிக் கொள்ள அன்னபூரணியிடமன்றி வேறு யாரிடம் முறையிடுவதென எண்ணி அவளுக்கு உடனே ஒரு கடிதம் எழுதினாள்:

"அன்பார்ந்த சித்திக்கு,

எனக்கு உன்னைத் தவிர இவ்வுலகில் வேறு யாருமில்லை. துர்ப்பாக்கியவதியான என்னை நீ வந்து தேற்றினாலொழிய நான் உய்யும் வகையைக் காணேம். எனக்கு என்ன எழுதுவதெனத் தெரியவில்லை. உன் பாத கமலங்களில் என் கோடானுகோடி நமஸ்காரம்.

உன் அன்புள்ள,

ஆசா"

என்று எழுதித் தபாலில் போட்டாள்.

---

## நாற்பத்தாறும் அத்தியாயம்

அன்னபூரணி கல்கத்தா வந்து சேர்ந்தாள். வெகு நாளைப் பிரிவானது ராஜலக்ஷ்மியின் மனத்திலிருந்த பழைய மனஸ்தாபத்தையெல்லாம் குழிதோண்டிப்

புதைத்து விட்டது. இன்று அவளைக் காணும்போது இழந்த தனத்தைப் பெற்றதுபோல் மகிழ்ந்தாள். தன் ஓரகத்தியான அன்னபூரணியும் தானும் அவ்வீட்டு நாட்டுப்பெண்களாயிருந்து ஒரு காலத்தில் மிகவும் ஒற்றுமையுடன் இருந்தது ஒன்றே இப்பொழுது அவள் ஞாபகத்தில் இருந்தது. இவர்களுக்கிடையே சச்சரவிற்குக் காரணமாயிருந்த அந்த அருமைப் புத்திரன் மஹேந்திரன் இன்று எங்கே?

அன்னபூரணி ராஜலக்ஷ்மியின் அருகில் போய் உட்கார்ந்து அவள் கையை அன்புடன் பிடித்துக்கொண்டு, "உடம்பு எப்படி அம்மா இருக்கிறது?" என்றாள்.

ராஜலக்ஷ்மியால் பதில் பேசமுடியவில்லை. கண்ணீர் பிரவாகமெடுத்து ஓடியது. "அக்கா" என்ற ஒரு வார்த்தைதான் அவள் வாயிலிருந்து வெளிப்பட்டது. மனமுருகும் அக்காட்சியைக் காணத் தாளாது ஆசா அடுத்த அறையில் போய் உட்கார்ந்து அழலானாள்.

ராஜலக்ஷ்மியையோ அல்லது ஆசாவையோ மஹேந்திரனைப்பற்றிக் கேட்க அன்னபூரணி துணியவில்லை. வீட்டில் இருக்கும் ராஜலக்ஷ்மியின் தூர பந்துவான ஸாதுசரணரை அழைத்து, "மஹேந்திரன் எங்கே?" என்று கேட்டாள். ஸாதுசரணர் எல்லா ஸமாசாரங்களையும் விவரமாகக் கூறினார். பிறகு அன்னபூரணி அவரைப் பார்த்து, "விஹாரி எங்கே?" என்று கேட்டாள். "அவன் இங்கு வந்து வெகு நாட்களாயின. ஆகையால் எனக்கு அவனைப் பற்றிச் சரியான தகவல் ஒன்றும் தெரியாது" என்றார்.

அன்ன: அவன் வீட்டிற்குப் போய் அவனைப் பற்றி விசாரித்து வந்து சொல்லுங்கள்.

அவர் போய் விசாரித்துத் திரும்பி வந்து, "அவன் இங்கில்லையாம். கங்கைக்கரையில் பாலி என்ற இடத்தில் பெரிய பங்களா வாங்கிக்கொண்டு அங்கே வசிக்கிருனும்" என்ருர்.

டாக்டர் வந்ததும் அன்னபூரணி அவரிடம் நோயாளியின் தேகஸ்திதியைப் பற்றி விசாரித்தாள். ராஜலக்ஷ்மியின் வயிற்றில் கட்டி (Cancer) இருக்கிறதென்றும், அவளுடைய இருதயம் வேறு துர்ப்பலமாயிருப்பதால் அவள் எந்த நிமிஷத்திலும் இறந்துவிடக் கூடுமென்றும் டாக்டர் தெரிவித்தார்.

சாயங்காலம் ராஜலக்ஷ்மியின் மூச்சுத் திணறல் மேலும் அதிகரித்தது. "டாக்டரை அழைத்துவரச் சொல்லட்டுமா?" என்ருள் அன்னபூரணி.

"வேண்டாம் அக்கா, டாக்டரால் எனக்கு இனி ஒன்றும் செய்ய முடியாது" என்ருள் ராஜலக்ஷ்மி.

அன்ன: பின் வேறு யாரை அழைக்க விரும்புகிருய்?

ராஜலக்ஷ்மி: விஹாரியை வரவழைத்தாயானுல் நலம்.

அதற்கு முன்பு காசியில் தன்னிடம் வந்த விஹாரியைத் தான் அகாரணமாய்க் கோபித்து அவமானத்துடன் திருப்பியனுப்பியது அன்னபூரணியின் உள்ளத்தை அறுத்தது. மறுபடியும் அவனைச் சந்தித்து அவனைத் தேற்றிச் சாந்தப்படுத்தச் சமயம் வாய்க்குமென அவள் கனவிலும் நினைத்திருக்கவில்லை. அவள் மாடிமேலுள்ள மஹேந்திரனின் அறைப்பக்கம் சென்ருள். அவ்வீட்டிற்கு ஆனந்த நிலயமாய் விளங்கிய அவ்வறை அன்று களையற்றுச் சூன்யமாகக் காணப்பட்டது. சித்தி மாடிக்குப் போவதைப் பார்த்ததும் ஆசாவும் பின்னேயே அங்கு வந்து சேர்ந்

தாள். அன்னபூரணி அவளை அன்புடன் கட்டித் தழுவி முத்தமிட்டாள். ஆசா அவளை நமஸ்கரித்துத் தழு தழுத்த குரலில், "சித்தி, எனக்கு மனோபல முண்டாகும் படி ஆசிர்வாதம் செய். இப்படித் துன்பம் ஏற்படுமென்று நான் கனவிலும் நினைத்திருக்கவில்லை. அம்மா! இப்படி இன்னும் எவ்வளவு நாட்கள் சகிப்பது!" என்று வாய் விட்டு அழுதாள்.

அன்னபூரணி அங்கேயே உட்கார்ந்தாள். ஆசாவைத் தன் மடியில் உட்காரவைத்துக்கொண்டு, பேசாமல் வெகு நேரம் வரையில் பகவானைப் பிரார்த்தித்தாள்.

வெகு தினங்களுக்குப் பிறகு ஆசாவின் மனத்தில் இன்று சாந்தி நிலவியது. தனது துன்பத்திற்கு முடிவு காலம் சமீபித்து விட்டதுபோல் தோன்றியது. தன்னைப் போன்ற மூடாத்மாவின் வேண்டுகோளைக் கடவுள் அங்கி கரிக்காவிட்டாலும் புண்ணியாத்மாவான தன் சித்தியின் பிரார்த்தனை ஒரு நாளும் வீண் போகாது என நம்பினாள்.

பிறகு மனத் தேறுதலடைந்து, "சித்தி, இங்கு வரு மாறு விஹாரி பாபுவுக்குக் கடிதமெழுதினால் என்ன?" என்றாள் ஆசா.

அன்னபூரணி, "கடிதம் வேண்டாம். நாளை நானே புறப்பட்டுப்போய் அவனை அழைத்து வருகிறேன்" என்றாள்.

---

## நாற்பத்தேழாம் அத்தியாயம்

தனது மனத்தை ஏதாவதொரு பரோபகார காரி யத்தில் ஈடுபடுத்தினாலொழிய தனக்கு மனவமைதி ஏற் படாதென விஹாரி தீர்மானித்தான். சிறு ஊதியம்

பெற்று அரைவயிற்றுச் சாப்பாட்டிற்கும் போதாமல், பெரிய பட்டணங்களில் குடும்ப சகிதம் குடியேறிக் கஷ்டப்படும் குமாஸ்தாக்களின் பரிதாப நிலையைக் காண அவன் மனம் இரங்கினான். அவர்களுக்காகவே கங்கைக் கரையில் பாலி என்ற இடத்தில் விஸ்தாரமான திறந்த வெளியில் ஆரோக்கிய ஆச்ரமம் ஒன்று ஸ்தாபிக்க விரும்பி அவ்வேலையில் ஈடுபட்டான். அதற்காகவேண்டிக் கட்டட வேலை நடந்துகொண்டிருந்தது.

ஆனால் அப்பொழுதும் விஹாரிக்குத் தான் விரும்பிய மனச்சாந்தி கிடைக்கவில்லை. மனக்கிலேசமே அதிகரித்தது. எக்காரியத்தில் பிரவேசித்தாலும் எல்லாம் சாரமற்றுத் தோன்றியது. ஒன்றிலும் மனத்திற்குச் சந்தோஷமோ உற்சாகமோ இல்லாமற் போயிற்று. விஹாரி இதற்கு முன் என்றும் இப்படி உற்சாகம் இழந்ததே இல்லை.

வாழ்வில் ஒருவித லட்சியமும் இன்றி, செய்யவேண்டுமென்பதற்காகவே தனக்குத் தோன்றிய வேலையைச் செய்து வந்தான். மனத்தில் அடங்காத ஒரு வேட்கை இருந்தது. அன்று இரவு தனக்கும் விநோதினிக்கும் ஏற்பட்ட அகஸ்மாத்தான சந்திப்பே அவ்வேட்கைக்குக் காரணம்.

கங்கையில் ஆடி வெள்ளம் கரைபுரண்டு பூரணமாய் ஓடியது. பூர்ணிமை இரவு. இப்படி எவ்வளவோ பூர்ணிமைகள் இதுவரையில் அமிர்த கலசத்தை ஏந்தி அவனிடம் வந்து சென்றுவிட்டன. ஆனால் இன்று விஹாரியின் மனவேட்கை அவ்வமிர்த பானமின்றித் தணியாதெனத் தோன்றியது. இதுவரை கழிந்த தன் வாழ்நாட்கள் யாவும் வியர்த்தமெனப் பட்டது. அன்று இரவு விநோதினி தன்



அவள் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தான்.

—பக்கம் 305

பாதங்களைக் கண்களில் ஒற்றி முத்தமிட்டதை அவனால் மறக்க முடியவில்லை. எங்கும் அவனுக்கு விநோதினியின் உருவமயமாகவே தோன்றியது. அவளது மிருதுவான ஸ்பர்சம், அவளது தீனப் பார்வை இவை அவனை நாலு பக்கமும் சூழ்ந்து இன்ப உணர்ச்சியை ஊட்டிப் பரவசப்படுத்தின.

ஆனாலும் இன்று விஹாரி விநோதினியை விட்டு வந்து இவ்வளவு தூரத்தில் இருப்பானேன்? தாமரை எவ்வளவுதான் அழகு பொருந்தியதானாலும் அது சேற்றில்தான் முளைக்கின்றது; பறித்தெடுக்கும்போது சேறும் கூடவே வருகிறது. அதை ஒரு தூய இடத்தில் வளரச் செய்ய முடியுமோ? அதேபோல்தான் விநோதினியைக் கொணர்ந்து களங்கமற்ற புனிதமான ஸ்தானத்தில் வைக்க முடியுமாவென அவன் யோசித்தான். அப்படியே முடியுமானாலும் மஹேந்திரனுடைய விரோதம் துவேஷம் இவையின்றிச் செய்யமுடியாது. மஹேந்திரனின் விரோதத்தைத் தேட அவன் ஒருகாலும் உடம்படமாட்டான். இதனால்தான் அவன் விநோதினிக்கு ஒரு கடிதங்கூட எழுதத் துணியவில்லை. எதிர்பாராத கெட்ட செய்தி ஏதாவது காதில் விழுந்து தனது இன்பக் கனவும் சிதைந்துவிடப் போகிறதேயென அஞ்சினான்.

விஹாரி ஒருநாட் காலை ஒரு மாமரத்தடியில் பெஞ்சியில் உட்கார்ந்து ஏக்கமுற்று யோசனையில் இருந்தான். சமையலென்ன செய்வதென்று சமையற்காரன் வந்து கேட்க, "பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்பொழுது பசியில்லை" என்று சொல்லி அனுப்பிவிட்டான்.

அச்சமயம் திடீரென்று அன்னபூரணி எதிரே வந்து நிற்பதைக் கண்டு வியப்புற்று எழுந்தான். அவள் பாதங்

களில் விழுந்து நமஸ்கரித்தான். அன்னபூரணி அவனை அன்புடன் தூக்கியெழுப்பி, "விஹாரி, வியாதிக்காரனைப் போல் ஏன் இப்படி மெலிந்து போய்விட்டாய்?" என்று கண்ணீர் உகுத்தாள்.

விஹாரி: உங்களுடைய அன்பை மறுபடியும் பெற வேண்டித்தான்.

அன்னபூரணியின் கண்ணீரைக் கண்டதும் விஹாரியின் மனம் பதைத்தது. அவன், "பெரியம்மா, நீங்கள் இன்னும் சாப்பிடக்கூட இல்லை. வாருங்கள், போகலாம். உங்களுடைய கையால் சமைத்த சாப்பாட்டைச் சாப்பிட்டு எவ்வளவோ காலமாயிற்று. இன்றுதான் அதைப் பெறும் பாக்கியம் பெற்றேன்" என்றான்.

மஹேந்திரன் ஆசா இவர்களைப்பற்றி விஹாரி ஒன்றும் கேட்கவில்லை. சாப்பாடு முடிந்ததும் அன்னபூரணி, "கரையில் படகு தயாராயிருக்கிறது. நாம் கல்கத்தா செல்வோம் வா" என்றாள்.

விஹாரி: கல்கத்தாவில் எனக்கு என்ன வேலை?

அன்ன: ராஜலக்ஷ்மி மிகவும் நோயுற்றுக் கிடக்கிறாள். உன்னைப் பார்க்க விரும்புகிறாள்.

விஹாரி திடுக்கிட்டுப் பிறகு, "மஹேன் எங்கே இருக்கிறான்?" என்று கேட்டான்.

அன்ன: கல்கத்தாவில் இல்லை. மேற்கே சுற்றுப் பிரயாணத்தில் இருக்கிறான்.

விஹாரியின் முகம் வெளுத்தது. பேசவேயில்லை அவன்.

அன்ன: உனக்கு நடந்த விஷயமெல்லாம் தெரியாதா?

விஹாரி: ஏதோ கொஞ்சம் அறிவேன். எல்லாம் தெரியாது.

அன்னபூரணி நடந்தவற்றையெல்லாம் விஸ்தாரமாக எடுத்துக் கூறினாள். அதைக் கேட்டதும் விஹாரி சற்று முன் கட்டிய கற்பனைக் கோட்டையெல்லாம் ஒரு நொடியில் தகர்ந்து மண்ணாயிற்று.

'மாயாவினி விநோதினி அன்று நடித்ததெல்லாம் வெறும் நாடகந்தானா? ஆத்ம சமர்ப்பணம் செய்வதாகச் சொன்னதெல்லாம் பொய்யா? கபடவேஷந்தானா? கிராமத்தைவிட்டு லஜ்ஜையற்று மஹேந்திரனுடன் தனியாகவா ஓடிவிட்டாள்? எனது முட்டாள்தனத்தை என்னவென்று சொல்வது? இந்த நீலியையன்றோ நான் நம்பினேன்! என்று தன்னையே சபித்துக்கொண்டான்.

ஒரு நொடியில் அவனது இன்பக்கனவு இந்திரஜாலம் போல் மறைந்தது.

---

## நாற்பத்தெட்டாம் அத்தியாயம்

வீட்டிற்குள் நுழைந்ததுமே வீடு களையிழந்து காணப்பட்டது. ஆசாவின் முகத்தில் எப்படி விழிப்பதெனத் தயங்கினான் விஹாரி. நண்பனின் செய்கை அவனைத் தலை குனியச் செய்தது. உள்ளே காலெடுத்து வைக்கவே மனம் பின் வாங்கியது.

ஆனால் சங்கோசப்படுவதற்கும் யோசிப்பதற்கும் இப்பொழுது சமயம் ஏது? ஆசாவே எதிரில் வந்து, "அம்மா மிகவும் அவஸ்தைப்படுகிறார். சற்று வந்து பாருங்கள்" என்றாள்.

துக்கமானது தூர இருப்பவர்களையும் அருகில் இழுத்து, வேற்றுமையைப் போக்கி ஒன்று சேர்த்து விடுகிறது. அச்சமயம் வெட்கம் நாணம் இவற்றைப் பாராட்டிக்கொண்டிருக்கத் தோன்றுவதில்லை. ஆசா விஹாரியுடன் தானே வந்து இப்படிப் பேசுவது இதுதான் முதல் முறை.

விஹாரி உள்ளே சென்ற சமயம் ராஜலக்ஷ்மி மூச்சு விடத் தவித்துக் கொண்டிருந்தாள். சமாளித்துக்கொண்டு கண்ணைத் திறக்கச் சிறிது நேரமாயிற்று.

விஹாரி அவளை நமஸ்கரித்து அவள் பாதங்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டான். ராஜலக்ஷ்மி சொல்லிய படி அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்தான். "அப்பா விஹாரி, சௌக்கியமா? எவ்வளவு நாளாயிற்று உன்னைப் பார்த்து!" என்றாள் ராஜலக்ஷ்மி.

விஹாரி: அம்மா, நீங்கள் இப்படிப் படுத்திருக்கும் செய்தியை எனக்கு ஏன் தெரிவிக்காது போனீர்கள். தெரிந்தால் ஒரு நொடியில் வந்திருக்க மாட்டேனா?

ராஜலக்ஷ்மி அன்புடன், "எனக்கு அது தெரியாதாடா அப்பா? உன்னை நான் பத்துமாதம் சுமந்து பெற்றெடுக்கவில்லையே தவிர உன்னைக் காட்டிலும் அருமையானவர் எனக்கு வேறு யார் இருக்கின்றனர்?" எனக் கண்ணீர் பெருக்கினாள்.

தனது துக்கத்தை மறைக்க விஹாரியும் எழுந்து பக்கத்து அலமாரியில் ராஜலக்ஷ்மிக்காக வைத்திருக்கும் மருந்துகளை எடுத்துப் பார்த்துச் சிறிது நேரம் நின்று விட்டுப் பிறகு ராஜலக்ஷ்மியிடம் வந்து அவளது நாடியைப் பரிசோதிக்கக் கையை எடுத்தான். அதற்குள் ராஜலக்ஷ்மி,

"எனது நாடி இருக்கட்டும். நீ ஏன் இப்படி நோய கொண்டவன் போல் ஆகிவிட்டாய்?" எனக் கேட்டாள்.

விஹாரி, "உங்கள் கையால் போஜனமிட்டு உண்டா லன்றி இந்த எலும்புகள் மறைய மாட்டா. வியாதி குண மடைந்து நீங்கள் சீக்கிரம் எழுந்திருங்கள், அம்மா. நானும் சாப்பிடத் தயார் செய்து கொள்ளுகிறேன்" என் ருன். ராஜலக்ஷ்மி சிரிப்பை அடக்கிக் கொண்டு, "ஆமாம்! தயார் செய்து கொள். ஆனால் சாப்பாட்டிற் கல்ல" எனக் கூறிக்கொண்டே அவன் கையைப் பிடித்துக் கொண்டு, "விஹாரி, இனி நீ உனக்கு ஒரு மனைவியைத் தேடிக்கொண்டு வரவேண்டும். உன்னைக் கவனிப்பார் யாரு மில்லை. (அன்னபூரணியை நோக்கி) அக்கா, விஹாரிக்கு விவாகம் செய்துவை. அவன் உடம்பு எப்படியாகி விட் டது பார்த்தாயா?" என்று சொன்னாள்.

அன்ன: செய்யவேண்டியதெல்லாம் உன்னால்தான் முடியும், ராஜலக்ஷ்மி. நீ சீக்கிரம் சொஸ்தமடைந்து எழுந்திரு. நாம் யாவருமாக இச்சுப காரியத்தை நடத்தி விடுவோம்.

ராஜலக்ஷ்மி: இனி எனக்கு அம்மாதிரி சந்தர்ப்பம் வாய்க்கப் போவதில்லை. அக்கா, விஹாரியை நான் உன் னிடமே ஒப்படைக்கிறேன். அவனைச் சுகியாக வைப்பது உனது பொறுப்பு. அவன் விஷயத்தில் என்னால் எனது கடமையை நிறைவேற்றிவைக்க முடியவில்லை. பகவான் அவன்மீது கிருபை புரியட்டும்.

யாவருக்கும் துக்கம் நெஞ்சை அடைத்தது. ஆசா அவ்விடத்தை விட்டு அகன்ருள். அன்னபூரணியின் கண் களில் நீர் துளித்தது.

திடீரென எதையோ நினைத்துக்கொண்டவள் போல ராஜலக்ஷ்மி, "ஆசா! ஆசா!" என்று அழைத்தாள். ஆசா வந்ததும், "விஹாரிக்குப் போஜனத்திற்கு ஏற்பாடு ஏதாவது செய்தாயா?" என்று கேட்டாள்.

அதற்குள் விஹாரி, "அம்மா, நான் சாப்பாட்டு ராமன் என்பது எல்லாருக்கும் தெரியும். உள்ளே நுழையும்போதே ஒரு கூடைக் கறிகாய், பழம் எல்லாம் ஆள் வாங்கிக்கொண்டு வந்ததைப் பார்த்தேன். நமது கியாதி இன்னும் இவ்வீட்டில் மறையவில்லையென்று அப்பொழுதே தெரிந்து கொண்டேன்" என்று சொல்லி ஆசாவைப் பார்த்துச் சிரித்தான்.

ஆசா அவனது சிரிப்பைப் பார்த்து நாணமடையவில்லை. அவளும் புன்னகை புரிந்தாள். முன்பு அவள் அவன் குணத்தை நன்கு அறிந்திருக்கவில்லை. அவன் இக்குடும்பத்திற்கு இதம் செய்பவனெனக் கருதாது விரோதியாகப் பாவித்து வெறுத்து வந்தாள். இப்பொழுது அவளது வெறுப்பு முழுதும் ஆதரவும் சிரத்தையுமாக மாறியது.

"அக்கா, இன்றைச் சமையலை நீயே மேற்பார்வையிட வேண்டும். என் விஹாரிக்குக் கறிகாய் வகைகள் எவ்வளவு இருந்தாலும் ஒரு தட்டு வறுவல்மட்டுமில்லாவிட்டால் அவன் வயிறு நிறையாது" என்றாள். இதைக் கேட்டு எல்லோரும் நகைத்தனர்.

அவ்வீட்டைச் சூழ்ந்திருந்த துக்கம் அன்று சற்றே நீங்கியது போல் காணப்பட்டது.

இவ்வளவு பேச்சுவார்த்தைக்கு இடையிலும் மஹேந்திரனின் பெயரைக்கூட ஒருவரும் பிரஸ்தாபிக்கவில்லை.

முன்பெல்லாம் சதா விஹாரியினிடம் தன் புத்திரனைப் பற்றியே பெருமை யடித்துக்கொள்ளும் ராஜலக்ஷ்மி இன்று அவனது பெயரை உச்சரிக்கக் கூடக் கூசினாள்.

ராஜலக்ஷ்மி சற்றுத் தூங்கும் சமயம் விஹாரி வெளியே வந்து அன்னபூரணியிடம், "அம்மாவின் நோய் சாதாரணமானதல்ல" என்றான்.

அன்ன: அதுதான் ஸ்பஷ்டமாய்த் தெரிகிறதே. விஹாரி, இனிக் காலதாமதமின்றி மஹேந்திரனை வரவழைப்பதுதான் நலம்.

சற்று யோசித்துவிட்டுப் பிறகு விஹாரி, "நீங்கள் எப்படிச் சொல்கிறீர்களோ அப்படிச் செய்யச் சித்தமாயிருக்கிறேன். அவன் இருக்குமிடம் யாருக்காவது தெரியுமா?" என்று கேட்டான்.

அன்ன: சரியாக யாருக்கும் தெரியாது. தேடவேண்டும். விஹாரி, இன்னுமொரு வார்த்தை. ஆசாவை நீ கவனித்துப் பார்த்தாயா? விநோதினியின் மாய வலையிலிருந்து அவனை விடுவித்தாலொழிய ஆசா பிழைப்பதும் அரிது. அவள் உள்ளம் படும் வேதனை அவள் முகத்திலிருந்தே நன்கு தெரிகிறது. மஹேந்திரனை நீதான் விடுவித்துக் காப்பாற்றவேண்டும்.

'ஹா கடவுளே, பிறரைக் காப்பாற்றுவதற்கு நான். என்னைக் காப்பது யாரோ?' என்று தன்னுள்ளே கூறிக்கொண்டு அன்னபூரணியிடம், "பெரியம்மா, என்றுமே விநோதினியை மஹேந்திரன் நாடாதவாறு தடுத்து வைக்க எனக்கு என்ன மந்திர சக்தியா இருக்கிறது? தாயின் வியாதியை உத்தேசித்து வேண்டுமானால் அவன் சில

தினங்கள் வீட்டில் இருக்கக் கூடும். பிறகு அவன் மனம் அவள்பால் செல்லாதென்று நான் எப்படிக் கூறுவேன்?'' என்றான் விஹாரி.

அச்சமயம் ஆசாவும் அங்கு வந்து சேர்ந்தாள். ராஜலக்ஷ்மியின் தேகஸ்திதியைப் பற்றித்தான் அவர்கள் இருவரும் சம்பாஷிப்பதாக நினைத்து அவளும் அங்கு வந்தாள். அப்பதி விரதா சிரோமணியின் முகம் துக்கத்தால் மலினமடைந்திருப்பதைக் காண விஹாரியின் மனத்தில் அவளிடம் பக்தி உதயமாயிற்று. புராணங்களில் வரும் சீதை, சாவித்திரி, அருந்ததி போன்ற உத்தம நாரீமணிகளின் அவதாரமாக இன்று ஆசா அவனுக்குத் தோன்றினாள்.

ராஜலக்ஷ்மிக்கு என்ன மருந்து கொடுக்க வேண்டுமென்பதைத் தெரிந்துகொண்டு ஆசா அவ்விடத்திலிருந்து சென்ற பிறகு, ''மஹேந்திரனை நான் மீட்டு வருகிறேன்'' என்று அன்னபூரணியிடம் சொல்லிப் பெருமூச்செறிந்தான் விஹாரி.

விஹாரி பாங்கியில் சென்று விசாரித்ததில் அப்பாங்கியின் அலகாபாத் கிளையில் மஹேந்திரன் கணக்கு வைத்துப் பணம் கொஞ்சநாட்களாகப் பெற்று வருவதாகத் தெரிந்தது.

---

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்

ரயில்வே ஸ்டேஷனை அடைந்ததும் விநோதினி இண்டர்வகுப்பு ஸ்திரீகள் வண்டி ஒன்றில் போய் ஏறிக்கொள்வதைக் கண்டு மஹேந்திரன் திகைப்புற்றான்.

"உனக்காக நான் இரண்டாம் வகுப்பு டிக்கெட் வாங்கப்போகிறேன். நீ என்ன இதில் போய் ஏறிக்கொண் டாய்?" என்ருன் அவன்.

விநோதினி: வேண்டாம். எனக்கு இதுவே சௌகரி யமாயிருக்கிறது.

மஹேந்திரனுக்கு அவளது செய்கை வியப்பை அளித் தது. 'விநோதினி சுபாவத்தில் ஆடம்பரப் பிரியை. ஏழைமைத்தனத்தை ஓர் அவமானமாகக் கருதுபவள். நான் பணக்காரன். எனது வீட்டில் சகல சௌகரியங் களும் நிறைந்திருக்கின்றன. இதனுல்தான் என்னை யாவரும் மதிக்கின்றனர். இவைகளால் வசீகரிக்கப் பட்டே விநோதினியும் என்மீது அன்பு கொண்டாள்' என்று அவன் அதுவரை நினைத்திருந்தான். இப்பொழுது அவன்மீதும் அவனது தனத்தின் மீதும் பூரண அதிகாரம் படைத்தவளா யிருந்தும், அவள் அதை எவ்வளவு குறைவாய்த் தனக்காகப் பயன்படுத்திக்கொள்ள முடி யுமோ அவ்வளவே பெற விரும்புவதன் காரணம் அவனுக்கு விளங்கவில்லை. பணத்தை மாத்திரமன்றி அவனையும் தூரத்திலே விலக்கி வைத்திருக்க அவள் விரும்பினுள். என்றுமில்லாதவாறு தனது வைதவ்ய விரதத்தைக் கண்டிப்பாக அனுஷ்டிப்பவள்போல் காணப்பட்டாள். முன்பு இருந்த சிரிப்பு, வேடிக்கை, விளையாட்டுப் பேச்சுக் கள் யாவும் மறைந்தன. தானே வலிய ஏழைமை விரதம் பூண்டாள். முரட்டுத் துணிதான் உடுத்தாள். ஒரே வேளைச் சாப்பாடுதான். மஹேந்திரன் அவளிடம் எதையும் வற்புறுத்திப் பேசவே பயப்பட்டான். அவன் மனத்தில் கோபம் பொங்கியது. எவ்வளவோ சாகசம் செய்து

தன்னை அடைந்த பிறகு தன்னை இப்படிப் புறக்கணிப்பதேன் என ஆத்திரங் கொண்டான்.

"எவ்விடத்திற்கு டிக்கெட் வாங்கட்டும்?" என்று அவன் வினவினான்.

விநோதினி: மேற்கே எங்கே போக உனக்கு விருப்பமோ அவ்விடத்திற்கு வாங்கு; காலையில் ரெயில் நிற்குமிடத்தில்தான் நான் இறங்கப்போகிறேன்.

சுகமாய் ஓரிடத்தில் இராமல் யாத்திரை செய்து சுற்றிக்கொண்டிருப்பதை மஹேந்திரன் விரும்பவில்லை. வெளியூரில் தங்க நேர்ந்து, சரியான வீடும் மற்றச் சௌகரியங்களும் கிடைக்காவிடின் என்ன செய்வதென்பதே அவன் சிந்தனை. தேடித் திரிந்து வேலை செய்யும் வழக்கமில்லை அவனுக்கு. முணுமுணுத்துக்கொண்டே அவன் ரெயில் ஏறினான். தனக்குத் தெரியாமல் நடுவில் ரெயில் நிற்கும்போது எந்த ஸ்டேஷனிலாவது விநோதினி இறங்கிச் சென்றுவிடுவாளோ என்ற பயம் வேறு அவனைப் பிடித்தது.

இப்படி விநோதினி யாத்திரை செய்ய, சனீசுவரனைப் போல் அவளைப் பின் தொடர்ந்து மஹேந்திரன் சுற்றிக்கொண்டிருந்தான். அவனுக்குச் சிறிதும் ஓய்வில்லை. விநோதினி பெண்கள் வண்டியில் இருக்கும் ஸ்திரீகளுடன் சுலபமாய்ச் சிநேகம் செய்துகொண்டுவிடுவாள். அவர்களிடமிருந்து ஊர்களைப் பற்றிய விவரமெல்லாம் அறிந்துகொண்டு விடுவாள். எந்த ஊரில் தங்க விருப்பமோ அங்கே தர்ம சத்திரங்களில் இறங்கிக்கொள்வாள். தன்னோடு வரும் ஸ்திரீகளின் கூடவே சென்று பார்க்க வேண்டிய இடங்களையெல்லாம் சுற்றிப் பார்ப்பாள்.

டிக்கெட் வாங்குவது ஒன்று தவிர அவள எதற்கும் மஹேந்திரனின் உதவியை நாடவில்லை. அவள் கூப்பிடாமலே அவள் பின்னே சுற்றிச் சுற்றி மஹேந்திரன் களைப்படைந்தான். அப்படிச் செல்வது அவனுக்கு இழிவாகவும் தோன்றியது. தாய்க்குச் செல்வப்பிள்ளையாக வளர்ந்த மஹேந்திரன் இப்படி வீடு வாசலைவிட்டுத் தெருத்தெருவாய் ஊர் ஊராய்ச் சுற்றுவானென்று ஒருவரும் கனவிலும் நினைத்திருக்க மாட்டார்கள்.

ஒருநாள் அலகாபாத் ஸ்டேஷனில் மஹேந்திரனும் விநோதினியும் நின்றுகொண்டு ரெயிலுக்காகக் காத்திருந்தனர். அன்று எக்காரணத்தினலோ ரெயில் வரத் தாமதமாகிவிட்டது. மற்ற ரெயில்களிலிருந்து இறங்குபவர்களையும் ஏறுபவர்களையும் விநோதினி மிகவும் கவனமாய்ப் பார்த்துக்கொண்டிருந்தாள். அக்கூட்டத்தில் தான் எதிர்பார்க்கும் யாரையோ தேடுவதுபோன்று இருந்தது, அவள் நோக்குவது. கல்கத்தாவில் தனி வீட்டில் அடைந்து கிடப்பதைக் காட்டிலும் இப்படி யாத்திரை செய்வது அவள் மனத்திற்குச் சாந்தியையே அளித்தது.

தற்செயலாக அவளது கவனம் ஸ்டேஷன் சுவரிலிருந்த ஒரு விளம்பரத்தின் மீது சென்றது. விஹாரி ஸ்தாபிக்க உத்தேசித்திருக்கும் ஆரோக்கிய ஆசிரமத்தின் விலாசம் அதில் காணப்பட்டது. எந்த விஹாரியாக இருக்கலாமென்பதைப்பற்றி விநோதினிக்குச் சந்தேகம் ஏற்படவில்லை. அவள், விலாசத்தை நன்ருய்ப்படித்து ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, பெஞ்சியின்மேல் உட்கார்ந்திருந்த மஹேந்திரனிடம் வந்து, "நான் சில தினங்கள் அலகாபாத்திலேயே இருக்கப்போகிறேன்" என்ருள்.

விநோதினி தன் இஷ்டப்படியெல்லாம் மஹேந்திரனை ஆட்டிவைக்கக்கூடிய சக்தி பெற்றிருந்தாள். ஆனால் அவன் மனோவேட்கையை மாத்திரம் தணிக்க அவள் யத்தனிக்க வேயில்லை. அவனது உணர்ச்சியைப் புண்படுத்த எவ்வளவு செய்யக்கூடுமோ அவ்வளவும் அவள் செய்யத் தவற வில்லை. அவனும் அவள் செயலை வெறுக்க ஆரம்பித் தான். அலகாபாத்தில் தங்கிச் சற்று ஓய்வெடுத்துக் கொள்ள அவனுக்கும் விருப்பந்தான். ஆனாலும் விநோ தினியின் விருப்பத்திற்கு இணங்குவதா என்னும் வீம்பிற் காகக் கோபத்துடன், "இங்கிருந்து புறப்படுவதற்காக ஸ்டேஷன்வரை வந்தாகிவிட்டது; இனித் திரும்புவ தாவது? நான் இருக்கப்போவதில்லை" என்று தன் பௌருஷத்தைக் காட்டினன்.

விநோதினி: நான் இங்கேயேதான் தங்கப்போகிறேன்.

மஹேந்திரன்: நீ தனியாகவே இரு. நான் போகிறேன்.

"மிகவும் நல்லது" எனக் கூறி விநோதினி ஒரு கூலியை அழைத்துச் சாமான்களை அவன் தலையில் சுமத் திக்கொண்டு ஸ்டேஷனைவிட்டு வெளியே சென்றாள்.

மஹேந்திரன், கண்களில் கோபப்பொறி பறக்க, அவள் கண்மறையும்வரை பார்த்துக்கொண்டே இருந் தான். அவள் ஒரு முறைகூட அவனைத் திரும்பிப் பார்க்க வில்லை. உடனே மஹேந்திரனும் வேறொரு கூலியைக் கூப்பிட்டுத் தன் சாமான்களைத் தூக்கிக்கொள்ளச் சொல்லி விநோதினி போன பக்கமே சென்றான். வெளியில் வந்து பார்க்கும்போது அவள் ஒரு வாடகை வண்டியில் ஏறிக்கொண்டிருந்தாள். மஹேந்திரன் வாயைத் திறவாது தன் சாமான்களையும் அதில் வைத்துவிட்டுத் தான் மட்டும்

வண்டிக்காரன் பக்கத்தில் சென்று உட்கார்ந்துகொண்டான். தன்னை அவமானப்படுத்திய விநோதினியின் எதிரில் வண்டிக்கு உட்புறம் உட்கார அவன் மனம் இணங்கவில்லை.

வண்டி ஊரைத் தாண்டிச் சென்றுகொண்டே இருந்தது. அது எங்கே போகிறதென்று வண்டிக்காரனைக் கேட்க மஹேந்திரனுக்கு வெட்கம். 'உள்ளே உட்கார்ந்திருக்கும் அம்மாவுக்கு இவன் வேலைக்காரனுக்கும்; அதனால்தான் இவனுக்குப் போகுமிடம் கூடத் தெரியவில்லை' என்று வண்டிக்காரன் நினைத்துவிடப் போகிறானென வெட்கிப் பேசாதிருந்தான்.

கடைசியில் வண்டி ஓர் அழகிய பங்களாவின்முன் நின்றது. 'இது யாருடைய பங்களா? விநோதினிக்கு இவ் விடம் எப்படித் தெரிந்தது?' என்று மஹேந்திரன் வியப்புற்றான்.

பங்களா பூட்டியிருந்தது. வெளியில் பிராமணக் கிழவர் ஒருவர் நின்றிருந்தார். "இவ்வீட்டின் சொந்தக்காரர் அதிக ஸமீபத்திலேயே இருக்கிறார். நான் போய் அவருடைய அனுமதிபெற்றுத் திறவுகோல் கொண்டு வருகிறேன். நீங்கள் இங்கேயே தங்கலாம்" என்றார் அவர்.

"நான் இங்கேயே இருக்கிறேன். நீயே போய் வீட்டுக் காரரைப் பார்த்துப் பேசி அனுமதிபெற்று வந்துவிடு" என்றாள் விநோதினி மஹேந்திரனிடம்.

வீடும் தோட்டமும் மஹேந்திரன் மனத்தைக் கவர்ந்தன. இவ்வளவு நாட்கள் அலைந்து திரிந்து கடைசியில் சற்றுத் தங்க அவகாசம் கிடைத்தது அவனுக்குச் சந்தோஷத்தை அளித்தது. வீட்டுச் சொந்தக்காரனைக் காணச் சென்றான்.

கிழப் பிராமணர் விநோதினிக்குத் துணையாய் நின்றிருந்தார். விநோதினி அவர் குடும்ப வரலாற்றையெல்லாம் விசாரித்துத் தெரிந்துகொண்டாள். அவர் மனைவியும் இறந்து விட்டாளென்பதைக் கேட்டு அவரிடம் அநுதாபங் கொண்டாள். பேச்சிற் கிடையிலேயே, "விஹாரி பாபு இங்கேதானே வசித்து வந்தார்?" என்று கேட்டாள்.

கிழவர்: கொஞ்ச நாட்கள் இங்கேயே இருந்தார். உங்களுக்கு அவர் பரிசயமுண்டோ, அம்மா?

விநோதினி: அவர் என் உறவினர்.

கிழவரிடமிருந்து விஹாரி எந்த அறையில் படுத்துக் கொள்வான், எந்த அறையில் உட்காருவான் என்பனவெல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்டாள். விஹாரி மறுபடி அங்கே திரும்பி வருவானு வென்று கிழவரால் நிச்சயமாய்த் தெரிவிக்க முடியவில்லை. தம் எஜமானரைக் கேட்டுத் தெரிவிப்பதாகச் சொன்னார். விஹாரி சென்ற தினத்திலிருந்து அவ்வீடு பூட்டியே இருந்ததென்பதையும் அறிந்துகொண்டாள். அவளுக்கு அவ்வீடு புனிதமான கோயில் போல் தோன்றியது. விஹாரியின் சூக்ஷ்மாத்மா அவ்வீட்டில் சஞ்சரிப்பது போன்றே அவள் உணர்ந்தாள்.

அச்சமயம் வீட்டிற்கு வாடகையும் கொடுத்து அநுமதியும் பெற்று மஹேந்திரன் திரும்பிவந்தான்.

---

## ஐம்பதாம் அத்தியாயம்

ஹிமாலயத்தின் பனி உருகி அந்நீர்த்தாரையிலிருந்து உற்பத்தியாகும் புண்ணிய நதிகள் அனந்தம். கங்கை, யமுனை ஆகிய நதிகளின் பெருமையைச் சிலாகித்துப் பாடிய கவிகளோ எண்ணிலடங்கார்.

இயற்கை வனப்பு நிறைந்த இந்த யமுனைக் கரையில் மஹேந்திரன் போய் உட்கார்ந்தான். அவ்விடத்தின் சௌந்தர்யமானது அவனைப் பரவசப்படுத்தி மோஹ சாகரத்தில் ஆழ்த்தியது. சூரியன் தன் பொன்னிறக் கிரணங்களுடன் மேற்கில் மறைந்தான்.

சூரியாஸ்தமன சமயம் வானத்தில் காணப்படும் வித விதமான வர்ணவிசித்திரங்களும், யமுனைக் கரையின் அழகும், தூரத்தில் பசுக்கள் பொழுது சாய்ந்து வீட்டிற்குத் திரும்புவதுமான காட்சி மஹேந்திரனைக் கவியுலகில் கொண்டுபோய்ச் சேர்த்தது.

நதியின்நீர் சலனமற்று ஓடிக் கறுப்பாகக் காணப்பட்டது. சாயந்திரப்பொழுதும் கழிந்து இருட்ட ஆரம்பித்தது. அந்தகாரத்தில் தனியே உட்கார்ந்திருந்த அவனுக்கு அச்சமயம் தான் படித்த ஒரு காவியத்தின் பகுதி நினைவிற்கு வந்தது. அதில் ஆற்றின் அக்கரையிலிருக்கும் காதலி இக்கரையிலிருக்கும் காதலனைச் சேர விரும்புகிறாள். "ஆற்றைக் கடக்க உதவமாட்டாயா?" என அவள் கூறுகிறாள்.

மெய்ம்மறந்து மோஹக்கடலில் ஆழ்ந்திருக்கும் மஹேந்திரனுக்கு இது கற்பனையன்று உண்மையெனவே தோன்றியது. எதிர்க்கரையிலிருக்கும் உருவம் அவனுக்கு ஸ்பஷ்டமாய்த் தெரிவதுபோல் இருந்தது. அவள் கூவும் தொனி அவன் செவியில் ஒலித்தது. விரகவேதனையால் தவிக்கும் அந்த யௌவன சுந்தரி விநோதினியாகவே அவன் மனக்கண்முன் தோற்றமளித்தாள். 'ஜனஸஞ்சாரமற்ற யமுனைக்கரையில் நின்று நதியைக் கடக்கத் தோணியை எதிர்பார்த்து எவ்வளவு நேரமாய்க் காத்திருக்கிறாளோ; கூவித் தவிக்கிறாளோ? அவ்விருளில் அவள் எந்நேரம்வரை

காத்திருப்பாள்?' என்னும் நினைவுகள் மஹேந்திரனைத் தட்டியெழுப்பின.

நிலவொளியில் யமுனைக் கரையின் சோலை தேவ லோகத்தை ஒத்திருந்தது. மனிதர்கள் வாழும் இவ்வுல கிற்கும் அதற்கும் சம்பந்தமோ தாரதம்மியமோ சிறிது மில்லை. இவ்விசித்திர உலகில் விநோதினியும் மஹேந்திர னுமே காணப்பட்டனர்.

மன்மதன் தனது பாணத்தை மஹேந்திரன்மீது தீவிரமாய்ப் பிரயோகித்தான். இச்சமயம் விநோதினி தன்னை ஏற்கமாட்டாள், தன் மனோரதத்தைப் பூரணமாய் நிறைவேற்றமாட்டாள் என்று அவனால் கற்பனை கூடச் செய்ய முடியவில்லை. எழுந்து வேகமாய் வீட்டை நோக்கி நடந்தான் அவன்.

ஜன்னல்களின் வழியாய் அறைமுழுதும் நிலவொளி வீசியது. தூய வெள்ளை விரிப்பு விரித்த படுக்கையில் விநோதினி படுத்திருந்தாள். அறைமுழுதும் கம்மென நறுமணம் வீசியது. தோட்டத்திலிருந்த புஷ்பங்களைப் பறித்துச் சிறு மாலைகளாகக் கட்டி அவள் தன் கொண்டை யிலும் கழுத்திலும் இடுப்பிலும் கூட அணிந்திருந்த காட்சி அவளைத் தேவதைபோலெனச் சந்தேகிக்கச் செய் தது.

றந்திரனின் மோஹவெறி எல்லையைக் கடந்தது. தழுதழுத்த குரலில் அவன், "விநோதினி, யமுனைக் கரை யில் நான் உன்னை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். ஆனால், நீ இங்கே எனக்காகக் காத்திருப்பதைச் சந்திரிகை நினை வூட்டியது. அதனால்தான் ஓடிவந்தேன்" எனச் சொல்லிக் கொண்டே படுக்கையண்டை சென்றான்.

விநோதினி திடுக்கிட்டெழுந்தாள். கையை நீட்டி, "போ வெளியே! நீ எனது படுக்கையருகில் வரக்கூடாது" என்று கோபத்துடன் கர்ஜித்தாள்.

புயலால் அடித்துக்கொண்டு போகப்பட்ட கப்பல் சட்டெனக் கரை தட்டி நின்றதுபோல் மஹேந்திரன் ஸ்தம்பித்து நின்றுவிட்டான். வெகுநேரம்வரை பேச நாவெழவில்லை. தன்னை அணுகாது மஹேந்திரனைத் தடுக்கும் நோக்கத்துடன் விநோதினி படுக்கையிலிருந்து எட்ட எழுந்துபோய் நின்றாள்.

**மஹேந்:** பின் யாரை எதிர்பார்த்து இவ்வளவு அலங்காரமும் சிங்காரமும் செய்துகொண்டிருக்கிறாய்?

விநோதினி தனது மார்பைச் சுட்டிக்காட்டி, "நான் யாரை எதிர்பார்த்து அலங்கரித்துக் கொண்டிருக்கிறேனே அவர் எனது உள்ளத்தில் வசிக்கிறார்" என்றாள்.

**மஹேந்:** அது யார்? விஹாரியா?

**விநோ:** அப்பெயரை உச்சரிக்கவும் நீ யோக்கியதை யற்றவன்.

**மஹேந்:** அவனைத் தேடித்தான் இவ்வளவு நாட்கள் வரை சுற்றினையோ?

**விநோ:** ஆமாம், அவருக்காகத்தான்.

**மஹேந்:** அவன் இருக்குமிடம் தெரியுமோ உனக்கு?

**விநோ:** தெரியாவிட்டாலென்ன? கண்டுபிடிக்கிறேன்.

**மஹேந்:** கண்டுபிடிக்க விட்டேனானல் பார்!

**விநோ:** கண்டுபிடிக்க விடாது வேண்டுமானால் தடுக்கலாம். ஆனல் எனது உள்ளத்திலிருந்து அவரை அகற்ற உன்னால் ஒரு நாளும் முடியாது.

மஹேந்திரனால் சகிக்க முடியவில்லை. கோபாக்கினி பொங்கி யெழ, "கத்தியால் உனது இருதயத்தை அறுத்து அவனை வெளியேற்றுகிறேன்" என்று கர்ஜித்தான்.

விநோதினி அவனுடைய கோபத்திற்குச் சிறிதும் அஞ்சாது, "உனது அன்பைக்காட்டிலும் உன் வாள் என் உள்ளத்தில் சுலபமாய்ப் பிரவேசிக்கும்" என்றாள்.

மஹேந்: துணையற்று என்னிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கும் உனக்கு என்னிடம் பயமேயில்லையா?

விநோ: எனக்குத் துணை நீதான். நீ உன்னைவிட என்னை இன்னும் அதிக ஜாக்கிரதையாய்க் காத்து ரட்சிப் பாய்.

மஹேந்: என்மீது இவ்வளவு நம்பிக்கையாவது பாக்கி யிருக்கிறதே!

விநோ: இது இருந்திராவிடில் நான் எப்பொழுதோ தற்கொலை செய்துகொண்டு இறந்திருக்க வேண்டும்; வீட்டை விட்டு உன்னுடன் வெளியேறி யிருப்பேனா?

மஹேந்: ஐயோ! நீ ஏன் இறக்கவில்லை? நம்பிக்கை யென்னும் பாசத்தால் என்னைக் கட்டி ஊரூராய் இழுத்து ஏன் கொல்லுகிறாய்? நீ மரித்திருந்தால் எவ்வளவு மங்கள கரமாக இருந்திருக்கும்! நீயே யோசித்துப் பார்.

விநோ: இதை நானும் அறியாமலில்லை. ஆனால் விஹாரியைத் தரிசிக்கவேண்டுமென்ற எனது ஆவல் நிறைவேறினாலொழிய எனது பிராணன் நீங்காது.

மஹேந்: நீ இறந்தொழியும்வரை என் மனத்தீயும் அவியாது; எனக்கு விடுதலையும் இல்லை. கடவுளிடம் எனது ஒரே பிரார்த்தனை, இனி நீ சாக வேண்டுமென்பது தான். நானும் உன்னை அடையவில்லை. விஹாரியும் உன்னை

அடையக்கூடாது! நீ ஒழிந்துபோ! எனக்கும் விடுதலை அளி! என் தாயும் மனைவியும் பெருக்கும் கண்ணீர் என்னை நெருப்பெனச் சுடுகிறது. நீ இவ்வுலகிலிருந்து மடிந்து மறைந்தாலொழிய நான் அவர்கள் கண்ணீரைத் துடைத்துத் தேற்றும் சமயம் வாய்க்காது.

இவற்றைச் சொல்லி முடித்து மஹேந்திரன் சரேலென வெளியிற் சென்றுவிட்டான். வெறும் வெளியை நோக்கி வெகு நேரம்வரை விநோதினி அசைவற்று நின்றிருந்தாள். தான் விரித்த மாய வலையைச் சின்னபின்னமாகத் துண்டித்தெறிந்தாள். யாவும் சூன்யமாகவும் சாரமற்றும் காணப்பட்டன அவளுக்கு.

மஹேந்திரனின் சுகவாழ்க்கையை வேரோடு களைந்தெறிந்து அவனைத் தன் வசத்தில் இழுத்ததை நினைத்து மனம் விண்டாள். 'பிறரை வசப்படுத்தும் சக்தி எனக்குப் பூரணமாய் இருந்தும் விஹாரிமாத்திரம் ஏன் என் வசமாகவில்லை? நான் எழுப்பிய பிரளயத்தினால் அடைந்த பயன் என்ன? இதை எப்படி அடக்குவது?' என்னும் எண்ணங்கள் அவள் உள்ளத்தை வாள்போல் அறுத்தன.

எந்தப் பூவினால் தன்னை அலங்கரித்துக் கொண்டாளோ அவற்றின்மீது மஹேந்திரனின் பாபதிருஷ்டி விழுந்துவிட்டதென நினைத்து அவற்றைப் பிய்த்து அறுத்து எறிந்தாள். தன் முயற்சி, சக்தி, வாழ்க்கை, தன்னைச் சுற்றியிருக்கும் சேதன அசேதனங்கள் சகலமும் வியர்த்தம், வீண் என்று அவளுக்குத் தோன்றியது.

'இவ்வளவும் வியர்த்தமாகத் தோன்றினாலும் உலகில் நடக்கவேண்டியவை நியமப்படி நடந்துகொண்டேதான் இருக்கின்றன. அவை அணுவளவும் மாறப்போவதுமில்லை,

நிற்கப்போவதுமில்லை. விஹாரி பாபுவும் அதேபிரகாரம் நிச்சிந்தையாய்ச் சிறுவன் வஸந்தனுக்குத் தம் அறையில் பாடம் சொல்லிக்கொடுத்துக் கொண்டிருப்பார்' என்றெல்லாம் யோசித்தாள்.

பிறகு அவள் மனமுடைந்து கண்ணீர் பெருக்கினாள்.

---

## ஐம்பத்தோராம் அத்தியாயம்

மஹேந்திரன் இரவு முழுவதும் தூங்கவில்லை. காலை எட்டு மணிக்கு எழுந்திருக்கும்போது சோர்வுற்றிருந்தான். முன்தினம் இரவு நடந்த சம்பவங்களால் மனம் குழம்பிக்கிடந்தது. வாழ்க்கையே சாரமற்றுக் காணப்பட்டது. 'நாம் ஏன் இப்படி வீட்டை விட்டுக் கடமையைப் புறக்கணித்து மனச்சாந்தியை இழக்கும்படியான காரியம் செய்தோம்?' என வருந்தினான். விநோதினியின் மீதுள்ள மோஹபாசம் அறுபட்டது. தன்னை வேண்டாத ஒரு ஸ்திரீயின் பின் அலைந்து சுயமரியாதையை இழந்து தவிக்கும் தனது மூடமதியை நினைத்துத் தன்னையே வெறுத்தான்.

பெரும் பூகம்பம் ஏற்பட்டு அடங்கிவிட்டது. அதனால் விளைந்த அனர்த்தத்தைத் திரும்பிப் பார்க்கவும் அவன் அஞ்சினான். அது அவனுக்குச் சந்தோஷத்தையோ சாந்தியையோ அளிப்பதாயில்லை. 'எந்தச் சனீசுவரனால் தூண்டப்பட்டு நாம் இம்மாதிரி மதிகெட்ட செய்கையில் இறங்கினோம்?' என்று ஆச்சரியமும் அருவருப்பும் கொண்டான்.

இதுவரை விநோதினியைச் சுற்றிக் காணப்பட்ட நவீனம், லாவண்யம், சௌந்தரியம் யாவும் மறைந்து,

அவள் ஒரு சாதாரண மாதாகவே இன்று அவன மனத்திற்குத் தோன்றினாள். அவளிடம் எதுவும் விசேஷமாகவோ, அபூர்வமாகவோ இருப்பதாகத் தெரியவில்லை.

இம்மோஹ சக்கரத்திலிருந்து விடுபட்டு வீட்டிற்குத் திரும்பிச் சென்றுவிடவேண்டும் எனத் தீர்மானித்தான். தனக்கு உரிய சுகம், சாந்தி, அன்பு இவற்றை எவ்விடத்தில் பெற்றிருந்தும் விட்டு வந்தானே, அவ்விடத்திற்கே திரும்பிச் செல்லத் தீர்மானித்தான். உலகில் ஜனங்கள் சாசுவதமான உண்மைச் சுகத்தின் அருமையை உணராது, சஞ்சல கபடமாயையை உண்மையென நம்பி மனச்சாந்தியிழந்து ஏமாறுகின்றனர். மஹேந்திரனின் நிலையும் அப்படியே இருந்தது.

"இன்றே நான் வீட்டிற்குத் திரும்புகிறேன். விநோதினி எங்கே இருக்க விரும்புகிறாளோ அங்கேயே அவள் இருக்குமாறு ஏற்பாடு செய்து அவளது சம்பந்தத்தை அறுத்துக்கொண்டு விடுதலை பெறுகிறேன்" என்று தன்னுள்ளேயே கூறிக்கொண்டான்.

இப்படி நினைக்கும்போதே அவனுக்கு இதுவரையில்லாத ஓர் ஆனந்த உணர்ச்சி உண்டாகியது. இதுவரை அவன் தனது மனச்சாட்சிக்கு விரோதமாக நடந்து தன்னையே ஏமாற்றி வந்தான். இன்று சுயஅறிவும் மனச்சாட்சியும் அவனை வென்றன. அவற்றின் ஆக்ஞைப்படி அவன் நடக்கச் சித்தமானான்.

எழுந்து பல் தேய்த்துப் பிறகு விநோதினியைக் காணச் சென்றான். அவள் இருக்கும் அறைக்கதவு தாழிடப்பட்டிருந்தது. "இன்னும் தூங்குகிறாயா?" என்று கத்திக்கொண்டே கதவைத் தட்டினான்.

"இல்லை! நீ இந்த க்ஷணம் இதைவிட்டுச் செல்" என்று உள்ளேயிருந்து பதில் கிடைத்தது.

மஹேந்: உன்னோடு சில விசேஷ வார்த்தைகள் சொல்லவேண்டியிருக்கிறது. நான் அதிக நேரம் தங்கப் போவதில்லை.

விநோ: நான் ஒரு வார்த்தையும் கேட்க விரும்ப வில்லை. என்னைத் தொந்தரவு செய்யாதே! என்னைத் தனித்திருக்கவிட்டுப் போ!

வேறு சமயமாயிருந்தால் மஹேந்திரன் அவளைக் கதவைத் திறக்குமாறு மேன்மேலும் வற்புறுத்தி வேண்டியிருப்பான். இன்றோ அவன் மனம் வெறுப்புற்றது. 'என்னை இப்படி அவமானப்படுத்த இவளுக்கு இடங் கொடுத்தது என் தவறன்றோ? என்மீது அதிகாரம் செலுத்த இவளுக்கு உரிமை ஏது? நானே அதை இவளுக்கு அளித்து அகம்பாவமடையச் செய்தேன்' எனத் தன்னையே நொந்துகொண்டான். "இருக்கட்டும்! இப் பந்தத்தை இப்பொழுதே அறுத்தெறிந்து வெற்றிகொள் வேன்" எனக் கூறிக்கொண்டே அவ்விடத்தை விட்டு அகன்றான்.

சாப்பாடு முடிந்ததும் அவன் பாங்கிற்குச் சென்று பணம் பெற்றுக்கொண்டான். ஆசாவுக்கும் தன் தாய்க் கும் சில அருமையான வெகுமதிகள் வாங்க எண்ணிக் கடைத்தெருப் பக்கம் சென்றான்.

மறுபடியும் அறைக்கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டு விநோதினி சினமடைந்தாள். சிறிதுநேரம் வரை பேசாதிருந்தாள். பின்னும் பலமாய்க் கதவு தட்டப் படவே அவள் ஆத்திரத்துடன் கதவைத் தடாலெனத்

திறந்துகொண்டே, "என்னை ஏன் இப்படி அடிக்கடி வந்து துன்புறுத்துகிறாய்?" என இரைந்தாள்.

ஆனால் கதவைத் திறந்ததும் விஹாரி எதிரில் நிற்பதைக் கண்டாள்.

மஹேந்திரன் அங்கிருக்கிறானாவென்று விஹாரி சுற்றுமுற்றும் கவனித்தான். கட்டிலின்மீது படுக்கை விரித்தவாறு கிடந்தது. அதன்மேல் உலர்ந்த பூமாலைகள் சிதறிக்கிடந்தன. அந்தக்ஷணமே அவன் மனம் மாறியது. முதலிலேயே அவன் அவள்பேரில் கொண்ட சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. இங்கு வருமுன்பு அவள்பேரில் தான் கொண்ட சந்தேகம் தெய்வ வசத்தால் பொய்யாகாதாவென வேண்டிக்கொண்டே வந்தான். அவளைக் களங்கத்திலிருந்து விடுவித்துக் காப்பாற்றும் எண்ணங்கொண்டிருந்தான். ஆனால் எதிரில் கண்ட அலங்கோலப் படுக்கையும் சிதறிக் கிடக்கும் பூக்களும் இரக்கத்திற்குப் பதில் அவன் மனத்தில் வெறுப்பையே உண்டாக்கின.

உள்ளே நுழைந்தவன் சட்டெனப் பின் வாங்கி மஹேந்திரனைக் கூவியழைத்தான்.

தான் அடைந்த அவமானத்தையும் பொருட்படுத்தாது விநோதினி விஹாரி திரும்பிப்போகவிருந்ததைத் தடுத்து, "மஹேன் எங்கோ வெளியில் சென்றிருக்கிறான். நீங்கள் சற்று உட்கார்ந்து நான் சொல்வதைக் கேட்டுத்தான் போகவேண்டுமென்று நான் உங்கள் காலில் விழுந்து வேண்டிக் கொள்கிறேன்" என்றாள்.

அந்த அருவருக்கத்தக்க காட்சியைக் காணாது தூரச் சென்றுவிடவேண்டும், அவள் சொல்வதற்குச் செவி சாய்க்கக் கூடாது என விஹாரி நிச்சயித்துங்கூட, அவள்

இப்படிக் கெஞ்சிக் கேட்டுக் கொள்வதை உல்லங்கனம் செய்ய அவன் மனம் இடந்தரவில்லை. அப்படியே நின்று விட்டான்.

"நீங்கள் மாத்திரம் எனது கோரிக்கையைப் புறக் கணித்துச் செல்வீர்களானால் நான் நிச்சயமாய் உயிரை மாய்த்துக்கொண்டு விடுவேன்" என்றாள் விநோதினி.

விஹாரி: விநோதினி, என்னை ஏன் இப்படிப் பிணைத்து இழுக்கிறாய்? நான் என்ன பாவம்செய்தேன் உனக்கு? நான் உன் சுகதுக்கங்களில் குறுக்கிட்டது கூடக் கிடையாதே!

விநோ: என்மீது அதிகாரம் செலுத்த உங்களுக்கு எவ்வளவு உரிமையிருக்கிறதென நான் பன்முறை தெரிவித்தும் நீங்கள் இன்னும் அதை நம்பவில்லை. நீங்கள் எவ்வளவுதான் என்னைப் புறக்கணித்தாலும் நான் மறுபடியும் அதையே திருப்பிச் சொல்லுகிறேன். என்னை நீங்கள் காலால் உதைத்துத் தள்ளினாலும் அதே காலைப் பிடித்துக் கொண்டு நான் உங்களை . . . . . .

விஹாரி இடையே குறுக்கிட்டு, "அதெல்லாம் இப் பொழுது வேண்டாம். நாவினால் உச்சரிக்கவும் வேண்டாம். சொன்னாலும் என்னால் ஒன்றையும் நம்பமுடியாது" என்றான்.

விநோ: குறுகிய நோக்கமுடைய அற்ப மனிதர்களால் முடியாதுதான். ஆனால் நீங்கள் கட்டாயம் நம்புவீர்கள். அதனால்தான் நான் உங்களை உட்காரும்படி கேட்டுக் கொள்கிறேன்.

விஹாரி: நான் நம்பினாலென்ன, நம்பாவிட்டாலென்ன? அதனால் உனது வாழ்க்கை யென்னவோ மாறப் போவதில்லை!

விநோ: உங்கள் ஆதரவைப் பெறும் பாக்கியம் எனக்கு இல்லை. உங்கள் அருகில் வரவும் நான் யோக்கியதை யற்றவள். நான் என்றும் தூரமே இருக்கவேண்டியவள். ஆனால் ஒரு சிறு உரிமையையே வேண்டுகிறேன். நான் எங்கிருந்தாலும் சரி; என் பெயரை வெறுக்காது அன்புடன் ஞாபகப்படுத்திக் கொள்ளப் பிரார்த்திக்கிறேன். ஒரு சமயம் நீங்கள் என்னை மதித்து என்னிடம் சிறிது சிரத்தையும் கொண்டீர்கள். அதையே நான் ஆயுளுள்ளளவும் மனத்தில் வைத்துப் போற்றுவேன். இதே காரணத்தினால் இன்று உங்களிடம் சில வார்த்தைகள் சொல்ல நான் துணிந்தேன். நீங்கள் சற்றுப் பொறுமையுடன் உட்கார்ந்து கேட்கவேண்டுமென்று கோருகிறேன்.

"இல்லை, நான் போகவேண்டும்" எனக் கூறி விஹாரி அப்புறம் செல்ல முயன்றான்.

விநோ: நீங்கள் நினைப்பதுபோல் இது களங்கமடைந்த வீடல்ல. இது நீங்கள் வசித்த அறை. இதைப் புனிதமாய் உங்களுக்காகவே வைத்திருக்கிறேன். இங்கு வாடிக் கிடக்கும் புஷ்பங்கள் உங்களைப் பூஜிக்கவே கொண்டு வந்தவை. இந்த அறையிலேயே நீங்கள் உட்காரவேண்டும்.

விஹாரியின் மனத்தில் உணர்ச்சி பெருகியது. அவள் சொல்லியவாறே கட்டிலில் உட்கார்ந்தான். விநோதினி அவன் காலடியில் உட்காரவே அவன் திடுக்கிட்டு எழுந்திருக்கலானான். அதற்குள் அவள், "நீங்கள் உட்காருங்கள்; தயைசெய்து எழுந்திருக்கவேண்டாம். உங்கள் பாதத்தருகில் உட்காரவும் நான் தகுதியற்றவள்தான். ஆனாலும் என்மீது தயை கூர்ந்து எனக்கு இந்த ஸ்தா

னத்தை அளியுங்கள். நான் கண்காணுது தூரச்சென்று பிறகும் இதை மனத்தில் வைத்துப் பூஜிப்பேன்" என்று மனமிளகக் கூறினுள்.

சற்று நேரம்வரை அவள் ஒன்றும் பேசாதிருந்தாள். பிறகு திடீரென, "நீங்கள் சாப்பிட்டாயிற்று?" எனக் கேட்டாள்.

விஹாரி: ஸ்டேஷனிலேயே சாப்பிட்டுத்தான் வந்தேன்.

விநோ: உங்களுக்கு நான் எனது கிராமத்திலிருந்து ஒரு கடிதம் எழுதினேனே; அது உங்களுக்குக் கிடைத்ததும் ஏன் பதிலொன்றும் எழுதாது மஹேந்திரனிடம் திருப்பிக் கொடுத்தனுப்பிவிட்டீர்கள்?

விஹாரி: கடிதமா? எனக்கொன்றும் கிடைக்கவில்லையே!

விநோ: அப்படியானுல் நீங்கள் மஹேந்திரனைக் கல்கத்தாவில் சந்திக்கவேயில்லையா?

விஹாரி: உன்னைக் கிராமத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துத் திரும்பிய மறுதினம் பார்த்தேன். அதற்குப் பிறகு நான் யாத்திரையாகக் கிளம்பிவிட்டேன். அவனைச் சந்திக்கவில்லை.

விநோ: ஊரை விட்டுப் புறப்படுமுன் எனது கடிதத்தைப் பார்த்துவிட்டு மஹேந்திரனிடம் கொடுத்தனுப்பவில்லையா?

விஹாரி: நான் அப்படிச் செய்யவேயில்லை.

விநோதினி இதைக்கேட்டுப் பெருமூச்சுவிட்டாள்; "எனக்கு இப்பொழுது உண்மை விளங்கிவிட்டது. இனி என் கதையைச் சற்றுக் கேளுங்கள். அதை நீங்கள்

நம்பினால் எனது பாக்கியமென்று நினைப்பேன். நம்பா விடின் அதற்காக நான் உங்களைக் குறைகூறப் போவ தில்லை. நான் சொல்வதை நம்புவது கடினமே" என்றாள் அவள்.

விஹாரி மனமிரங்கினான். அவனுக்கு அவள்மீது தயை பிறந்தது. அவள் தன்னிடம் காட்டும் பக்தியைப் புறக்கணித்து உதறியெறிய அவனால் முடியாது போயிற்று. "விநோதினி, நீ ஒன்றுமே கூற வேண்டாம். ஒன்றும் கூறாமலே உன்னை நான் பூரணமாய் நம்புகிறேன். உன்மீது எனக்கு வெறுப்பில்லை" என்றான்.

இதைக் கேட்டதும், உணர்ச்சி பொங்கவே, விநோ தினியின் கண்களில் நீர் ததும்பியது. அவன் பாததூளி யைப் பக்தியுடன் தனது சிரசில் அணிந்தாள். பிறகு அவனை நோக்கி, "என் கதையைச் சொல்லாவிடின் என் மனக்குறை நீங்காது. சற்றுப் பொறுமையுடன் கேளுங் கள்: உங்களுடைய ஆக்ஞையைச் சிரமேல் தாங்கி நான் எனது கிராமத்தில் வசிக்கச் சென்றேன். நீங்கள் எனக்கு ஒரு கடிதங்கூட எழுதவில்லை. ஆனாலும் உங்கள் அன் பிற்குப் பதிலாக உங்கள் ஆக்ஞையையே எனது பாக் கியமாக நினைத்துக் கிராமத்தாரின் ஏளனம், நிந்தை யாவற் றையும் சகித்துக் காலந்தள்ளி யிருப்பேன். ஆனால் பகவா னுக்கு அதுவும் பொறுக்கவில்லை போலும். நான் செய்த பாபம் என்னை அங்கும் பின்தொடர்ந்தது. மஹேந்திரன் என்னை அங்கேயும் துரத்திவந்து ஊரார் முன்னிலையில் அவமானப் படுகுழியில் தள்ளிவைத்தான். அதன் பின்பு அக்கிராமத்தில் எனக்கு இருக்க இடமேது? மறுபடியும் உங்களுடைய உத்தரவைப் பெறவேண்டி உங்களைத் தேடி னேன். உங்களை எங்கும் காணவில்லை. இச்சமயந்தான்

மஹேந்திரன், நான் உங்களுக்கு எழுதிய கடிதத்தை என்னிடம் கொண்டு வந்து கொடுத்து ஏமாற்றியது. என்னை முற்றிலும் துறந்து ஒழிக்க நீங்கள் தீர்மானித்து விட்டதாக நினைத்தேன். நான் இதுவரையில் படுகுழியில் வீழ்ந்திருப்பேன். ஆனால் உங்களுடைய பிரபாவம் என்னை நாசமடையாது தடுத்தது. உங்களை நான் மனத்தில் இருத்திப் பூஜித்ததால்தான் இன்றுவரையில் புனிதமாய்க் களங்கமற்றுப் பிழைத்திருக்க முடிந்தது. உங்களுக்குக் கடின இதயமெனக் கண்டும் அதன் மஹிமையால் என் உள்ளமும் வயிரம் போல் திடம்பெற்றது. ஸ்வாமி, உங்கள் பாதத்தைத் தொட்டுக் கூறுகிறேன்: நான் இன்றளவும் எனது பரிசுத்தத்தன்மையை இழக்கவில்லை" என்று கூறி முடித்தாள்.

கொஞ்சநேரம்வரை இருவரும் பேசவில்லை. சாயந்திரமாயிற்று. மஹேந்திரன் வீட்டிற்குத் திரும்பியதும் விஹாரியைப் பார்க்கவே, வியப்புற்றுத் திகைத்தான். விநோதினியை அவன் விரும்பவில்லை யென்றாலும் விஹாரியின் காலடியில் அவள் உட்கார்ந்திருப்பதைக் காண அவன் அவள்மீது ஆவேசங்கொண்டான். அவளால் புறக்கணிக்கப்பட்ட அவனது கர்வம் குலைந்தது. 'இவர்கள் இருவருக்கும் இடையே கடிதப் போக்குவரத்தினால்தான் இச்சந்திப்பு ஏற்பட்டிருக்கிறது' என்று அவன் உறுதியாய் நம்பினான். இதுவரை அலட்சியமாயிருந்த விஹாரியே அவளைத் தேடிவந்திருக்கும்போது, இனி அவளைத் தடுக்க யாரால் முடியுமென்று நினைத்தான்.

தன்னால் விநோதினியை விட்டுவிட முடியும்; ஆனால் அவளைப் பிறர் கையில் ஒப்பிக்க அவன் மனம் சம்மதிக்கவில்லை.

அவன் ஏளனமாக விநோதினியைப் பார்த்து, "பேஷ்! அரங்க மேடையிலிருந்து மஹேந்திரன் சென்றதும் விஹாரிபாபுவின் பிரவேசம் போலும்! காட்சி நன்றாயிருக்கிறது! கையைத் தட்டிப் புகழவேண்டுமெனத் தோன்றுகிறது. இதுதான் கடைசி அங்கமென நினைக்கிறேன். ஏனெனில் இதற்குமேல் நடித்தால் நன்றாயிராது!" என்றான்.

விநோதினியின் முகம் சிவந்தது. அவள் விஹாரியைத் திரும்பிப் பார்த்தாள்.

விஹாரி கட்டிலிலிருந்து உடனே எழுந்திருந்து, "மஹேன், அற்பத்தனமாய்ப் பேசி விநோதினியை அவமானப்படுத்தாதே. பகுத்தறிவை உபயோகித்து நீ புத்திசாலித்தனமாய் நடந்துகொள்ளாவிடில் உன்னைக் கண்டிக்க எனக்கு உரிமையுண்டு" என்றான்.

மஹேந்திரன் ஏளனமாய்ச் சிரித்துக்கொண்டு, "இதற்குள் உனக்கு உரிமை வேறு ஏற்பட்டுவிட்டதா? ரொம்ப சரி! இனி உன் பெயரை மாற்றி 'விநோத விஹாரி' என்று வைத்துவிடலாம்!" என்றான்.

பரிகாசம் எல்லைகடந்து போவதைக் கண்டு விஹாரி மஹேந்திரனின் கரங்களை இறுகப் பிடித்துக்கொண்டு, "மஹேன், விநோதினியை நான் விவாகம் செய்துகொள்ளப் போகிறேன். இதை அறிந்துகொண்ட பிறகாவது இனி நாவை அடக்கி மரியாதையாய்ப் பேசு" என்றான்.

மஹேந்திரன் கப்சிப்பெனத் திகைத்து அப்படியே நின்றுவிட்டான்; விநோதினியும் திடுக்கிட்டுப் போனாள்.

விஹாரி மஹேந்திரனிடம் மேலும், "உன்னிடம் இன்னொரு சங்கதி தெரிவிக்கவேண்டியிருக்கிறது. உன்

தாய் மரணவஸ்தையில் இருக்கிருள். இன்று இரவே நாம் போகவேண்டும். விநோதினியும் என்கூட வரட்டும்'' என்ருன்.

பதிலொன்றும் பேசாது மஹேந்திரன் அவ்விடத்தை விட்டு அகன்ருன். உடனே விநோதினி விஹாரியை நோக்கி, ''என்ன வார்த்தை சொன்னீர்கள்? இது என்ன வேடிக்கையா?'' என்ருள்.

விஹாரி: நான் உண்மையையே சொன்னேன். உன்னை நான் விவாகம் செய்துகொள்ளுகிறேன்.

விநோ: இப்பாபியை ரக்ஷிப்பதற்காகவா?

விஹாரி: இல்லை. நான் உன்னைக் காதலிக்கிறேன்.

விநோ: போதும். நான் என் ஆயுளில் பெறவேண்டிய அனைத்தையும் நீங்கள் கூறிய இந்த ஒரு வார்த்தையினலேயே அடையப் பெற்றேன். நான் வேண்டுவது இனி ஒன்றுமில்லை. இந்த வெகுமானம் உங்களைக் கணவராகப் பெற்ருலும் எனக்கு நிலைக்காது; சாஸ்திரமும் இதை ஒப்பாது?

விஹாரி: ஏன் ஒப்பாது?

விநோ: நான் விதவை; பழிக்கப்பட்டவள்! என்னை மணப்பதனுல் சமூகப் பழிக்கு நீங்களும் உள்ளாவதை நான் ஒருகாலும் சம்மதியேன். சீ! இதை நினைக்கவும் எனக்கு லஜ்ஜையா யிருக்கிறது. இதை நீங்கள் நாவினுல் உச்சரிக்கவும் கூடாது.

விஹாரி: என்னை நீ கைவிட்டு விடுவாயா?

விநோ: கைவிடும் உரிமை எனக்கு இல்லை. மறைவிலிருந்து பரோபகார சிந்தையுடன் நீங்கள் உலகிற்கெல்லாம் உதவி புரிவது எனக்குத் தெரியும். அந்த

ஸத்காரியத்தில் நானும் சிறிது பங்கெடுத்துக்கொள்ள அனுமதித்தால் அதையே நான் பெரிய பாக்கியமென நினைத்து உங்களது அடிமையென ஊழியம் புரிவேன். அதைவிட்டு விதவையை மணப்பதாம்! பெருந்தன்மை படைத்த உங்களால் எதுவும் கூடும். ஆனால் நான் இதற்கு உடன்பட்டேனானால், உங்களைச் சமூகப் பழிப்பிற்கு ஆளாக்கினேனாகில், நான் வாழ்வில் தலை நிமிர்ந்து பிறர் முகத்தில் விழிக்கவுந் தகுதியற்றவளாகி விடுவேன்.

விஹாரி: ஆனாலும், நான் உன்னை நேசிக்கிறேன்.

விநோதினி, "அந்த அன்பின் உரிமையினால் நான் இன்று இதைச் செய்யத் துணிகிறேன்" என்று கூறி அவன் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து அவற்றை முத்தமிட்டாள். "இந்த ஜன்மத்தில் நான் உங்களை அடையப் பாக்கியம் பெறவில்லை. அடுத்த ஜன்மத்திலாவது இப்பேறு கிடைக்கத் தபசு புரிகிறேன். இவ்வாழ்வில் நானும் வேண்டிய துன்பத்தை அடைந்தேன். பிறரையும் துன்பத்திற்கு ஆளாக்கினேன். அதனால் அடைந்த பலனை நான் என்றென்றும் மறக்கமாட்டேன். நீங்கள் உத்தம புருஷர். உங்கள் மஹிமையால் நானும் இன்று கடைதேறினேன்" என்றாள்.

விஹாரி பேசாது உட்கார்ந்திருந்தான். கைகளைக் கூப்பிய வண்ணம் விநோதினி, "மேலும் இந்தத் தவற்றை இழைக்கவேண்டாம். என்னை மணம் செய்துகொள்வதனால் நீங்கள் சுகத்தை அடையமுடியாது. இதனால் நீங்களும் கௌரவம் இழந்து நானும் இழக்கவேண்டி நேரும். நீங்கள் என்றும் நிச்சலமாயும் சந்தோஷமுடையவராயும் விளங்குகிறீர்கள். இனியும் அவ்விதமே இருங்

கள். நான் தூரவிருந்து உங்கள் சேவையைப் புரிகிறேன். நீங்கள் சந்தோஷமாயிருங்கள், சுகமாயிருங்கள்!" எனக் கூறினள்.

---

## ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்

மஹேந்திரன் தன் தாயின் அறைக்குள் நுழையப் போனன். அதற்குள் ஆசா அங்கு வந்து, "அங்கே இப்பொழுது செல்லவேண்டாம்" என்றாள்.

மஹேந்: ஏன்?

ஆசா: திடீரென எதிர்பாராத சந்தோஷமோ துக்கமோ ஏற்படுவது அம்மாவின் தேகஸ்திதிக்கு ஒத்த தல்ல என்று டாக்டர் சொல்லியிருக்கிறார்.

மஹேந்: நான் அவள் அறியாவண்ணம் மெள்ளத் தலைமாட்டில் நின்று சற்றுப் பார்த்துவிட்டு வந்து விடுகிறேன்.

ஆசா: சிறு சப்தத்திலும் அம்மா எழுந்து விடுகிறார். நீங்கள் உள்ளே நுழையும்போதே அவர் பார்த்து விடக்கூடும்.

மஹேந்: ஆனல் நான் இப்பொழுது என்ன செய்ய வேண்டும்?

ஆசா: முதலில் விஹாரிபாபு வந்து பார்க்கட்டும். அவர் எப்படிச் சொல்லுகிறாரோ அப்படிச் செய்யலாம்.

அவள் அவ்விதம் சொல்லி முடிப்பதற்குள் விஹாரி வந்து சேர்ந்தான்.



*தாயின் பாதங்களில் தலையை வைத்து நிமிராது படுத்திருந்தான் அவன்.*

பக்கம் 340.

"என்னை அழைத்தாயா என்ன? அம்மா உடம்பு சற்றுக் குணந்தானே?" என்று அவன் ஆசாவைக் கேட்டான்.

அவனைக் கண்டதும் ஆசாவுக்கு மனத்தில் தெம்பு ஏற்பட்டது. "நீங்கள் போனதுமுதல் உங்களைப்பற்றியே அம்மா கேட்டுக்கொண்டிருக்கிறார். ஏதோ முக்கியமான வேலையின் நிமித்தம் சென்றிருக்கிறீர்கள்; இரண்டு மூன்று தினங்களில் திரும்பி வந்துவிடுவீர்களென்று சொன்னோம். நேற்று உங்கள் தந்தி கிடைத்ததும் இன்று நீங்கள் வரப் போவதைத் தெரிவித்தோம். இதைக் கேட்டதும் உங்களுக்கு இன்று விருந்து தயாரிக்கச் சொல்லியிருக்கிறார். உங்களுக்கு மிகவும் இஷ்டமான பதார்த்தங்களையே சமைக்கச் சொல்லியிருக்கிறார். தம் எதிரிலேயே, உங்களுக்குப் போஜனம் செய்விக்க வேண்டுமாம்" என்று அவனிடம் ஆசா கூறினாள்.

கண்ணீர் ததும்ப விஹாரி, "அம்மா எப்படியிருக்கிறாள்?" என்று கேட்டான்.

ஆசா: நீங்களே உள்ளே சென்று சற்றுப் பாருங்கள். எனக்கென்னவோ வியாதி முற்றி வருவதாகவே தெரிகிறது.

விஹாரி உள்ளே சென்றான். இவற்றையெல்லாம் பார்த்து மஹேந்திரன் ஆச்சரியத்தில் மூழ்கி வெளியே நின்றான். 'ஆசா ஆயாசமின்றிக் குடும்பப் பொறுப்பை உணர்ந்து சகலமும் தானே நின்று நடத்துகிறாள். சிறிதும் சங்கோசமோ பயமோவின்றி என்னை உள்ளே போகாதவாறு தடுத்துவிட்டாள். அவள் முன்பு நான் எவ்வளவு சக்தியற்றுப் போய்விட்டேன்!' என்று அவன் சிந்தித்தான். அபராதியைப் போல் அவன் இன்று தாயின்

அறையினுள்கூட நுழைய அதிகாரமின்றி வெளியில் நின்றிருந்தான்.

விஹாரியுடன் ஆசா சிறிதும் தயக்கமின்றி ஸகஜமாய்ப் பேசுவது மஹேந்திரனுக்குப் பின்னும் ஆச்சரியத்தை விளைவித்தது. என்ன ஆச்சரியம்! எல்லோரும் விஹாரியினுடைய ஆலோசனையைத்தான் நாடுகின்றனர்! எல்லோரையும் காத்து ரட்சிப்பவன் அவன்! எங்கும் அவன்தான்! அவன் சொற்படியே எல்லாம் நடக்கின்றன. தான் வீட்டைவிட்டுப் போனபோது இருந்த நிலையே வேறு. இப்பொழுது தான் காண்பதே வேறு என்பதை மஹேந்திரன் கண்டான்.

விஹாரியைக் கண்டதுமே ராஜலக்ஷ்மி அன்பும் ஆதரவுமாய், "விஹாரி, திரும்பிவந்தாயா? போன காரியமெல்லாம் முடிந்ததா?" என்றாள்.

விஹாரி, "போன காரியமெல்லாம் மிகவும் சந்தோஷகரமாய் முடிந்தது. இனி எனக்கு ஒரு கவலையுமில்லை" எனக் கூறிக் கதவுப்புறம் நோக்கினான்.

ராஜலக்ஷ்மி: இன்று ஆசா உனக்காகத் தானே சமைத்திருக்கிறாள்? நான் எதிரிலிருந்து உனக்குச் சாப்பாடு செய்விக்கப் போகிறேன். டாக்டர் இவையெல்லாம் கூடாதென்றார். ஆனால் இனி ஏன் என்னைத் தடுக்க வேண்டும்? இறப்பதற்குமுன் ஒரு முறை நீங்கள் போஜனம் செய்வதை நான் கண்ணாரக் கண்டு களிக்கக்கூடாதா என்ன?

விஹாரி: டாக்டர் தடுப்பதற்குக் காரணமேயில்லை. உங்களுடைய மேற்பார்வையின்றிச் சமையல்தான் எப்படி நன்கு நடைபெறும்? சிறுவயதிலிருந்தே எங்களுக்கு

உங்கள் சமையல்தான் பிடிக்கும். மஹேந்திரனுக்கும் ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டு அலுத்துவிட்டது. என்றைக்கு வீட்டுச் சாப்பாட்டைக் காணுவோமென்று ஆவலாயிருக்கிறான். இன்று நாங்கள் இருவரும் முன்போல் சேர்ந்து போஜனத்திற்கு உட்கார்ந்து பந்தயம் போட்டுச் சாப்பிடப்போகிறோம். உங்கள் மருமகள் எப்படிப் பரிமாறுகிறாள், பார்க்கலாம்!

விஹாரி மஹேந்திரனை அழைத்து வந்திருப்பது ராஜலக்ஷ்மிக்குத் தெரியும். ஆனாலும் அப்பெயரைக் கேட்டமாத்திரத்தில் உணர்ச்சி பெருகி மூச்சே சிறிது நேரம் நின்றுவிட்டது போன்று இருந்தது அவளுக்கு.

சற்றுச் சமாளித்துக் கொள்ள அவளுக்கு அவகாசம் அளித்துப் பிறகு, "இந்த யாத்திரையினால் மஹேந்திரனின் தேகாரோக்கியங்கூட விருத்தி அடைந்திருக்கிறது. பிரயாணத்தினால் சற்றுக் களைப்படைந்திருக்கிறான். குளித்துச் சாப்பிட்டபிறகு அதுவும் சரியாகிவிடும்" என்றான் விஹாரி.

அப்பொழுதும் ராஜலக்ஷ்மி மஹேந்திரனைப்பற்றி ஒன்றும் பேசாதுபோகவே விஹாரி, "அம்மா, மஹேந்திரன் கதவிற்கு வெளிப்புறம் நின்றுகொண்டிருக்கிறான்; நீங்களாக அழைத்தாலொழிய அவன் உள்ளே வரத் தயங்குகிறான்" என்றான்.

ராஜலக்ஷ்மி பேசாது கதவுப்புறம் நோக்கினாள். விஹாரி, "மஹேன், உள்ளே வா" என்று அழைத்தான்.

மஹேந்திரன் மெள்ள அடியெடுத்து வைத்து உள்ளே வந்தான். எங்காவது உணர்ச்சி மேலிட்டுத் தாயின் சுவாசம் நின்றுவிடுமோவெனப் பயந்தான்.

உடனே அவனை ஏறெடுத்துப்பார்க்க ராஜலக்ஷ்மியின் மனம் துணியவில்லை. அவள் தேகஸ்திதியைக் கண்டு மஹேந்திரன் இடிவிழுந்தவன்போல் ஆனான்.

தாயின் பாதங்களில் தலையை வைத்து நிமிராது படுத்திருந்தான் அவன். ராஜலக்ஷ்மியின் தேகம் சிலிர்த்தது. நாடி வேகமாய் அடிக்க ஆரம்பித்தது.

பக்கத்திலிருந்த அன்னபூரணி, "அம்மா ராஜலக்ஷ்மி, அவனை எழுந்திருக்கச் சொல். நீ சொல்லாவிடின் அவன் எழுந்திருக்கமாட்டான்போல் இருக்கிறது" என்றாள்.

ராஜலக்ஷ்மி மிகவும் பிரயாசையுடன், "மஹேன், எழுந்திரு" என்றாள்.

வெகுநாட்களுக்குப் பிறகு அவன் பெயரை உச்சரிக்கவே கண்ணீர்த்தாரை பெருகியது. கண்ணீர் பெருக்கியதனால் மனத்தின் பாரமும் சற்றுக்குறைந்தது. மஹேந்திரன் கட்டிலிலிருந்து கீழே யிறங்கி அவள் பக்கத்தில் உட்கார்ந்தான். ராஜலக்ஷ்மி மிகப் பிரயாசையுடன் அவன் பக்கம் திரும்பிப் படுத்துக்கொண்டு அவன் தலைமயிரைக் கோதிக்கொண்டே அவன் நெற்றியில் முத்தமிட்டாள்.

மஹேந்திரன் தழுதழுத்த குரலில், "அம்மா, நான் உனக்கு மிகவும் அபராதம் செய்துவிட்டேன். என்னை மன்னிப்பாயா?" என்றான்.

ராஜலக்ஷ்மி சற்று மனவமைதி பெற்றுப் பிறகு, "அப்படிச் சொல்லாதே, மஹேன். உன்னை மன்னிக்காது என்றால் எப்படி இருக்கமுடியும்?" எனக் கூறி, "ஆசா" என்று கூப்பிட்டாள்.

சமையலறையில் ஏதோ வேலையாயிருந்த ஆசாவை அன்னபூரணி போய் அழைத்து வந்தாள்.

ராஜலக்ஷ்மி கட்டிலில் தன் பக்கத்தில் வந்து உட்காருமாறு ஆசாவுக்குச் சைகை செய்தாள். மஹேந்திரனையும் எழுந்து அவள் பக்கத்தில் உட்காரச் சொன்னாள். "உங்கள் இருவரையும் ஒன்று சேர்த்து உட்கார வைத்துப் பார்த்தாலே என் துக்கமெல்லாம் பறந்தோடிவிடும். ஆசா, என்னெதிரில் வெட்கம் ஏன்? மஹேந்திரன் செய்ததையெல்லாம் மறந்துவிடு. அவன் பக்கத்தில் வந்து உட்கார். நான் என் கண்ணாரக் கண்டு களிக்கிறேன்" என்று மொழிந்தாள்.

ஆசா நாணத்துடன் தலை கவிழ்ந்து மெள்ள மெள்ள மஹேந்திரன் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். ராஜலக்ஷ்மி அவள் கையில் மஹேந்திரன் கையை எடுத்து வைத்துப் பிடித்துக்கொள்ளச்சொல்லி, "மஹேன், இதோ என் ஆசாவை உன்னிடம் ஒப்படைத்துச் செல்கிறேன். அவளைப்போன்ற குணசாலியை அடைவது துர்லபம். (அன்னபூரணியை நோக்கி) அக்கா, இங்கே வா. இவர்களை ஆசீர்வதி. இவர்களுக்குச் சர்வ மங்களம் உண்டாகட்டும்!" என்று ஆசீர்வதித்தாள்.

தம்பதிகள் இருவரும் கண்களில் நீர் ததும்ப அன்னபூரணியையும் நமஸ்கரித்தனர். அவளும் அவர்கள் நெற்றியில் முத்தமிட்டு அவர்களை ஆசீர்வதித்தாள்.

"விஹாரி, நீயும் என்னெதிரில் மஹேந்திரனை மன்னிக்கவேண்டும்" என்றாள் ராஜலக்ஷ்மி.

நண்பர்கள் இருவரும் ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டனர். "மஹேன், சிறுவயதிலிருந்து ஏற்பட்ட உங்கள் இருவருடைய நட்பும் என்றும் மாறாதிருக்க வேண்டுமென்பதுதான் என் பிரார்த்தனை. விஹாரியைப்

போன்ற நண்பனைப் பெறும் பாக்கியத்தைவிடப் பெரிது வேறொன்றுமில்லை" என்றாள் ராஜலக்ஷ்மி.

இவ்வளவு பேசியதனாலேயே அவளுக்கு மூச்சுத் திணற ஆரம்பித்துவிட்டது. விஹாரி விரைந்து சென்று ஒரு மருந்தை எடுத்து வந்தான். ராஜலக்ஷ்மி அவனைத் தடுத்து, "எனக்கு இனி மருந்து எதற்கடா அப்பா? சகல துக்கத்திற்கும் நிவாரணியான மருந்தை எனக்கு அளிக்க எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன். நீங்கள் போய்ச் சற்று இளைப்பாறுங்கள்" என்றாள்.

அன்று இரவு விஹாரியும் மஹேந்திரனும் ராஜலக்ஷ்மியின் கட்டிலுக்கு எதிரிலேயே சாப்பிட உட்கார்ந்தனர். ராஜலக்ஷ்மி ஆசாவைப் பரிமாறச் சொன்னாள்.

மஹேந்திரனுக்கு அன்று உணர்ச்சி மேலீட்டினால் சாப்பாடு இறங்கவேயில்லை. அடிக்கடி ராஜலக்ஷ்மி, "மஹேன், நீ ஏன் ஒன்றுமே சாப்பிடவில்லை? நன்றாய்ச் சாப்பிடு; நானும் பார்க்கிறேன்" என்று வற்புறுத்திச் சொன்னாள்.

"உங்களுக்குத் தெரியாதா அம்மா இவன் சங்கதி? எப்பொழுதுமே சாப்பிடவே முடியாத பெரிய வயிற்று வலிக்காரன். இந்தக் கோசுமலி என்ன நன்றாயிருக்கிறது! எங்கே எனக்கு இன்னும் கொஞ்சம் போடுங்கள்" என்றான் விஹாரி.

ராஜலக்ஷ்மி சந்தோஷத்தினால் பூரித்தாள். "உனக்குக் கோசுமலி பிடிக்குமென்று எனக்குத் தெரியும். ஆசா, அவனுக்கு அது போதாது. இன்னும் நிறையப் போடு" என்றாள்.

விஹாரி: அம்மா, உங்கள் நாட்டுப்பெண் மிகச் செட்டு. கையில் தாராளமேயில்லை.

ராஜலக்ஷ்மி சிரித்துக்கொண்டே, "பார்த்தாயா ஆசா! நீ பரிமாறுவதைச் சாப்பிட்டுக்கொண்டே, உன்னைக் குறை கூறுவதை?" என்று உரைத்தாள்.

ஆசா விஹாரியின் இலையில் நிறையக் கோசுமலி கொண்டுவந்து பரிமாறினாள்.

விஹாரி: அடாடா! கோசுமலியாலேயே இன்று என் வயிற்றை நிரப்பிவிட்டு, மற்ற நல்ல பதார்த்தங்களையெல்லாம் மஹேந்திரனுக்குப் பரிமாறிவிடவா இந்த யுக்தி!

இப்படிச் சிரிப்பும் விளையாட்டுமாய் நண்பர்கள் இருவரும் போஜனம் செய்து எழுந்தனர். ராஜலக்ஷ்மி இதைப் பார்த்துப் பரம திருப்தி அடைந்தாள். அவள் ஆசாவையும் போய்ச் சாப்பிட்டு வருமாறு சொன்னாள்.

மஹேந்திரனையும் போய்ப் படுத்துக்கொள்ளச் சொன்னாள். அவனுக்கு இரவு முழுதும் ராஜலக்ஷ்மியின் அருகிலிருந்து சுசுருஷை செய்யவேண்டுமென்று இருந்தது. ராஜலக்ஷ்மி அதற்கு ஒப்பவில்லை. "நீ மிகவும் களைத்திருப்பாய். போய்ப் படுத்துக்கொள்" எனச் சொல்லிவிட்டாள்.

ஆசா போஜனம் முடித்துக்கொண்டு ராஜலக்ஷ்மியின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து விசிறலானாள். ராஜலக்ஷ்மி அவளை நோக்கி, "மஹேந்திரன் அறையில் போய் அவனுக்குப் படுக்கை முதலியவையெல்லாம் சரியாய்ப் போட்டிருக்கின்றனவா என்று பார். அவன் அங்கே தனியாயிருப்பான்; நீ போ" என்று சொன்னாள்.

ஆசாவை வெட்கம் சூழ்ந்தது. ராஜலக்ஷ்மியின் பேச்சைத் தட்ட முடியாது எப்படியோ அறையை விட்டு வெளியே சென்றாள்.

அன்னபூரணியும் விஹாரியுந்தான் ராஜலக்ஷ்மியின் பக்கத்தில் இருந்தனர். அப்பொழுது ராஜலக்ஷ்மி, "விஹாரி, உன்னை ஒன்று கேட்கவேண்டும். விநோதினியைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா? இப்பொழுது அவள் எங்கேயிருக்கிறாள்?" எனக் கேட்டாள்.

விஹாரி: அவள் கல்கத்தாவிலேயே இருக்கிறாள்.

ராஜலக்ஷ்மி அவனை உற்று நோக்கினாள். அவன் அவளது நோக்கத்தை அறிந்துகொண்டு, "அம்மா! நீங்கள் அவள் இங்கே இருப்பதைப்பற்றிச் சற்றும் கவலை கொள்ளவேண்டாம்" என்றான்.

ராஜலக்ஷ்மி: அவள் என்னை மிகவும் துக்கத்திற்குள்ளாக்கினாள். ஆனாலும் அவள்பேரில் எனக்குப் பிரியம் இல்லாமலில்லை.

விஹாரி: அம்மா! அவளும் உங்கள் பேரில் அப்படியே இருக்கிறாள்.

ராஜலக்ஷ்மி: எனக்குத் தெரியும். பிரியமில்லாவிடின் அவள் செய்தது போன்ற பணிவிடை செய்யத்தான் முடியுமா? மனிதர்களென்றால் எல்லாரிடமும் நல்லது கெட்டது இவ்விரண்டு குணங்களும் சேர்ந்தே இருக்கின்றன.

விஹாரி: உங்களுக்குப் பணிவிடை செய்ய அவள் இப்பொழுதும் காத்துக்கொண்டிருக்கிறாள்.

ராஜலக்ஷ்மி பெருமூச்சுவிட்டு, "மஹேந்திரன் படுக்கப்போய்விட்டான். இச்சமயம் அவளை இங்கே அழைத்து வருவதில் கெடுதியொன்றுமில்லை" என்றாள்.

விஹாரி: அம்மா, அவள் இங்கேயே வெளியறையில் காலையிலிருந்து உட்கார்ந்திருக்கிறாள். அன்ன ஆஹார மின்றிக் கிடக்கிறாள். நீங்கள் கூப்பிட்டு அவளுக்கு மன்னிப்பளித்தாலொழிய அவள் தண்ணீரும் குடிப்பதில்லை யெனப் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறாள்.

ராஜலக்ஷ்மி வருத்தத்துடன், "பாவம்! ஆஹார மின்றியா உட்கார்ந்திருக்கிறாள்? உள்ளே கூப்பிடு அப்பா அவளை" என்று உரைத்தாள்.

விநோதினி உள்ளே நுழைந்ததுமே ராஜலக்ஷ்மி, "சீ! இதென்ன? இப்படிச் செய்யலாமா? நாள் முழுவதும் பட்டினியாயிருப்பதாவது! போய் முதலில் சாப்பிட்டு வா, பிறகு பேசலாம்" என்றாள்.

விநோதினி ராஜலக்ஷ்மியின் காலில் விழுந்து நமஸ்கரித்து அவள் பாதங்களைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு, "இந்தப் பாவியை நீங்கள் மன்னித்தாலொழியத் தண்ணீரும் அருந்தப்போவதில்லை" என்றாள்.

ராஜலக்ஷ்மி, "விநோதினி, மன்னித்தேன். எழுந்திரு. எனக்கு இப்பொழுது யார்பேரிலும் சிறிதும் கோபமில்லை. (விநோதினியின் கையைப் பிடித்துக்கொண்டு) அம்மா! உன்னால் இனிப் பிறருக்கு நன்மையே ஏற்படட்டும்; நீயும் நன்றாயிரு" என்று ஆசீர்வதித்தாள்.

விநோ: உங்களுடைய இந்த ஆசீர்வாதம் பொய்யாகாதென நான் ஆணையிட்டுச் சொல்கிறேன், அம்மா! என்னால் இந்தக் குடும்பத்திற்கு இனி ஒரு கெடுதியும் நேராது.

விநோதினி அன்னபூரணியையும் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்துப் பிறகு போஜனத்திற்குச் சென்

ளுள். சாப்பிட்டு வந்ததும் ராஜலக்ஷ்மி அவளை நோக்கி, "போய் வருகிறாயா?" என்றாள்.

விநோ: அம்மா! நான் இங்கிருந்து உங்களுக்குப் பணிவிடை செய்கிறேன். இனி என்னால் ஓர் அனர்த்தமும் நேராதென்று நான் ஈச்வரசாக்ஷியாகச் சொல்லுகிறேன்.

ராஜலக்ஷ்மி விஹாரியைப் பார்த்தாள். அவன் சற்று யோசித்து, "அம்மா! அவள் இருக்கட்டுமே. அதனால் ஒரு கெடுதியும் நேராது" என்றான். விஹாரி, விநோதினி, அன்னபூரணி மூவரும் ராஜலக்ஷ்மியின் அறையிலிருந்து அவளுக்கு வேண்டிய சுசுருஷை செய்து வந்தனர்.

இரவுமுழுவதும் ஆசாவினால் மாமியாரின் கிட்ட வரமுடியவில்லை. பொழுது விடியுமுன்பே அவள் எழுந்து குளித்து ராஜலக்ஷ்மியின் அறைக்குள் வந்தாள். அங்கு விநோதினியைக் கண்டு திடுக்கிட்டுப் பிரமித்தாள். தான் காண்பது கனவோ நனவோ என்று யோசித்தாள்.

இரவு முழுதும் விழித்திருந்த விஹாரிக்காக விநோதினி தேத்தண்ணீர் தயார் செய்துகொண்டு இருந்தாள். ஆசாவைக் கண்டதும் அவள் எழுந்து அவளருகில் வந்து, "சகல அபராதமும் செய்த நான் இன்று உன்னை அண்டி வந்திருக்கிறேன். இதை விட்டுப் போகுமாறு என்னை வேறு யாரும் சொல்லவில்லை. ஆனால் நீ என்னைப் போவெனச் சொன்னால் நான் உடனே சென்று விடுகிறேன்" என்றாள்.

ஆசாவுக்கு என்ன சொல்வதெனத் தெரியவில்லை. அப்படியே அசைவற்று நின்றாள். விநோதினி மேலும், "நான் செய்த அபராதத்தை நீ என்றும் மன்னிக்க முடியாது. ஆனால் இப்பொழுது என்னைக் கண்டு அஞ்ச

வேண்டியதில்லை. அம்மா நோயுற்றிருக்கும்வரையில் அவ ளுக்குப் பணிவிடைசெய்கிறேன். பிறகு உடனே இதை விட்டுச் சென்று விடுகிறேன்" என்று கூறினாள்.

முன்தினம் ராஜலக்ஷ்மி தன் மகனையும் மருமகளையும் தன் பக்கத்திலிருத்திக் கையைப் பிடித்துச் சேர்த்துவைத் ததும் ஆசா நடந்த சம்பவங்களையெல்லாம் ஒருவாறு மறந்து மனச்சாந்தி யடைந்தாள். இன்று எதிரிலேயே விநோதினியைக் கண்டதும் பழைய மனோவேதனை புத்து யிர் பெற்று எழுந்தது. இதே விநோதினியிடம் மோஹங் கொண்டுதான் தன் கணவன் வீட்டைவிட்டுச் சென்றான். இன்னும் சிறிது நேரத்தில் அவன் விழித்துக்கொள்வான். விநோதினியைத் தன் எதிரில் காண அவன் மனம் எப்படி மாறுமோ? அவன் இன்னமும் அவளை விரும்பினால்? இவ் வாறாக ஆசாவின் உள்ளத்தில் எண்ணங்கள் அலைபோல் எழுந்தன. நேற்றுத்தான் அவள் தனது துக்கத்திற் கெல்லாம் முடிவுகாலம் வந்துவிட்டதாகக் கருதி அமைதி யுற்றாள். இன்றோ துக்கமே திரண்டு உருவெடுத்து வந்தது போன்று விநோதினி தன் எதிரிலே நிற்பதைக் காண உள்ளம் துடித்தாள் ஆசா. தனது துக்கத்தை அடக்கிக் கொண்டு அன்னபூரணியைப் பார்த்து, "சித்தி, நீ இரவு முழுதும் தூங்கவில்லைபோல் இருக்கிறது. சற்றுப் போய்ப் படுத்துக்கொள்ளேன்" என்றாள்.

ஆசாவின் குரலிலிருந்தே அன்னபூரணி அவள் மனோ வேதனையை ஊகித்தறிந்து கொண்டாள். அவளை அங் கிருந்து வேறு அறைக்குள் அழைத்துச்சென்று, "ஆசா, என் கண்ணே! நீ நடந்தவற்றையெல்லாம் மறந்தா லொழிய ஒருகாலும் சுகமடையமுடியாது" என அன் புடன் கூறினாள்.

ஆசா: சித்தி, நானும் மறக்கவே விரும்புகிறேன். ஆனால் முடியவில்லையே!

அன்ன: உண்மைதான். எதையும் சொல்லிவிடுவது சுலபம்; அனுஷ்டிப்பதுதான் கடினம். ஒரேயடியாய் மறப்பது முடியாதுதான். ஆனால் உன் மனத்தாங்கலை நீ சற்றும் வெளிக்குக் காட்டிக்கொள்ளக்கூடாது. ஒன்றுமே நடக்காததுபோல் நீ விநோதினியுடன் சகஜமாய் நடந்து கொள்ளவேண்டும். இதைவிடக் கஷ்டமான வேறொன்றையும் நீ சகித்துக்கொள்ளவேண்டும். குழந்தாய், ஒரே வீட்டில் இருப்பதால் விநோதினியும் மஹேந்திரனும் சந்திக்காமல் இருப்பதற்கில்லை. அச்சமயம் உன் மனம் என்ன பாடுபடுமென்பதை நான் அறிவேன். உனது உள்ளம் வெடித்து விடும்போலிருந்தாலும் நீ அவர்களை அச்சமயம் கவனியாது பொறுத்திருக்கவேண்டும். உன் மனத்தில் யாதொரு விகற்பமும் இல்லாததுபோல் நீ நடந்துகொள்ளவேண்டும். இவையே எனது கட்டளையென நினைத்து, சிறிதும் பிசகாது நடந்துகொள்ளவேண்டுமென்று விரும்புகிறேன். ஆசா, நான் காசிக்குச் சென்ற பிறகும் நீ இதன்படியே ஒழுகினாயானால் உனக்கு நிச்சயம் சுகமேற்படும்" என்று கூறி முடித்தாள்.

அது முதல் ஆசா விநோதினியுடன் வெகு சகஜமாய்ப் பேசலானாள். இதைக் காண விநோதினிக்கே ஆச்சரியமாயிருந்தது. அவர்களிருவரும் பேசிக்கொண்டிருக்கும்போதே மஹேந்திரன் ராஜலக்ஷ்மியைப் பார்ப்பதற்காக அங்கு வந்தான். ஆசாவின் இருதயம் வேகமாய் அடித்துக் கொண்டது. அவள் உடனே சமாளித்துக் கொண்டு மஹேந்திரனிடம் சகஜமாய், "இவ்வளவு சீக்கிரம் எழுந்து விட்டீர்களா? நீங்கள் களைப்புத் தீரத் தூங்க

வேண்டுமென்றே பொழுது விடிவது தெரியாமல் இருக்கட்டுமென்று உங்கள் அறையில் ஜன்னற்கதவுகளை யெல்லாங்கூட மூடிவந்தேன்" என்றாள்.

விநோதினியின் எதிரில் ஆசா இவ்வளவு சாதாரணமாகவும் சகஜமாகவும் தன்னுடன் பேசியதும் அவனுக்கு மனத்திலிருந்த பெரிய பாரம் நீங்கியது போன்று இருந்தது. மனம் புளகித்தான். "அம்மாவின் உடம்பு எப்படியிருக்கிறதென்று பார்க்கவே வந்தேன். தூங்குகிறாளா?" என்றான் அவன்.

ஆசா: ஆம். தூங்கிக்கொண்டிருக்கிறார். நீங்கள் கிட்டப் போகவேண்டாம். மற்றத் தினங்களைக் காட்டிலும் நேற்றிரவு அம்மா அயர்ந்து தூங்கியதாக விஹாரிபாபு சொன்னார்.

மஹேந்திரன் சற்றுக் கவலை நீங்கியவனாய், "பெரியம்மா எங்கே?" என்று கேட்டான். ஆசா அன்னபூரணியின் அறையைக் காண்பித்தாள்.

ஆசாவின் உறுதியையும் பொறுமையையும் கண்டு விநோதினியும் அதிசயித்தாள். அன்னபூரணி அதிகாலையில் எழுந்து ஸ்நானம் செய்து பூஜைக்கு உட்கார வந்தாள். அச்சமயம் மஹேந்திரன் அங்கு வந்து அவளை நமஸ்கரித்து, "பெரியம்மா, நான் பாபி. எனது மாசுபடிந்த இருதயத்தைக் கொண்டு உன் எதிரில் வரவே எனக்கு வெட்கமாயிருக்கிறது" என்று தீனக் குரலில் கூறினான்.

அன்ன: சீ, இதென்ன பேச்சு! குழந்தை விளையாடி உடம்பெல்லாம் சேற்றை வாரிப் பூசிக்கொண்டாலும் அப்படியே தாயின் மடியில் வந்து விழப் பின் வாங்கு

வதில்லை. மஹேறன், தவறு இழைத்தது ஒரு நன்மைக்கே. நீ உன் நற்குணத்தைப் பற்றி மிகவும் இறுமாந்திருந்தாய். இப்பொழுது இத் தவற்றினுல் அவ்விறுமாப்பு நீங்கி நன்மையே ஏற்பட்டது.

மஹேறந்: பெரியம்மா, நீ என்னை விட்டுச் சென்றதனுல்தான் இத்துர்க்கதிக்கு ஆளானேன்.

அன்ன: நான் சென்றதனுல்தான் உனக்கும் புத்தியேற்பட்டு நீ சீர்திருந்த ஹேதுவாயிற்று. இனி நான் இருக்கவேண்டிய அவசியமில்லை.

அச்சமயம், "பெரியம்மா, பூஜை செய்துகொண்டிருக்கிருயா?" என்று விஹாரியின் குரல் கேட்டது. "இல்லை உள்ளே வா, அப்பா" என்ருள் அன்னபூரணி.

விஹாரி உள்ளே மஹேறந்திரன் இருப்பதைக் கண்டு அவன் இவ்வளவு அதிகாலையில் எழுந்துவிட்டதைப் பற்றி ஆச்சரியம் கொண்டு, "மஹேறன், உனது ஆயுளிலேயே நீ சூரியோதயத்தைக் காண்பது இதுதான் முதல் தடவையாயிருக்கும்" என்ருன்.

மஹேறந்திரன், "ஆமாம், விஹாரி. ஆயுளில் முதன் முறை சூர்யோதயத்தைக் காண்பது இன்றுதான்! பெரியம்மாவிடம் ஏதோ கலந்தாலோசிக்க வந்திருக்கிருய் போல் இருக்கிறது. இதோ நான் வெளியில் செல்கிறேன்" என்று எழுந்தான்.

விஹாரி சிரித்துக்கொண்டே, "மஹேறன், நீயும் இந்த ஆலோசனை சபையில் ஒரு மந்திரிதான். இதுவரை நான் உனக்குத் தெரியாதவாறு எதுவும் செய்ததில்லை. இனியும் ஒளிக்கப் போவதில்லை. விநோதினியை விவாகம் செய்துகொள்ளும் விஷயமாய்ப் பெரியம்மாவுடன் ஆலோசிக்கவே வந்தேன்" எனக் கூறினுன்.

அன்னபூரணி ஆச்சரியத்துடன், "இதென்ன வார்த்தை? விஹாரி!" என்றாள்.

மஹேந்திரனும் சற்றுச் சங்கோசம் நீங்கி, "விஹாரி, இவ்விவாகத்திற்கு அவசியமொன்றும் இல்லை" என்றான்.

அன்ன: இதற்கு விநோதினியும் உடன்பட்டிருக்கிறாளா?

விஹாரி: இல்லவேயில்லை!

மஹேந்: பெரியம்மா, விநோதினிக்கு இவனிடம் பூர்ணபக்தி சிரத்தையுண்டென்று நான் நன்கு அறிவேன். அப்படியிருக்க அவள் இதற்கு உடன்படாமலென்ன?

விஹாரி: மஹேன், நான் விநோதினியை விவாகம் செய்து கொள்ளுமாறு கேட்டேன். ஆனால் அவள் வெட்கத்துடன் அதை மறுத்துவிட்டாள்.

பிறகு மஹேந்திரன் வாயைத் திறக்கவில்லை.

---

## ஐம்பத்துமூன்றாம் அத்தியாயம்

இப்படியும் அப்படியுமாக ராஜலக்ஷ்மி இரண்டு மூன்று தினங்களைக் கழித்தாள். ஒரு நாட்காலை அவள் முகம் மலர்ச்சி பெற்றிருந்தது. நோயின் கொடுமையெல்லாம் நீங்கிவிட்டது போன்றிருந்தது. அன்று அவள் மஹேந்திரனைக் கூப்பிட்டுத் தன் பக்கத்தில் இருத்தி, "மஹேன், என் ஜீவிய காலம் ஒடுங்கிவிட்டது. ஆனால் நான் யாதொரு துக்கமுமின்றிச் சந்தோஷமாய் மரிக்கிறேன். நீ சிறு குழந்தையாயிருந்தபோது உன்னைப் பார்த்தே நான் பூரித்துப் புளகிப்பேன். அதே ஆனந்தத்தால் இன்று எனது உள்ளம் நிறைந்திருக்கிறது. நீ எனது அருமைச்

செல்வம். உன்னைப்பற்றிய சந்தோஷ நினைவுகளுடன், நிச்சிந்தையாக நான் பிராணனை விடுவேன்" என்று கூறும் போதே மஹேந்திரன் துக்கம் தாளாது அழலானான். ராஜலக்ஷ்மி அவன் கண்ணீரைத் துடைத்து அவனை அன்புடன் மெதுவாய் வருடிக்கொண்டே, "அழாதே, மஹேன்! லக்ஷ்மியையொத்த கண்ணன மனைவியை உன்னிடம் ஒப்படைத்துச் செல்கிறேன். அவளிடம் எனது பெட்டித் திறவுகோலைக் கொடு. குடும்பத்திற்கு வேண்டிய சகலமும் சேர்த்து வைத்திருக்கிறேன். எதற்கும் நீங்கள் கவலைப்படவேண்டியதில்லை. உன்னிடம், மஹேன், இன்னும் ஒரு விஷயம் சொல்லுகிறேன். நான் இறக்கும் வரை அதை யாருக்கும் தெரிவியாதே. எனது பெட்டிக்குள் கரன்ஸி நோட்டுக்களாக இரண்டாயிரத்திற்கு இருக்கின்றன. அவற்றை விநோதினிக்கு அளிக்கிறேன். பாவம்! அவள் விதவை. தனியாயிருப்பவள். இந்தப் பணத்தைக்கொண்டு அவள் கஷ்டமின்றிக் காலந்தள்ளலாம். ஆனல், மஹேன், அவளை மாத்திரம் நீ இங்கே வீட்டில் வைத்துக்கொள்ளக்கூடாதெனக் கேட்டுக்கொள்கிறேன்" என்று உரைத்தாள்.

பிறகு விஹாரியைக் கூப்பிட்டு, "விஹாரி, ஏழைகளின் உதவிக்காக நீ ஓர் ஆரோக்கிய ஆச்ரமம் கட்டிவருவதாக மஹேந்திரன் என்னிடம் சொன்னான். பகவான் உனக்குத் தீர்க்காயுளும் அளித்து உனது பரோபகார சிந்தையை விருத்தியாக்கட்டும். எனது விவாகத்தின் போது என் தந்தையால் எனக்கு அளிக்கப்பட்ட மஞ்சக் காணி கிராமமொன்று இருக்கிறது. அதை உனக்கு அளித்துப் போகிறேன். அதை நீ உனது ஸத்காரியத்திற்காக உபயோகித்துக்கொள்" என்று கூறினள்.

ராஜலக்ஷ்மியின் உயிர் அநாயாசமாய் நீங்கியது.

அவளது மரணக்கிரியையெல்லாம் முடிந்தபிறகு ஒரு நாள் மஹேந், "விஹாரி, எனக்கும் வைத்தியம் செய்யத் தெரியும். நான் டாக்டராயிருப்பதால் நீ ஆரம்பித்திருக்கும் சிகித்ஸாசிரமத்தில் என்னையும் உதவிக்குச் சேர்த்துக் கொள். ஆசாவும் எல்லாவிஷயங்களையும் மிகத் திறம்பட நடத்தும் சாமர்த்தியம் பெற்றுவிட்டாள். அவளும் நமக்கு மிகவும் உதவியாயிருப்பாளென்பதில் சந்தேகமில்லை" என்றான்.

விஹாரி: நண்பா, இதைப்பற்றி நன்றாக யோசித்தாயா? க்ஷணநேர வைராக்கியத்தில் இப்பெரிய பொறுப்பை ஏற்கத் தீர்மானித்துவிடாதே.

மஹேந்: விஹாரி, எனது போக்கை நீயுந்தான் நன்றாய் அறிவாய். சோம்பேறியாய்ப் பொழுதைப் போக்காது ஏதாவதொரு நல்ல காரியத்தில் என் மனத்தை ஈடுபடுத்தாவிடின், கடைசியில் என் மனமே என்னைப் படுகுழியில் ஆழ்த்திவிடும். ஆகையால் நீ என்னை உனது வேலையில் பங்கெடுத்துக்கொள்ள அனுமதித்தே தீரவேண்டும்.

கடைசியில் அப்படியே செய்வதெனை இருவரும் நிச்சயித்தனர்.

அன்னபூரணியும் விஹாரியும் உட்கார்ந்து சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். அன்னபூரணி காசிக்குச் செல்லும் தினம் நெருங்கிவிட்டது. இச்சமயம் விநோதினியும் அங்கு வந்து அவர்கள் சம்பாஷணையில் கலந்துகொண்டாள். ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசிவிட்டு ஏதோ வேலையிருக்கிறதெனச் சொல்லி அன்னபூரணி எழுந்து போய்விட்டாள்.

அப்பொழுது விநோதினி விஹாரியைப் பார்த்து, "இனி நான் என்ன செய்யவேண்டுமென்பதை நீங்கள் தான் தெரிவிக்கவேண்டும்" என்றாள்.

விஹாரி: நீயே சொல், உனக்கு என்ன செய்ய விருப்பமென்று.

விநோ: உங்களுடைய சிகித்ஸாசிரமத்தில் ஏதேனுமொரு சிறு ஊழியம் புரிகிறேன். வேறொன்றுமில்லாவிட்டாலும் சமையல் வேலையையாவது நான் ஏற்றுக்கொள்கிறேன்.

விஹாரி: நான் நெடுநேரம் யோசித்தேன். வாழ்க்கையில் பலவிதக் கஷ்டங்களால் நாம் பிணைப்புற்றிருக்கிறோம். அவற்றிலிருந்து முதலில் விடுவித்துக் கொள்ளவேண்டும். மனம் எதை அடைய விரும்புகிறதோ அவ் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ளத் துணிவு இல்லை. மன அமைதியின்றி வாழ்க்கை நடைபெறுவது அசாத்தியம். எல்லாம் நான் நினைப்பதுபோல் நடக்குமானால் உன்னை அடைந்தாலன்றி என் வாழ்க்கை ஒருநாளும் பூர்ணமாகாது. ஆனால் இப்பொழுது நான் உன்னைத் தியாகம் செய்துதான் ஆகவேண்டும். நாம் தனித்திருப்பதுதான் நலம். சுகத்தை நாடுவது வீண். சிதறிய வாழ்க்கையை ஒன்று சேர்ப்பதுதான் இப்பொழுது நமது கடமை.

இதற்குள் அன்னபூரணி மீண்டும் அங்கு வரவே விநோதினி அவளிடம், "அம்மா, நீங்களே இச்சமயம் பாவியாகிய எனக்கு உங்களுடைய சரண கமலங்களில் இடமளித்து ஏற்றுக் கொள்ள வேண்டும். என்னைப் புறக்கணிக்கலாகாது" எனக் கேட்டுப் பிரார்த்தித்தாள்.

அன்ன: குழந்தாய், அப்படியே ஆகட்டும். நீயும் என்னோடுகூடவே காசிக்கு வா.

விநோதினி காசிக்குச் செல்லுமுன் விஹாரி அவளைத் தனிமையில் சந்தித்து, "விநோதினி, உனது ஞாபகச் சின்னமாக வைத்திருக்க எனக்கு ஏதாவதொன்று உன்னிடமிருந்து வேண்டும்" என்று கேட்டான்.

விநோதினி: உங்களுக்கு அளிக்கக்கூடியதாய் என்னிடம் என்ன இருக்கிறது?

விஹாரி ஸங்கோசத்துடன், "ஆங்கிலேயர்கள் தங்களுக்குப் பிரியமானவர்களை விட்டுப் பிரியும்போது ஞாபகார்த்தமாக அவர்களின் கூந்தலில் சிறிது கத்தரித்துக் கொடுப்பதுண்டு. அதேபோல் நீயும்—" என்று சொல்வதற்குள் விநோதினி குறுக்கிட்டு, "சீச்சீ! என்ன ஆபாஸம்! எனது கூந்தலை வைத்துக்கொண்டு என்ன செய்வீர்கள்? அசங்கியமான எதற்கும் உதவாத இதையா நான் உங்களுக்கு அளிப்பது? துர்ப்பாக்கியம் பிடித்த நான் உங்களுக்கு ஒரு விதத்திலும் பயனில்லாது போனேன். நான் கொடுக்கும் வஸ்துவாவது உங்களுக்குப் பயன்படவேண்டும். கொடுத்தால் மறுக்காது வாங்கிக் கொள்வீர்களன்றோ?

விஹாரி: வாங்கிக்கொள்கிறேன்.

உடனே விநோதினி தனது புடைவைத் தலைப்பில் முடிந்துவைத்திருந்த ஆயிரம் ரூபாய் நோட்டுக்கள் இரண்டை விஹாரியின் கையில் அளித்தாள்.

விஹாரி விநோதினியையே பார்த்து ஸ்தம்பித்து நின்றான். சிறிதுநேரம் அவனுக்குப் பேச நாவெழ

யில்லை. பிறகு, "நான் எதை உனக்கு அளிப்பது?" என்றான்.

விநோதினி, "உங்களுடைய ஞாபகார்த்தமாக என்னிடம் ஒன்று வெகுதினங்களாகவே இருக்கிறது. அதை எனது ஆபரணமாய் அணிந்திருக்கிறேன். ஒருவராலும் அதை அபகரிக்க முடியாது. எனக்கு வேறெதுவும் தேவையில்லை" என்று சொல்லித் தனது கையில் முன்னொரு நாள் பட்ட காயவடுவைக் காண்பித்தாள்.

* * *

விஹாரி மிகவும் வியப்புற்றான். அதற்குள் அவள், "இது உங்களுக்குத் தெரியாது. ஆனால் உங்களால் ஏற்பட்டதுதான். நீங்கள் செய்ததும் சரியே! நீங்கள் இப்பொழுது விரும்பினாலும் என்னிடமிருந்து பிடுங்கிக் கொள்ள முடியாது!" என்று உரைத்தாள்.

ஆசா சித்தியின் சொற்படி வெளிக்கு விநோதினியிடம் எவ்வளவோ சகஜமாய்ப் பழகினாலும் அவள் மனம் உள்ளூற உறுத்திக்கொண்டேயிருந்தது. விநோதினியுடன் முன்போல் மனம் விட்டுப் பேசவோ சிரிக்கவோ அவளால் முடியவில்லை. இன்று அன்னபூரணி விடைபெற்று ஊருக்குப் போகும் சமயம் ஆசா பிரிவாற்றாது மனம் கரைந்து அழுதாள். சித்தியின் கூடவே செல்லும் விநோதினியின்மீதும் கருணை கொண்டாள். அவள் மீதிருந்த வருத்தமெல்லாம் மாயமாய் மறைந்தன. இனி விநோதினி திரும்பி வரப்போவதில்லை என்னும் எண்ணமே ஆசாவை யாவற்றையும் மறக்கச் செய்து அவள்பால் மனமிரங்கச் செய்தது.

ஆசா அவளுக்காகக் கண்ணீருகுத்தாள். பால்ய விதந்துவாகிய விநோதினிக்கு ஏற்பட்ட துர்த்தசை தன் ஜன்மசத்துருவிற்குக் கூட ஏற்படலாகாதென நினைத்து மனம் பதைத்தாள். ஒரு சமயம் விநோதினியைப் பிராண ஸ்நேகிதியாகக் கருதி நட்புரிமை கொண்டிருந்தாள். அந்நட்பு மீண்டும் உள்ளத்தில் உதயமாயிற்று. ஆசா, விநோதினியை நோக்கி அன்பும் தயையும் துக்கமும் கலந்த குரலில், "விநோதினி, ஊருக்குப் போகிறாயா?" என்றாள்.

விநோதினி ஆசாவின் மோவாயைப் பிடித்துக் கொண்டு, "ஆமாம், சகோதரி. புறப்படும் சமயம் நெருங்கி விட்டது. ஒரு சமயம் நீ என்னிடம் மிகவும் பிரியம் வைத்திருந்தாய். அதில் சிறிதாவது இப்பொழுது என்மீது இருக்குமானால் அதுவே எனக்குப் போதுமானது" என்றாள்.

"என்னை மன்னிக்கவேணும்" என்று மஹேந்திரன் கண்களில் நீர் ததும்ப அவளைக் கேட்டுக்கொண்டான்.

"மஹேன், நீயும் என்னை மன்னித்துவிடு. உங்கள் யாவருக்கும் கடவுள் சதா சுகத்தை அளிக்கட்டும்" என்று கூறிச் சென்றாள் விநோதினி.

# குமுதினி

## ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர் எழுதியது

ஸ்ரீமதி ரங்கநாயகியம்மாள்

இனிய எளிய தமிழ் நடையில் மொழிபெயர்த்தது

நல்ல கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது.

இந்நூலைப் பற்றிய முக்கிய அபிப்பிராயங்கள்.

தினகரன்—மானிடவாழ்க்கையில் ஏற்படும் பல துன்பங்களை உணர்ச்சிததும்பும் முறையில் நாவலாசிரியர் சித்திரித்துக் காட்டியிருப்பது போற்றத்தக்கது.

தனவணிகன்—எளிய தமிழில் இனிய நடையில் டாகுர் அவர்களின் கதையை விளங்க வைத்த பெருமை அம்மையாரைச் சார்ந்தது.

தாருல் இஸ்லாம்—முதற்பக்கம் முதல் கடைசிப்பக்கம் வரையில் " அடுத்தது என்ன?" என்று வாசகர்கள் கேட்கக்கூடிய உணர்ச்சியையும் உற்சாகத்தையும் பெருக்கிக்கொண்டே போகும் முறையிலே, இக்கதையின் போக்கு அமைக்கப்பட்டிருக்கிறது.

விலை ரூ. 1—8—0

கலைமகள் சந்தாதார்க்கு ரூ. 1—2—0

---

:: மானேஜர், கலைமகள், மயிலாப்பூர் :

# முருகன் ஓர் உழவன்

மேல்நாட்டு அறிவாளிகள் புகழ்ந்து பேசும்
நாவல்

ஸ்ரீமான் கே. எஸ். வேங்கடரமணியவர்கள்
எழுதிய கிராமவாழ்க்கைச் சித்திரமாகிய
அரிய கதையின் மொழிபெயர்ப்பு

மிக எளிய நடையில்

ஸ்ரீமதி கிருஷ்ணகுமாரி
மொழிபெயர்த்தது

விலை ரூ. 1—8—0

**கலைமகள் சந்தாதாரர்க்கு மாத்திரம்**
**ரூ. 1-2-0**

---

# ஹேமலதா

## இரு சகோதரிகள் இயற்றிய

உணர்ச்சி ததும்பும் நவீனம்

விலை ரூ. 1—4—0

**கலைமகள் சந்தாதாரர்க்கு மாத்திரம்**
**ரூ. 1-0-0**

---

**: மானேஜர், கலைமகள், மயிலாப்பூர் :**

மதராஸ் லா ஜர்னல் அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை.